கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள்  விருந்து



தி.வ.ஆ.-2054 தை- 10 பொ.ஆ.-2023 சனவரி-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்



குறளைக் கற்போம் குழந்தைகளே
குன்றெனப் புகழைக் குவிப்போமே
பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்
நெஞ்சில் நன்னெறி விதைப்போமே
சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்
பெருமைகள் பலவும் சேர்ப்போமே
வள்ளுவர் தந்த வான்மறையால்
வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே
நாடும் வீடும் நலம் பெறவே
நாளும் குறளைக் கற்போமே
கசடறக் கற்றுத் தெளிவோமே
கற்றபின் அதன்வழி நிற்போமே
வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே
வல்லமை பெற்றிட உழைப்போமே







சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



வணக்கம்.வாருங்கள்.



## தேர்வில் வாகை சூட வாழ்த்துகிறோம்

தேர்வு எழுதச் செல்லும் பிள்ளைகளே!
ஆர்வம் படிப்பில் இருப்பினும் சிறிது
அக்கறை கொள்வீர் உடல்நலனில்!
வேளைக்கு உணவை ஏற்பது கடமை!
விழித்துப் படிக்கும் நேரம் மிகுந்தால்
சோர்வும் நலிவும் நலம் கெடுக்கும்!
தூக்கமும் ஓய்வும் முறையாய் இருந்தால்
அறிவில் தெளிவும் நினைவாற்றலுமே
நிறைவாய்ப் படித்திட வழிவகுக்கும்!
அச்சம் என்றும் எதற்கும் வேண்டாம்!
மதிப்பெண் வருமோ வெற்றி கிட்டுமோ
விரும்பும் படிப்பில் சேர்ந்திடவே
முதன்மைத் தகுதி வாய்த்திடுமோ
தேர்ச்சியில் குறைவு நேரிடும் வேளை
பெற்றோர் நம்மைக் குற்றம் சாற்றும்
துன்பச் சூழல் ஏற்படுமோ எனச்
சற்றும் கலக்கம் கொள்ளாதீர்கள்!
வையகம் பெரிதே வாய்ப்புகள் மிகுதி!
மதிப்பெண் மட்டுமே வாழ்க்கை அல்ல!
மருத்துவம் பொறியியல் மட்டுமா உலகம்!
உங்கள் ஆற்றல் மிகப் பெரிதே!
திண்ணிய எண்ணமும் திடமிகு முயற்சியும்
எண்ணிய வாழ்வை நல்கிடுமே
உலகை வெல்வீர்! உயர்வு கொள்வீர்!

# பள்ளிக் காட்சி

--திருமதி தாமரை சீனிவாசராவ்



கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

பொங்கல் விழா முடித்து ,விடுமுறைகள் நிறைவானதும்,பள்ளிகள் திறக்கப்பட்டன. மாணவர்கள் உற்சாகமாகக் காணப்பட்டனர்.அவரவரும் பொங்கலுக்கு அணிந்திருந்த வண்ண வண்ண உடைகளைப் போட்டுக்கொண்டு மகிழ்ச்சியுடன் காணப்பட்டனர்.கலகலவென வகுப்பு முழுவதும் பேச்சுச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது.அப்போது தமிழாசிரியர் வகுப்பிற்கு வந்தார்.

'வணக்கம் பிள்ளைகளா ,எப்படி இருக்கீங்க அனைவரும்' என்றார்.

மாணவர்கள் அனைவரும் குதூகலமாக 'நன்றாக உள்ளோம் ஐயா' என்று சத்தமாகக் கூறினர்.

ஆசிரியர் 'சரி  எல்லாம் பொங்கல் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடி இருப்பீங்க.. இன்று வகுப்புல இதைப் பற்றி நாம் உரையாடுவோம்' என்றார்.

ஆசிரியர்: சரி முதலில் இந்த பொங்கல் விழா எதற்காக? அமுதா எங்கே..நீ முதல்ல சொல்லு பார்ப்போம்..

அமுதா : வணக்கம் ஐயா,வாழ்வியலுக்கு ஆதாரமாக  உள்ள நீர்,நிலம்,காற்று ,ஆகாயம்,பூமியென்று இயற்கை வழிபாட்டை போற்றி வாழ்ந்த தமிழர்கள்,தை மாதத்தின் முதல் நாளை பொங்கல் விழாவாகக் கொண்டாடுகிறார்கள்.ஆனால் அதற்கு  முதல் நாளன்று,அந்த வருடம் முழுதும் பயன்படுத்திய சில பழைய பொருட்களைக் காலையில் எழுந்து எரித்து போகி கொண்டாடுவார்கள்.வேளாண்மைத் தொழிலை முதன்மையாகக் கொண்டவர்கள் நாம்.அதனால, உழவுத் தொழிலைப் போற்றவும்,புதிதாக விளைந்த

நெல்மணிகளைக் குத்தி,அரிசி எடுத்து,பொங்கலிட்டு வணங்குவார்கள்.வேளாண்மைக்கு உதவுகின்ற கால்நடைகளுக்கு நன்றி சொல்லவும், ஒளி தரும் கதிரவனுக்கு நன்றி சொல்லவும்,மேலும் உறவினர்களோடு மகிழ்ச்சியாக உறவாடி, மகிழ்ச்சியாக சுற்றுலா செல்லவும் பொங்கல் விழாவைக் கொண்டாடுகிறோம் ஐயா.



ஆசிரியர்: அழகாகச் சொன்னாய் அம்மா..

சரி,பொங்கல் எப்படி வைப்பாங்க? குமணன் நீ சொல்லு!

குமணன் : வழக்கமாக வாசலிலே அடுப்பு வைத்து , அதில் புதுப் பானையேற்றி,புதிதாய்க் கிடைத்த அரிசியை இட்டு,பொங்கி வரும் போது ,பொங்கலோ,பொங்கல்னு அனைவரும் சொல்லி ,மகிழ்ச்சியாகப் பொங்கலிடுவோம் ஐயா ..என்றான். கரும்பைக் கடித்து,கடித்து என் வாயே எனக்கு வலிக்கும் ஐயா என்றான் ,சிரித்துக் கொண்டே....

ஆசிரியர்: வாய் வலிச்சாலும் , கரும்ப விடலயே....சரி,சரி உட்காரு என்றார்.

அடுத்த நாள் என்ன செய்வோம் என்று கேட்டார்....

மாணவர்கள்: மாட்டுப் பொங்கல் ஐயா என்று சத்தமாகக் கூறினர்....யார்,யார் வீட்டுல மாடு வளர்க்கறீங்க? என்றார்...மாடு வைத்திருக்கும் மாணவர்கள் அனைவரும் நான்,நீ என்று கையைத் தூக்கினர்.

ஆசிரியர்:நல்லது....பார்வதி அதைப் பற்றி நீ விளக்கமாக சொல்கிறாயா என்று கேட்டார்?

பார்வதி: சரிங்க ஐயா.எங்கள் வீட்டில் ஒன்பது மாடுகள் இருக்கிறது.அவைகள் அனைத்தையும் குளிக்க வைத்து,கொம்புகளைச் சீவி வர்ணம் பூசி, பொட்டு வைத்து,பொங்கலிட்டு ,அவைகளுக்கும் பூசணியிலையில் பொங்கல் வைத்து சாப்பிடக் கொடுப்போம்.பிறகு அலங்காரம் செய்த கட்டை வண்டியில், அவைகளைக் கட்டி ஊர்வலமாக ஊருக்குள் கொண்டு செல்வோம். வண்டியில் நானும்,எனது நண்பர்களோடு, உறவினர்களோடு மகிழ்ச்சியாகச் செல்வேன் ஐயா என்றாள்.

ஆசிரியர்: மகிழ்ச்சியம்மா... உட்கார். சரி ,நாம் மாட்டுப் பொங்கல் கொண்டாடுகிறோம்.ஆனால் நமது காளைகளின் வீர விளையாட்டு இருக்கிறதே....தெரியுமா யாருக்காவது? என்றார்

.ஓ தெரியுமே ஐயா..சல்லிக்கட்டு என்று ஆனந்தன் சத்தமாகக் கூறினான்.



ஆசிரியர்: அப்படியென்றால் நீ அதைப்பற்றிக் கூறு ...என்றார்.

ஆனந்தன் : ஐயா, அது ஒரு வீர விளையாட்டு.பொங்கலுக்கு முன்னும்,பின்னும் இந்த சல்லிக்கட்டு விளையாட்டுகள் நடக்கும்.அதற்காக வளர்க்கப்பட்ட காளைகளை ,அந்த திடலில்

கொண்டு வந்து அவிழ்த்து விட்டு, சில வீரர்களைக் கொண்டு அதை அடக்கச் செய்வார்கள். சில சமயம் அம்மாடுகளும் வீரர்களைக் குத்தி விடும்.ஆனால் அதற்காக யாரும் அஞ்சுவதில்லை.விளையாடிப் பரிசுப் பொருட்களை வாங்கிச் செல்கிறார்கள்.

ஆசிரியர்: ஆமாம், தொன்று தொட்டு வரும் விளையாட்டு அல்லவா?இன்றோ,நேற்றோ தொடங்கியது அல்லவே..சங்க இலக்கியங்களிலும் இடம்பெற்ற வரலாறை நாம் காண முடிகிறதே..இது போன்ற பிற வீர விளையாட்டுக்கள் இருந்தாலும் ,சல்லிக்கட்டு முக்கியத்துவம் பெறுகிறது. அதனால் நாம் அனைவரும் எண்ணி பெருமைப்படவும்,மகிழவும்,பிறரோடு பகிர்ந்து உண்ணும்  நற்பண்புகளை சொல்லும் விழாவாகப் பொங்கல் விழாவைச் சொல்லலாம்…இல்லையா! என்றார்.

சரி , காணும் பொங்கலுக்கு எங்கே சென்றீர்கள் என்று கேட்டதற்கு , அவரவர் தாங்கள் சென்ற இடங்களைப் பற்றி சொன்னார்கள்.

சரிதான்  பிள்ளைகளே… அனைவரும் சிறப்பாக தங்களுக்குத் தெரிந்ததைக் கூறினீர்கள்.ஆனால் இந்த நல்ல நாளில் நமது வாழ்நாளுக்குத் தேவையான அரிய பண்பைப் பற்றி உங்களுக்குச் சொல்லப் போகிறேன்.இன்று நாம் கற்கப் போகும் இந்த பாடம் உங்கள் வாழ்க்கை மேம்படவும்,நமது முன்னோர்கள் எப்படி இந்த உயரிய பண்பைக் காலம் காலமாகப் பின்பற்றி வருகிறார்கள் எனவும் உங்களால் புரிந்து கொள்ள முடியும்.





வறுமையில் வாடுவோர்,பிறவிக் குறைபாடு உடையோர்,நோயுற்றவர்கள், அனாதையாக விடப்பட்டவர்,ஆகியோருக்கு உணவளித்தல் சிறந்த அறம் என்கிறது மணிமேகலை.
தானியம் ஏதும் இல்லாத நிலையில்,வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினர்களை கவனிக்க,விருந்தளிக்க விதைக்காக வைக்கப்பட்டிருந்த தினையை,உரலில் குத்தி, சமைத்து, தலைவி பரிமாறினாள் என்று புறநானூறு கூறுகிறது.
இது போன்று தொல்காப்பியம் தொடங்கி, சங்க இலக்கியங்கள் வரை அனைத்திலும் விருந்தோம்பலே சிறந்த அறம் என்பதை வலியுறுத்துகின்றன.அப்பேர்ப்பட்ட சிறந்த மாண்பை நாம் இன்று வளர்ந்து வரும் சமுதாயமாக இருக்கும் உங்களிடம் ,இப்பருவத்திலிருந்தே பழக வேண்டும்.பிறர்க்குப் பகிர்ந்தளித்து உண்ண வேண்டும்,பிறர்க்குக் கொடுத்து உதவுதல் போன்ற நல்ல குணங்களை சிறு வயதிலேயே நீங்கள் கற்க வேண்டும். அவ்வாறு வளரும் குழந்தைகளாகிய நீங்கள்,உறுதியாக பிறரின் துன்பங்களை உணரக்கூடும் . பகிர்ந்து உண்டு,பிறர் பசிப்பிணி தீர நினைத்தால்,நாளைய உலகிற்கு நல்ல குடிமக்களாக வாழ முடியும் அல்லவா.



‘”விருந்தின் மன்னர் அருங்கலம் தெறுப்ப
வேந்தனும் வெம்பகை தணிந்தனன்”
என்று அகநானூறு சொல்கிறது.
விருந்து எனும் சொல்லிற்குப் புதுமை எனும் ஒரு பொருளைத் தொல்காப்பியம் தருகிறது.
பண்டைய தமிழரின் பண்பாட்டில் தலையாய கடமையாக இருந்த பண்பு விருந்தோம்பல் ஆகும்.
“பண்டமாற்று முறை வழக்கிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழலில்.இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு கால்நடையாகவே மக்கள் நடந்து செல்ல வேண்டியிருந்தது. உணவு விடுதிகள் இல்லாத காரணத்தினால் உண்டிக்கும் உறையுளுக்கும் அனைவரும் செல்லும் ஊர்களையே நம்ப வேண்டியிருந்தது. ஆகவே, புதிதாக வருவோர்க்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையால் விருந்தோம்பல் பண்பாடு தமிழகத்து இல்லங்களில் உருவாயிற்று.
‘விருந்தோம்பல்’ என்பது தம் இல்லம் தேடி வரும் புதியவர்களை இன்முகத்துடன் வரவேற்று இனிய மொழி கூறி உபசரித்து உணவளிக்கும் உயரிய பண்பு.
செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.-- குறள் எண்: 86- விருந்தோம்பல்
இக்குறள் கூறும் செய்தி
வந்த விருந்தினர்களைச் சிறப்பாகக் கவனித்து உணவு வழங்கி முடித்து,இனி வரப் போகும் விருந்தினருக்காக ஆவலுடன் காத்திருப்பவன் உயர்ந்தோருக்கு நல்ல விருந்தினனாகத் திகழ்வான்.

குறள்விளக்கக் கதை



# கூடாநட்பு

**செ.குருபரன் (பன்னிரண்டாம் வகுப்பு,பால வித்தியா மந்திர்,அடையாறு)**

எப்போதும் நல்லவர்களையே நாம் நண்பர்களாகக் கொள்ளவேண்டும். யாராவது தீய நோக்கத்துடன் நம்மிடம் பழகுவதாகத் தெரிந்தால் அவர்களின் தொடர்பை உடனே கைவிடவேண்டும்.இல்லாவிட்டால் அந்தியூர் காட்டில் ஒட்டகத்துக்கு நேர்ந்த முடிவுதான் ஏற்படும்.

அந்தியூர் காட்டில் ஓர் ஒட்டகம் வாழ்ந்துவந்தது.அந்த ஒட்டகம் அங்கே எப்படிப் போனது?பக்கத்து ஊரிலே சர்க்கசு நடத்திக் கொண்டிருந்தவர்கள் போதிய வருவாய் வராததால் தமது கம்பெனியை இழுத்து மூடிவிட்டனர்.அப்படி மூடியவேளையில் ஒவ்வொரு விலங்கையும் தக்கவர்களைத் தேடி விலைக்கு விற்றுவிட்டனர்.வயதான ஓர் ஒட்டகத்தை மட்டும் யாரும் வாங்கமுன்வரவில்லை.எனவே பக்கத்தில் உள்ள இந்தக் காட்டில் விட்டுவிட்டுப் போனார்கள்.விலங்காக இருந்தாலும் தனிமையிலே இருப்பது துன்பம்தானே?தனக்கு ஏற்ற நண்பர்களைத் தேடும் முயற்சியில் ஒட்டகம் ஈடுபட்டது.ஒரு காக்கா,ஒரு முயல்,ஒரு நரி அதற்கு நண்பர்களாக வாய்த்தனர்.



காக்காவும் நரியும் ஒட்டகத்தைப் புகழ்ந்து பேசிக்கொண்டே இருக்கும்.இதனை முயல் பார்த்தது.உடனே ஒட்டகத்திடம்,"அண்ணே!யாராவது காரணம் இல்லாமல் புகழ்வார்களா?இவர்கள் ஏதோ திட்டம் வைத்திருக்கிறார்கள்.இவர்கள் தொடர்பை விட்டுவிடுங்கள்" என்று கூறியது.சூது வாது தெரியாத ஒட்டகம் இதனை ஏற்கவில்லை.நம்மை வானளாவப் புகழ்பவர்கள் ஏதோ எதிர்பார்ர்ப்புடன் தானே புகழ்வார்கள்?சொந்தமாகவும் தெரியவில்லை.சொல்வதையும் கேட்கவில்லை முட்டாள் ஒட்டகம்!

முயல் சொன்னதை அப்படியே காக்காவிடமும் நரியிடமும் ஒட்டகம் கூறிவிட்டது.அவற்றுக்கு ஒரே கோபம்.

“நம்முடைய ஒட்டகம் அண்ணனைக் காட்டுக்கு ராசா ஆக்கிவிடவேண்டும் என்று நாங்கள் திட்டம் தீட்டியுள்ளோம்.இது அந்த முயலுக்குப் பொறாமை ஏற்படுத்திவிட்டது “என்று அவை கூறின.அப்பாவி ஒட்டகம் அதனை உண்மையென்று நம்பிவிட்டது.

“அண்ணே!இன்றைக்கு நம் நாட்டாமை சிறுத்தையாரைப் பார்க்கப் போகிறோம்.நீங்களும் வரீங்களாண்ணே!” என்று ஒரே குரலில் கூறின.

ஒட்டகம் ஏன்,எதற்கு என்று கூடக் கேட்கவில்லை.”சரி,நானும் வரேவ்” என்று அவர்களுடன் கிளம்பிவிட்டது.

மூன்றும் தன்னைப் பார்க்கவந்ததும் நாட்டாமை சிறுத்தையாருக்கு ஒரே மகிழ்ச்சி.“வாங்க வாங்க நல்லா இருக்கீங்களா? ஒட்டகம் அண்ணாச்சி எப்படியிருக்கீங்க?இந்தச் சிறுவனையும் மதித்துப் பெரியவர் நீங்க வந்தது மிகவும் மகிழ்ச்சி” என்று சிறுத்தை வரவேற்புக் கூறியது.



“நாட்டாமை அண்ணே! நம்ம காட்டுக்கு ராசாவாக இருந்த சிங்கம் இறந்து நெடு நாளாயிற்று.அதற்குப் பின்னே நாட்டாமையாய் நீங்க இருக்கீங்க.ஆனால் ராசா யாருமே இல்லைய்யெ?”

“அதனால என்ன?என்ன செய்யவேண்டும்?” சிறுத்தை கேட்டது.

“நம்ம ஒட்டகம் அண்ணன் தான் காட்டிலேயே உயர்ந்தவர்.அவரை ராசாவா ஆக்கிவிட்டால் இந்தக் காட்டுக்கே பெருமை”என்றன நரியும் காக்காயும்.

“ஓ!தாராளமாச் செய்துவிடலாமே” என்றது சிறுத்தை.

“அவ்வளவு வலிமை வாய்ந்த சிறுத்தை என்னை ராசா ஆக்கலாம் என்கிறாரே!எவ்வளவு பெரிய மனசு அவருக்கு” என்று மனத்துக்குள் வியந்தது ஒட்டகம்.

“இந்த நிமிடம் முதல் நம்ம காட்டுக்கு ஒட்டகம் அண்ணன் தான் ராசா.இதனை நம்ம தவக்களை கிட்ட சொல்லி காடெல்லாம் அறிவிக்கச் சொல்கிறேம்.” என்றது சிறுத்தை.

ஒட்டகத்துக்கு ஒரே மகிழ்ச்சி.:

“என்னது நம்மதான் இனி காட்டுக்கு ராசாவா?நம்பவே முடியல்லையே” ஒட்டகம் மீண்டும் வியப்பில் ஆழ்ந்தது.

“ராசாகிட்ட அடியேன் விண்னப்பம்.எனக்குச் சரியாக உணவு கிடைக்கவில்லை.ராசாதான் இந்த ஏழையின் பசியைப் போக்கிக்கொள்ள ஆவனசெய்யவேண்டும்.” எனச் சிறுத்தை வேண்டியது.

“நாட்டாமை நாங்க இருக்கையிலே நீங்க பட்டினி கிடக்கலாமா?வேணும்னா எங்களையே இரையாய் எடுத்துக்கொள்ளுங்களேன்”என்பது நரி,காக்கா ஆகியவற்றின் வேண்டுகோள்.

“வேண்டாம் வேண்டாம்.”என்று பலமாக மறுத்தது சிறுத்தை.

விருந்து உபசாரம் செய்வதாக நினைத்துக்கொண்டு ஒட்டகம் கூறியது.

“வேணும்னா என்னை இரையாக்கிக் கொள்ளுங்க நாட்டாமை.”

ஒட்டகத்தின் வாயிலிருந்து வார்த்தை வந்ததுதான் தாமதம்!

உடனே காக்கா பறந்து ஒட்டகத்தின் கண்கள் இரண்டையும் கொத்திக் கிழித்தது.

நரி ஒட்டகத்தின் கழுத்தைப் பலமாகக் கடித்தது.

சிறுத்தை முதலில் பின்னாலேயே பதுங்கிப்  போய் அப்புறம் முன்னாலே வேகமாகப் படீரெனப் பாய்ந்து ஒட்டகத்தை இரையடித்து முடித்தது.

பாவம் அப்பாவி ஒட்டகம்!

போலிப் பாராட்டுகளுக்கு மயங்கித் தகுதியில்லாதவர்களுடன் நட்புக் கொண்டு தன் வாழ்க்கையைத் தானே முடித்துக்கொண்டது.

கூடா நட்பு கேடாய் முடியும் என்பது பழமொழி.

கெட்டவர்களுடன் வைக்கும் நட்பு தீய முடிவுகளையே உண்டாக்கும்.

சிரித்துப் பேசி நம்மைச் சீரழிக்க நினைக்கும் வஞ்சகரின் நட்புக்கு அஞ்சி ஒதுங்கிட வேண்டும்.

**முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னா**

**வஞ்சரை அஞ்சப் படும்.-** குறள் 824:.கூடாநட்பு

கற்க கசடற க் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள்  விருந்து



தி.வ.ஆ.-2054 மாசி- 12 பொ.ஆ.-2023 பெப்புருவரி-24

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



# வணக்கம்.வாருங்கள்.



## உழைப்பீர் உயர்வீர் வாழ்த்துகிறேன்!


**செ.குருபரன்**



பன்னிரண்டாம் வகுப்பு,
பால வித்தியா மந்திர், அடையாறு


தேர்வுக்குச் செல்லும் நண்பர்களே
ஆர்வத்துடனே படித்திடுவீர்!
எண்ணும் எழுத்தும் உயிர் அன்றோ?
வைகறை எழுந்து படித்தாலே
நினைவில் நன்கு பதிந்துவிடும்
இரவு விழித்துப் படிக்காதீர்
படித்ததை மறதி மறைத்துவிடும்
அப்பா அம்மா திட்டுவர் என்றே
அவர்களுக்காகப் படிக்காதீர்!
உங்கள் வாழ்வில் உயர்ந்திடவே
உங்கள் படிப்பு வழிவகுக்கும்!
அதிக மதிப்பெண் பெற்றால்தான்
ஆசைப் படிப்பைப் பெறலாமே!
மதிப்பெண் குறைவாய் வாங்கிவிட்டால்
விரும்பிய படிப்பு கிடைக்காதே!
அதனால் என்ன கலங்காதீர்!
ஆயிரம் ஆயிரம் படிப்புகளே
புதிது புதிதாய் அறிமுகமாகும்
கல்வி வளர்ச்சிக் காலம் இது!
மருத்துவம் பொறியியல் மட்டுமே
வாழ்வின் விடியல்கள் எனலாமா?
உங்களுக்கும் ஒரு பொற்காலம்
உறுதியாக வாய்த்திடவே
கிடைக்கும் படிப்பில் ஈடுபட்டு
உழைப்பீர் உயர்வீர் வாழ்த்துகிறேன்!

# பெரியவர்களின் துணை

--திருமதி தாமரை சீனிவாசராவ்



கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப் பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

நல்லோரின் அறிவுரை ஒரு நாட்டைக் காக்கக் கூடிய அரணாக விளங்கும்.எடுத்துக்காட்டாக ஒரு நாட்டை ஒருவர் ஆண்டுகொண்டிருக்கும்போது, செய்த சில தவறுகளால் பொருளாதார முறையில் பின்தங்க நேரிட்டால், அப்போது அறிவுரை கூறும் படித்த சான்றோரோ அல்லது பொருளாதார நிபுணரோ அது பற்றிக் கூறும் பெரியாரின் அறிவுரைகளைப் புறந்தள்ளக்கூடாது. அவ்வாறு நாட்டை ஆள்பவன் செய்வானெனில் எவ்வளவு பாதிப்பு ஏற்படும்!

அது மக்களுக்கும் கேடாக முடியும். ஒரு நாட்டினுடைய பொருளாதார நிலை சரிந்தால் முதலில் பாதிக்கப்படுபவர்கள் ஏழ்மைநிலையில் இருக்கும் மக்களே. எனவே பெரியாரின் துணைகொண்டு, அவர் அறிவுரைகளைக் கேட்டுநடந்தால், வரும் பெருங்கேட்டிலிருந்து தப்பிக்கலாம்.

ஒரு நாட்டில் ஒரு மன்னன் நீண்ட நாட்கள் ஆட்சி செய்துகொண்டிருந்தார். மக்களும் அவரது ஆட்சியில் குறைவின்றி மனநிறைவாக வாழ்ந்தார்கள். ஒருநாள் அவரது மூத்தமகன் வந்து, தந்தையிடம் உங்களுக்குத் தான் வயதாகிவிட்டதே... ஆட்சியை என்னிடம் அளிக்கக்கூடாதா என்று நேரடியாகவே கோபமாகக் கேட்டான். இதைக் கேட்ட மன்னர், “அப்படி ஒன்றும் தள்ளாடும் நிலைமையில் நான் இல்லையே மகனே” என்று சிரித்துக்கொண்டே கூறினார். மேலும் “நாட்டில் எந்தக் குறையும் இல்லையே. மும்மாரி மழைபெய்து, நம் மண்ணும் செழிப்பாக உள்ளது. மக்களும் உழுதும், தொழுதும், கொண்டாடியும் மகிழ்ச்சியாகவே உள்ளார்கள். இதில் எதில் குறை கண்டீர்கள்? ஏன் என்னைப் பதவியிலிருந்து இறங்கச் சொல்கிறீர்கள்” என்று கேட்டார்?

அதற்கு இளவரசனோ, “அதெல்லாம் எனக்குத் தெரியாது, எத்தனை நாட்களாக நான் காத்துக்கொண்டிருப்பது?” என்று மிரட்டும் தொனியில் பேசினான். “நீங்கள் இப்படியே காலம்கடத்திக் கொண்டிருந்தால் உங்களைக் கொன்றுவிட்டு அந்த அரியணையில் அமரக்கூடத் தவறமாட்டேன்” என்று கூறியதும் மகாராணியும், அமைச்சர் பெருமக்களும் சற்று அதிர்ந்துபோயினர். சட்டென்று எழுந்து மகாராணியார் இளவரசனை அடக்கினார். “பெரியவர்களிடம் பேசும் பேச்சா இது? தந்தையிடம் மன்னிப்பு கேள்” என்றார். ”அதெல்லாம் கேட்கமுடியாது” என்று பொறுமை தவறியவனாய் பேசினான். சற்றுக் கோபமடைந்த மன்னன், ”சரி இவ்வாறு அவசரப்படாதே. கோபமும், நிதானமும் இல்லாமல் செயல்பட்டால் எங்ஙனம் நீ நாட்டை ஆள்வாய்?” என்று கேட்டார். பொறுமையாக நான் சொல்வதைக் கேள். என்னுடைய மூத்தகுரு, ஒருவர் உள்ளார். அவரிடம் நீ பயிற்சி பெற்றுவா. பிறகு நான் உனக்கு முடிசூட்டுகிறேன்” என்றார்

“அதெல்லாம்முடியாது, என்னை நீங்கள் முட்டாளாக்க வேண்டாம்” என்று மீண்டும் எதிர்த்துப்பேசினான்.

ஆனால்  தந்தை சொல்லை    சற்றுப் பொறுமையாகக் கேட்குமாறு அனைவரும் வலியுறுத்தியதால்,  இளவரசனால் எதுவும் செய்யமுடியவில்லை.

கோபமாக,”சரிபோகிறேன்”என்று அனைவரின் முன்னிலையிலும் ஒப்புக்கொண்டான்.

அவை கலைந்தவுடன் மூத்த உறுப்பினர்களும், அமைச்சர்களும் மிகுந்த கவலையோடு, மன்னனிடம் வந்து, “அரசே இளவரசன் அரசவையில், அனைவரின் முன்பு உங்களை இப்படி இழிவாகப் பேசியது, வருத்தமளிக்கிறது” என்றனர்.

மன்னரும்,”ஆம் இப்படிப்பட்ட செயலை அவன் செய்வானென்று நானும் நினைக்கவில்லை. என்ன செய்வது? அவனது பழக்கவழக்கங்கள், நடவடிக்கைகள் அவனை அவ்வாறு ஆக்கிவிட்டன என்றுநினைக்கிறேன்.” என்று வருத்தமாகக் கூறினார். “ஆனால் நான் நம்பிக்கை இழக்கவில்லை, வனத்தில் இருக்கும் எனது பேராசான் உறுதியாக, அவனை பக்குவமான மனிதனாக மாற்றுவார் என்று பெருநம்பிக்கை கொண்டுள்ளேன்.” என்றார்.

“நல்லது, அவ்வாறே நடக்கட்டும் என்று அனைவரும் விடைபெற்றுச் சென்றனர்.

இளவரசன் காட்டிற்குப் புறப்படும் ஏற்பாடுகள் அனைத்தும் நடைபெற்றன. அவ்வாறே அவ்விடத்தில் இளவரசனை விட்டுவிட்டுத் திரும்பும்படியான உத்தரவையும் மன்னர் வெளியிட்டார்.

“யாரும் அங்கு இளவரசனுக்கு எந்தப் பணிவிடைகளும் செய்யக்கூடாது. அவருடைய பணிகளைத் தானே செய்துகொள்ளவேண்டும் என்று நினைத்தார். மேலும் அனைவரும் அங்கு சமமாகவே நடத்தப்படுவர். எந்தவித வேறுபாடும் அவர்களுக்குள் இருக்காது. தனது குருவும் அப்படிப்பட்ட செயல்களை விரும்பமாட்டார் என்று நினைத்தார். இளவரசனை வழியனுப்பிவைத்தாகிவிட்டது. நீண்ட பயணத்திற்குப் பிறகு இளவரசன் அங்கு போய் சேர்ந்தார். பிறகு குருவிடம் தன்னை அறிமுகம் செய்துகொண்டார். குருவும் அவரை அழைத்துஅமரும்படிகூறினார்.பின்னர் இளவரசனை நேரேநின்று அவரின் விருப்பங்கள்,

நோக்கங்கள் பற்றி கேட்டறிந்தார்.இளவரசனும் தன்னிடம் விடைபெற்றுச் செல்ல இருந்த பணியாட்கள், அனைவரும் செல்வதைச் சற்று அதிர்ச்சியாகப் பார்த்துக்கொண்டிருந்தான். ஆனால் குருவோ, "நான்தான் அவர்களைச் செல்லச் சொன்னேன். உனக்குப் பயிற்சிகள் முடிந்ததும் திரும்ப அழைக்கலாம்" என்றார். சற்றுக் கோபமடைந்த இளவரசன், வேறுவழி தெரியாமல் வாயடைத்துநின்றான்.

அன்று இரவிலிருந்து இளவரசனுக்கு வகுப்புகள் ஆரம்பித்துவிட்டன என்றே சொல்லவேண்டும். அமர்ந்திருந்த நிலையில் இருக்கும்போது, சுள்ளென்று அவனது கையில் ஒருஅடிவிழ, சட்டென்று கோபமுற்று, யாரது என்று வேகமாகத் திரும்பினான். குரு சிரித்துக்கொண்டே நான்தான், நீ எவ்வளவு விழிப்புடன் உள்ளாய் என்பதை அறியவே அவ்வாறு செய்தேன் என்றார். ஆனால் இளவரசனுக்கோ கோபம் கட்டுக்கடங்கவில்லை. "இனி அப்படிச் செய்யாதீர்கள். நீங்கள் போதிக்க வேண்டியதை நேரடியாக சொல்லித்தரலாமே" என்றான். "அது எனக்கும் தெரியும், ஆனால் ஒரு நாட்டை ஆளப்போகும் மன்னன் எப்போதும் தன்னைச் சுற்றி நடப்பதை, தன் உறக்கத்திலும் அறிந்தவனாக இருக்கவேண்டும்" என்றார்.

இப்படியாக பல அனுபவங்கள் இளவரசனுக்குக் கிடைத்தன. மனத்தில் கோபம் இருந்தாலும் இளவரசனால் ஒன்றுமே செய்யமுடியவில்லை. எப்படி இருந்தாலும், இந்த குரு ஏதாவது குறை சொல்வதும், வேலைகொடுத்துக்கொண்டே இருக்கிறாரே... என்று குறைப்பட்டுக்கொண்டான். இதில் அடிக்கடி அடிக்கவும் செய்கிறார்... என்னதான் செய்வது என்று யோசித்துக் கொண்டே இருந்தார். பின்னர் இரவும், பகலும் பல எதிர்பார்க்காத வண்ணம் குரு பலமுறை அடித்தார். ஒருநாள் மாலை நான் இன்று உறங்கப்போவதே இல்லை என்று குருவிடம் எதிர்வாதம் செய்தார். "ஓ ...அப்படியா அதையும் பார்ப்போம்" என்று குரு சிரித்தார். இரவு முழுவதும் அயராமல் விழிப்புடன் இருந்தான் இளவரசன். அதேபோல மிகவும் விழிப்புடன்,தன்னை யாரும் தாக்காத வண்ணம் பார்த்துக்கொண்டான். விடிந்ததும் குருவிடம் "பார்த்தீர்களா ....உங்களை நான் வென்றுவிட்டேன். என்னை உங்களால் ஒன்றும் செய்யமுடியவில்லை.. நான் ஒன்றும் நீங்களோ என் தந்தையோ எண்ணும் அளவிற்கு சாதாரண மனிதன் கிடையாது" என்று ஆணவத்தோடு பேசினான்.

"நான் அப்படி சொல்லவில்லையே, இன்னும் உனக்கு பக்குவம் வரவில்லை என்பதே எங்களது கவலை." என்று சொன்னார். இப்படியாக நாட்கள் சென்றன. பல பயிற்சிகளும், குருவின் தொடர் அறிவுரைகளையும், பயிற்சிகளையும் பெற்று ஓரளவிற்கு பெரியோர்களை மதிக்கவும், அவர்கள் கூறுவதைக் கேட்கும் பக்குவத்தையும் பெற்றிருந்தார். பின்னர் ஒருநாள் அங்கு வந்த வழிப்போக்கன் போல இருந்த ஒருவர், குருவைச் சந்தித்தார். அப்போது குருவுடன் பல செய்திகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார். அப்போதுஅந் நாட்டு மன்னனின் பெருமையையும், அவர்கள் ஒன்றாக குருவிடம் பயின்ற முறைகள், அதன்பிறகு அவர் நாட்டை ஆளும்விதம்,மேற்கொண்ட போர்முறைகளின் திறம், ஆகியவற்றைப் பற்றி பெருமையாகப்

பேசினார். அவரை மன்னராக கொண்டிருக்கும் மக்கள் மிகவும் பாக்கியசாலிகள் என்று பாராட்டினார்.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த இளவரசனுக்கோ மிகவும் வெட்கமாகிவிட்டது. தன் தந்தை என்பதைவிட இந்த நாட்டின் மன்னனை எவ்வளவு குறைத்து மதித்துவிட்டோம், என்று வருந்தினான். தன்னுடைய திமிரான பேச்சால் தந்தை அரசவையில் எவ்வளவு தலைகுனிந்திருப்பார் என்று கவலையுற்றான். அவருடைய அனுபவத்தையும், பெருமையையும் அறியாமல் போய்விட்டோமே என்று வருந்தினான். பின்னர் இரண்டு நாட்கள் மிகவும் அமைதியாகக் காணப்பட்ட இளவரசனைக் கண்டு,' என்னவாயிற்று' என்று'கேட்டார்குரு. அவன் மிகவும் பணிவோடு, 'என்னை முதலில் மன்னித்துவிடுங்கள்' என்று குருவை வணங்கினான். ஆச்சரியத்தோடு குருவும், 'மன்னிக்கும் அளவிற்கு நீ ஒன்றும் தவறு இழைக்கவில்லையே.... ஏனப்பா' என்றார்? பிறகு'தான் ஆணவத்தோடு உங்களிடம் எல்லாம் நடந்துகொண்டது மிகவும் தவறான செயல். எவ்வளவு திறமையாக இருந்தாலும், பெரியாரின் ஆசிகளும், அறிவுரைகளும் இல்லாதவன் தனிக்காட்டில் விடப்பட்டவன் போலத்தான்' என்றான்.அதை வலியுறுத்திக் கூறித் தன்னை நல்வழிப்படுத்தியமைக்கு நன்றியையும் தெரிவித்தான்.

பிறகு சில நாட்கள் சென்றபின் அரண்மனையிலிருந்து ஆட்கள் வந்தவுடன், இளவரசன் நாட்டிற்குக் கிளம்பினான். என்றென்றும் தனக்கு வழிகாட்டிய ஆசானுக்கு நன்றியுடையவனாக, தன் தந்தையை விட நற்பெயர் எடுத்துக்காட்டுவேன் என்றும் கூறினான். மிகவும் பெருமையாக தன்மாணாக்கனை வழியனுப்பினார் குரு. அரண்மனை அடைந்ததும், அன்புடன் தாயும், தந்தையும் அழைக்க, அவர்களை வணங்கிச் சென்றான் இளவரசன். அவனுடைய பழக்கவழக்கத்தில் இருந்த மாற்றத்தைக் கண்டு பெருமையடைந்தனர் மன்னரும்,மகாராணியும்.

எனவே நாம் துன்பக்கடலில் தனியே தவிக்காமல், நல்லோராம் பெரியவர்களின் துணையோடு வாழ்க்கையில் சாதிக்கலாமே....

தாம் மேற்கொண்ட முயற்சிகள், செயல்கள் ஆகியவற்றை முடிக்கும் திறன் பெற்ற வல்லோரை மதித்து நடக்க வேண்டும். எந்நிலையிலும் அவரை அவமதிக்கும் செயலில் ஈடுபடக்கூடாது. அவ்வாறு திறமை, ஆற்றல் மிக்கவர்கள் மேலானவர்கள். அப்படிப்பட்டவர்களை இகழாதிருத்தல் நமக்கு நாம் செய்துகொள்ளும் தலையாய பாதுகாப்புகளில் முதலானதாக இருக்கும்.

ஆற்றுவார்ஆற்றல்இகழாமைபோற்றுவார்
போற்றலுள்எல்லாம்தலை. பெரியாரைப்பிழையாமை-குறள்எண்:891

நம் ‘குறள்விருந்து’ சிறப்பாசிரியர் பாவலர் முரசு நெடுமாறன் மலேசிய இதழில் எழுதிய பாடல்

## நூற்றாண்டு நினைவுப் பாடல்

# குழந்தையாக மாறியவர்

எங்க ளுக்குப் பாட்டென்றால்
இனிக்கும் கரும்பாம் இதை உணர்ந்து
பொங்கும் அன்பால் பாடியவர்
புகழ்மிகு கவிஞர் வள்ளியப்பா

தேனைப் போன்ற கதைபடித்துத்
தெளிந்திட எழுதிக் கொடுத்தவர்
வானில் பறக்க நாடகத்தில்
வழிகள் அழகாய்க் காட்டியவர்

சிறுவர் நாங்கள் இதழ்படித்துச்
சிறந்திடத் தொண்டு செய்தவர்
நறுமண மலராய்ப் பூத்திடவே
நாளும் நாளும் உழைத்தவர்

குழந்தை யாகவே மாறியவர்
குழந்தைக் கவிஞர் ஆகியே
பழகிப் பழகி எங்களுக்குப்
பாட்டன் ஆகி நிலைத்தவர்

எங்க ளுக்கு மட்டுமே
இறுதி வரையில் எழுதியவர்
எங்கும் அவர்போல் யார் உள்ளார்?
என்றென் றும்அவர் வாழியவே!

நம் நாட்டுக் குழந்தைக் கவிஞர், பாப்பாவின் பாவலர் முரசு நெடுமாறன் படைத்த பாடல் இது.

18

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக



# குறள்  விருந்து




குறள்நெறி பரப்பத் **திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்**

தி.வ.ஆ.-2054 பங்குனி- 10 பொ.ஆ.-2023 மார்ச்சு-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









**குறளைக் கற்போம் குழந்தைகளே**

**குன்றெனப் புகழைக் குவிப்போமே**

**பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்**

**நெஞ்சில் நன்னெறி விதைப்போமே**

**சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்**

**பெருமைகள் பலவும் சேர்ப்போமே**

**வள்ளுவர் தந்த வான்மறையால்**

**வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே**

**நாடும் வீடும் நலம் பெறவே**

**நாளும் குறளைக் கற்போமே**

**கசடறக் கற்றுத் தெளிவோமே**

**கற்றபின் அதன்வழி நிற்போமே**

**வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே**

**வல்லமை பெற்றிட உழைப்போமே**

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



வணக்கம்.வாருங்கள்.



## தேர்வில் வாகை சூட வாழ்த்துகிறோம்

தேர்வுக்குச் செல்லும்  பிள்ளைகளே!
ஆர்வம் படிப்பில் இருந்தாலும்
அக்கறை கொள்வீர் உடல்நலனில்!
வேளைக்கு உணவை ஏற்றிடுவீர்!
விழித்துப் படிக்கும் நேரம் மிகுந்தால்
சோர்வும் நலிவும் சேர்ந்துவிடும்!
தூக்கமும் ஓய்வும் முறையாய் இருந்தால்
அறிவில் தெளிவும் நினைவாற்றலுமே
நிறைவாய்ப் படித்திட வழிவகுக்கும்!
அச்சம் சிறிதும் எதற்கும் வேண்டாம்!
மதிப்பெண் வருமோ வெற்றி கிட்டுமோ?
விரும்பும் படிப்பில் சேர்ந்திடவே
முதன்மைத் தகுதி வாய்த்திடுமோ?
தேர்ச்சியில் குறைவு நேரிடும் வேளை
பெற்றோர் நம்மைக் குற்றம் சாற்றும்
துன்பச் சூழல் ஏற்படுமோ? எனச்
சற்றும் கலக்கம் கொள்ளாதீர்கள்!
வையகம் பெரிதே வாய்ப்புகள் மிகுதி!
மதிப்பெண் மட்டுமே வாழ்க்கை அல்ல!
மருத்துவம் பொறியியல் மட்டுமா உலகம்!
உங்கள் ஆற்றல் மிகப் பெரிதே!
திண்ணிய எண்ணமும் திடமிகு முயற்சியும்
எண்ணிய வாழ்வை நல்கிடுமே
உலகை வெல்வீர்! உயர்வு கொள்வீர்!

சிறுவர் இலக்கியம்

குறள் விளக்க நாடகம்



# மலையினும் உயர்ந்தது

(நம் இதழின் சிறப்பாசிரியர்.உலகப்புகழ்பெற்ற பாவலர்.மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி.தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்ட பெருமைக்குரியவர்.மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.)

காட்சி : 1

இடம் : மலையமான் இல்லம்

நேரம் : பிற்பகல்

கதை மாந்தர் : மலையமான், மெய்யழகன், கறுப்பண்ணன், செல்லப்பன்.

நிலை : மலையமானும் அவன் மூன்று நண்பர்களும் கலந்துரையாடுதல்.

மலையமான் : மெய்யழகன், நீ வந்து விட்டாய். இன்னும் கறுப்பண்ணனும் செல்லப்பனும் வரவில்லை.

மெய்யழகன் : கறுப்பண்ணன் எங்கேயாவது வீண்பொழுது போக்கிக் கொண்டிருப்பான்; செல்லப்பன் எங்காவது சுற்றிக் கொண்டிருப்பான்.

மலையமான் : மூன்று மணிக்கெல்லாம் வருவதாகச் சொன்னார்களே.

மெய்யழகன் : அவர்கள் என்ன? நேரத்தை மதிப்பவர்களா? காலம் பொன்னானது என்பதை அறியாதவர்கள் அவர்கள்..

மலையமான் : மெய்யழகு, அவர்கள் அதோ வருகிறார்கள்.

மெய்யழகன் : வரட்டும். வரட்டும். (அவர்கள் வீட்டு வாசலுக்கு வந்ததும்)

மலையமான் : வா கறுப்பண்ணன், வா செல்லப்பன்.

கறுப்பண்ணன் : (மெய்யழகனை நோக்கி) நீ முன்பே வந்து விட்டாயா?

செல்லப்பன் : இவன் எப்போதும் இங்குதானே இருப்பான்.

மலையமான் : சரி, வாருங்கள் உள்ளே செல்வோம்.

(எல்லாரும் வீட்டினுள் செல்லுதல்)

செல்லப்பன் : கறுப்பண்ணன். நம் திட்டத்தை இவர்களுக்குச் சொல்.

கறுப்பண்ணன் : மெய்யழகன் ஏன் வாயே திறக்காமல் உம்மென்று இருக்கிறான்?

மெய்யழகன் : ஏதோ ஒரு திட்டத்தோடு வருவதாக நீங்கள்தானே கூறினீர்கள்? அதுபற்றி நீங்கள்தான் கூறவேண்டும்.

கறுப்பண்ணன் : சரி, சரி சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள்.

மலையமான் : ம்..........சொல்

கறுப்பண்ணன் : நீங்கள் உங்கள் பெற்றோர்க்கு அடிமைப்பட்டு, வீட்டிலேயே அடைந்து, அடங்கிக்கிடக்கிறீர்கள் அல்லவா?

மலையமான் : அப்படி ஒன்றும் இல்லையே.

மெய்யழகன் : பெற்றோர் எங்களுக்கு நல்வழி காட்டுகிறார்கள்.

மலையமான் : பொறுப்பின்றி எங்கும் வீணே சுற்றித் திரியாமல் அடக்கத்தோடு வாழ வழிகாட்டுகிறார்கள்.

கறுப்பண்ணன் : பள்ளிக்கூடத்தில்தான் அடங்கிக் கிடக்கிறோம். நாம் வெளியிலும் அடங்கிக்கிடக்க வேண்டுமா?

மெய்யழகன் : அடக்கத்தோடு நடப்பது ஒன்றும் அடிமைத்தனம் ஆகாது.

செல்லப்பன் : நீங்கள் எங்களோடு கொஞ்சம் வெளியே வந்து பாருங்கள்.

கறுப்பண்ணன் : ஆம். வந்து பாருங்கள் அப்புறம் நீங்கள் பலபேருக்கு எடுத்துச் சொல்வீர்கள்.

மதியழகன் : நாங்கள் உங்களுடன் வந்து நாங்களும் கெட வேண்டா; மற்றவர்களையும் கெடுக்க வேண்டா.

செல்லப்பன் : எங்களைக் கெட்டவர்கள் என்றே முடிவு செய்து விட்டீர்களா?

மலையமான் : உங்களை நாங்கள் கெட்டவர்கள் என்று சொல்லவில்லை.

மெய்யழகன் : கெட்டவர்களோடு சேர்ந்து கெட்டுக்கொண்டிருக்கிறீர்கள் என்றுதான் சொல்கிறோம்.

மலையமான் : நீங்கள் புகை பிடிப்பவர்களோடு பழகுகிறீர்கள்;

மெய்யழகன் : குடிப்பவர்களோடும் கூடிக் கும்மாளம்போடுகிறீர்கள்.

மலையமான் : அந்தப் பழக்கம் நாளை உங்களையும் பற்றிக் கொள்ளும்.

கறுப்பண்ணன் : நான் புகைபிடிப்பதில்லை

செல்லப்பன் : நான் குடிப்பதில்லை

மெய்யழகன் : காலப் போக்கில் அவர்கள் உங்களைக் கெடுத்து விடுவார்கள்

மலையமான் : “பன்றியுடன் சேர்ந்த கன்றும் மலம் உண்ணும்” என்ற பழமொழியை நீங்கள் கேட்டதில்லை?

கறுப்பண்ணன் : அவர்கள் எங்களைக் கெடுத்து விடுவார்கள் என்கிறீர்களா?

மெய்யழகன் : ஆம். அதில் ஐயமே இல்லை. அதனால்,

செல்லப்பன் : அதனால்,

மெய்யழகன் : அதனால், நாம் திருவள்ளுவர் கூறுவது போல நடந்து கொள்ள வேண்டும். மலையமான் அந்தத் திருக்குறளைக் கூறு.

மலையமான் : “நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது” (124)

கறுப்பண்ணன்
செல்லப்பன் : இதன் பொருள்........?

மலையமான் : அடுத்த வாரம் ஞாயிற்றுக்கிழமை இங்கு வாருங்கள். என் அன்னையை உங்களுக்கு இந்தக் குறளின் விளக்கத்தைக் கூறச் சொல்கிறேன்.

மெய்யழகன் : ஆமாம். மறவாமல் வந்துவிடுங்கள்.

கறுப்பண்ணன்
செல்லப்பன் : சரி. கண்டிப்பாக வருவோம்.

மலையமான்
மெய்யழகன் : நல்லது. போய் வாருங்கள்.

காட்சி முடிவு

காட்சி : 2

இடம் : மலையமான் இல்லம்

நேரம் : மாலை

கதை மாந்தர் : அன்பரசி அம்மையார், மலையமான், மெய்யழகன், கறுப்பண்ணன், செல்லப்பன்

நிலை : மலையமான் வீட்டிற்கு அவன் நன்பர்கள் வருதல். மலையமானின் அன்னை எல்லாருக்கும் விளங்கும் வண்ணம் திருக்குறளுக்கு விளக்கம் கூறுதல்.

மலையமான் : வாருங்கள் நண்பர்களே குறிப்பிட்ட நேரத்தில் எல்லாரும் வந்து விட்டீர்களே. மெய்யழகன் வழக்கம் போல் முன்பே வந்து விட்டான்.

கறுப்பண்ணன் : மெய்யழகன் உங்கள் வீட்டுப் பிள்ளை போல அல்லவா?

மலையமான் : நீங்களும் வேறுபட்டவர்கள் அல்லர். மெய்யழகன் வீடு அருகில் இருப்பதால் அவனுக்கு எங்கள் குடும்பத்தோடு நெருங்கி இருக்க வாய்ப்பு மிகுந்துள்ளது.

செல்லப்பன் : எங்களுக்கு அந்த வாய்ப்பில்லை.

மலையமான் : நீங்களும் இடையிடையே வந்து செல்கிறீர்களே.

மெய்யழகன் : சரி. நான்போய் அன்னையை அழைத்து வருகிறேன். (செல்லுதல்)

மலையமான் : அன்னை விரைந்து வந்துவிடுவார். அதோ? அதோ? அன்னை வருகிறார். அவர் சொல்லுவதைக் கருத்தூன்றிக் கேளுங்கள்.

கறுப்பண்ணன்
செல்லப்பன் : அன்னை சொல்வதைக் கவனமாகக் கேட்போம்.

(அன்னை வருதல் எல்லாரும் எழுந்து நின்று வணக்கம் கூறுதல்)

அன்பரசி : வாழ்த்துகள். எல்லாரும் உட்காருங்கள். நீங்கள் திருக்குறள் விளக்கம் கேட்க வந்ததற்கு மகிழ்ச்சி அடைகிறேன். எப்போதும் மலையமானும் மெய்யழகனும்தான் திருக்குறளுக்கு விளக்கம் கேட்டுக் கற்று வந்தார்கள். இன்று நீங்கள் இங்கு வந்திருபது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது.

கறுப்பண்ணன் : நாங்கள் இங்குவர மலையமானும் மெய்யழகனும்தான் காரணம்.

செல்லப்பன் : ஆமாம் அன்னையே!

அன்பரசி : நல்லது. உங்களுக்கு எந்தக் குறளுக்கு விளக்கம் தேவை?

கறுப்பண்ணன் : நேற்று மலையமான் எங்களுக்குச் சொன்ன குறள்.

மலையமான் : “நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது”

அன்பரசி : நீங்கள் மலையைப் பார்த்திருக்கிறீர்களா?

கறுப்பண்ணன் : எங்கள் வீட்டிற்குப் பின்னாலும் ஒரு மலை இருக்கிறதே.

அன்பரசி : அது மலையன்று; குன்று. உலகிலேயே உயரமான மலை எது தெரியுமா?

செல்லப்பன் : இமயமலை.

அன்பரசி : ஆம்! அந்த மலையை விட உயரமானவர்களைப் பார்த்திருக்கிறீர்களா?

கறுப்பண்ணன் : அன்னையே மலையைவிட உயரமானவர்கள் உலகில் இருக்கிறார்களா?

அன்பரசி : இருக்கிறார்கள். திருவள்ளுவர் அவர்களைக் காட்டுகிறார்.

செல்லப்பன் : அவர் காலத்தில் அப்பேர்ப்பட்ட மனிதர்கள் வாழ்ந்திருக்கலாம்.

அன்பரசி : ஏன் இப்போதும் இருக்கிறார்கள்; ஒருவர் இருவர் அல்லர். நிறையபேர் இருக்கிறார்கள்.

மலையமான் : அன்னையே அவர்கள் குழம்பிப்போய்க் கிடக்கிறார்கள்.

மெய்யழகன் : ஆமாம். அன்னையே விளக்கம் கூறி அவர்களுக்குப் புரியவையுங்கள்.

அன்பரசி : சரி கறுப்பண்ணன். குறளைப் படி.

“நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது”

அன்பரசி : மலை உயர்ந்து வளர்ந்திருப்பது. அது தன் முயற்சி இல்லாமல் இயற்கையாக வளர்வது; உறுதியோடு வளர்வது. மனிதர்கள் உயர்ந்த தன்மை உடையவர்களாக வளர்வதற்குப் பலதடைகளைத் தாண்ட வேண்டும். வீணான ஆசைகளை விடவேண்டும். தப்பானவர்களுடன் சேர்ந்து கெடக்கூடாது. உயர்ந்த பெருமக்கள் அறிவுரைபடி அடக்கம் உடையவராக வளரவேண்டும்.

கறுப்பண்ணன் : அடங்கிக் கிடப்பது அடிமைத்தனம் அல்லவா அன்னையே.

அன்பரசி : அடக்கம் வேறு; அடிமைத்தன்ம் வேறு. அடிமைத்தனம் என்பது, மற்றவர்கள் சொல்வதை எல்லாம் கேட்டு அவர்களுக்கு அடிமைப்பட்டுக்கிடப்பது. அடக்கம் என்பது தன் மனத்தை நல்ல வழியில் செலுத்தி வீண் ஆர்ப்பாட்டம் இன்றி நல்லவர்களாக வாழ்வது.

செல்லப்பன் : குறள் எங்களுக்குத் தெளிவாகப் புரியும்படி விளக்குங்கள் அன்னையே.

அன்பரசி : மனம் போன போக்கெல்லாம் போகாமல், தான் இருக்கும் நல்ல நிலையிலிருந்து மாறு படாமல் உறுதியுடன் நடப்பவனின் தோற்றம் அதாவது புகழ் உயர்வானது; மலையின் உச்சியை - அதாவது சிகரத்தைவிட உயர்ந்தது என்பது இதன் பொருள்.

இங்கே அடக்கம் என்பது யாருக்கும் அடிமையாவது என்று பொருள் அன்று. மனத்தைக் கண்டபடி எல்லாம் அலையவிடாமல் கட்டுப்பாட்டுடன் வாழ்வது என்று பொருள்.

கறுப்பண்ணன் : இன்னும் கொஞ்சம் கூடுதலாக விளக்குங்கள் அன்னையே.

அன்பரசி : பெற்றோர்க்கு அடங்கி நடக்கும் பிள்ளைகளைச் சிலர் தீயவழிக்கு இட்டுச் செல்ல முயல்வார்கள். அப்படிப்பட்டவர்களின் பேச்சை நம்பிப் போய்க் கெட்டுபோகாமல் உறுதியுடன் நடப்பவர்கள் எப்பேர்ப்பட்டவர்கள் தெரியுமா?

கறுப்பண்ணன் : எப்பேர்ப்பட்டவர்கள்?

அன்பரசி : மலையின் உச்சியைவிட உயர்ந்தவர்கள். அவர்களின் சிறப்பு........, எங்கே குறளின் கடைசி அடியைப் படியுங்கள்.

செல்லப்பன் : "மலையினும் மாணப்பெரிது"

அன்பரசி : ஆம்! மலையின் உச்சியைவிட உயர்வானது. மலையினும் மாணப்பெரிது என்பதன் பொருள் இதுதான்.

கறுப்பண்ணன் : குறள் முழுவதற்கும் இன்னொரு முறை விளக்கம் கூறுங்கள் அன்னையே.

அன்பரசி : எங்கே, மீண்டும் குறளை வாசியுங்கள்.

கறுப்பண்ணன் : "நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்
மலையினும் மாணப் பெரிது"

அன்பரசி : தான் இருக்கும் நல்ல நிலையிலிருந்து சிறிதுகூட மாறுபடாமல் அடங்கி நடப்பவனது உயர்வானது, மலையைவிட மிகவும் உயர்ந்ததாகும்.

செல்லப்பன் : இப்பொழுது குறள் நன்றாக விளங்குகிறது அன்னையே.

கறுப்பண்ணன் : அன்னையே நாங்கள் தீயவர்களோடு சேர்ந்து கெட்டுப் போக இருந்தோம். நாங்கள் திருந்தி நல்ல வழிக்குத் திரும்ப மலையமானும் மெய்யழகனும் வழிகாட்டினார்கள். இவர்கள் இருவரும் எங்கள் கண்களைத் திறந்தவர்கள்.

செல்லப்பன் : மலையமான் உள்ளபடி மலைபோன்ற உறுதி கொண்டவன். பொருத்தமான பெயர் மலையமானுக்கு.

கறுப்பண்ணன் : மெய்யழகன். உணமையிலேயே மெய்யழகன்தான். இவர்கள் இருவரும் எங்களுக்கு வழிகாட்டி வாழவைத்தார்கள். இனி நாங்கள் உறுதியுடன் நல்லவழியைப் பற்றி நடப்போம்.

மலையமான் : உங்களை நல்ல வழிக்கும் கொண்டுவர முடியும் என்று நம்பினோம்.

மெய்யழகன் : அன்னையின் வழியைப் பின்பற்றி அடகத்துடன் நடந்ததால் நாங்கள் எங்களையும் காப்பாற்றிக் கொண்டோம். உங்களுக்கும் வழிகாட்டினோம்.

கறுப்பண்ணன்

செல்லப்பன் : உங்களுக்கு மிகுந்த நன்றி அன்னையே. நாங்கள் சென்று வருகிறோம்.

அன்பரசி : உங்களுக்குச் சுவையான உணவு சமைத்து வைத்திருக்கிறேன்.

உண்ணலாம் வாருங்கள்.

கறுப்பண்ணன்

செல்லப்பன் : நன்றி. அன்னையே.

அன்பரசி : நல்லது வாருங்கள்.

(எல்லாரும் உணவுண்ணச் செல்லல்.)

நாடகம் நிறைவு.



# பழிச்செயல் செய்ய வெட்கப்படுவதே நாணம்

--திருமதி தாமரை சீனிவாசராவ்



கம்போடியா-ஆங்கோர் தமிழ்ச் சங்கப் பொருளாளர். புதுச்சேரியில் பல சமூக அமைப்புகளில் பொறுப்பு வகித்துப்  பொதுப்பணியாற்றிவருகிறார்.பல்வேறு தமிழ் அமைப்புகளுடன் இணைந்து தமிழ்ப்பணியாற்றி வருகிறார்.முற்போக்கு எழுத்தாளர்.முன்னணிப் பாவலர். நம் இதழின் பொறுப்பாசிரியர்.

ஒரு ஊரில் மிகப்பெரிய செல்வாக்குப் படைத்த ஊர்த்தலைவர் ஒருவர் இருந்தார்.அவர் தமது சொந்தப் பணிகளை விட, குடும்பத்தை விட ஊருக்கு நல்லது செய்யவும் , தொண்டாற்றவும், தம் வாழ்நாளை முழுவதுமாகப் பயனுள்ளதாக  இருக்க வேண்டுமென நினைத்தார்.தம்முடைய வேளாண்மைத் தொழிலைச் சிறப்பாகச் செய்து வந்தாலும் அவரது நாட்டம் முழுவதும் பொதுப்பணியாற்றுவதில் திசை மாறாமல் சென்றது.அதுவே அவருக்கு நற்பெயரைப் பெற்றுத் தந்தது.இவ்வளவு எளிமையாகப் பணிச்சுமை பற்றிய கவலையில்லாமல் ஊருக்கும் உழைக்கிறாரே என அனைவரும் போற்றும்படி வாழ்ந்தார்.மேலும் தம்மை நாடி வரும் அனைத்து மக்களுக்கும் இன்முகம் காட்டி அவர்களது தேவைகளை நிறைவுசெய்தும்,வேலை வாய்ப்புகளுக்கு வழிகாட்டியும் பேருதவி செய்து வந்தார். அவருக்கு இரு மகன்கள் இருந்தார்கள்.அவர்கள் இருவரும் கல்லூரிக்குச் சென்று படித்துக் கொண்டிருந்தார்கள்.அவர்களுடைய தாயார் வீட்டிலேயே மாணவர்களுக்கு மாலையில் பாடம் சொல்லித் தருவார். அப்பகுதியிலுள்ள ஏழை மாணவர்கள் அனைவரும் இலவசமாகக் கல்வி பயின்று சென்றனர்.ஒரு பொதுச் சேவையாகவும், தம்முடைய மன நிறைவுக்காகவும் அப்பணியை அவர் செய்தார்.இப்படியாக அவர்களுடைய பணி சென்று கொண்டிருந்தது.

அவருடைய பெரிய மகன் தம் படிப்பை முடிக்கும் தருவாயில் இருந்தார்.அவருக்கு வேலையும் கல்லூரியில் உள்ளபோதே போட்டித் தேர்வில் வெற்றி பெற்றுத் தேர்வாகிவிட்டதால் மிகுந்த மகிழ்ச்சியுடன் இருந்தார்.ஊராரும் தந்தையின் பெயரை காப்பாற்றி விட்டாய் என வாழ்த்திச் சென்றனர்.பணிக்கும் செல்ல ஆரம்பித்தார்.சில மாதங்கள் கழித்து,ஒரு நாள் தந்தையிடம் வந்து உங்களின்  பொதுநலச் சேவையால்,நம்முடைய குடும்பச் சொத்து கரைவதும்,சில சமயம் கவனிக்கப்படாமல் இருப்பதையும் கண்டு வருத்தமாக உள்ளது அப்பா. இப்படி அனைவருக்கும் வழங்கிக் கொண்டு இருக்கிறீர்களே என்று பேச்சுக்

கொடுத்தான்.இறுதியில் தனக்கு எதுவும் கிடைக்காமல் போய்விடுமோ என்று கவலையுற்றான்.ஒருநாள் அப்பா,நீங்கள் நடந்துகொள்வது சிறிதும் எனக்கு பிடிக்கவில்லை.நீங்கள் இவ்வாறு செய்து கொண்டிருந்தால் நமக்கு எந்த பணமோ,சொத்தோ எதுவும் மிஞ்சப் போவதில்லை.நீங்கள் உழைப்பது மட்டுமின்றி பணத்தையும் செலவு செய்கிறீர்கள்.இது சரியில்லை என்றான்.

அவர் அமைதியாக மகனைப் பார்த்து ''ஏனப்பா என்ன ஆயிற்று உனக்கு?நாம் காலம் காலமாக செய்து வரும் தொண்டு தானே.இத்தனை காலமும் நமது குடும்பம் இந்த ஊரில் நல்ல பெயரை எடுத்து வருகிறது.பிறருக்கு நன்மை செய்வதால் நாம் என்ன குறைந்தா போய்விட்டோம்.நன்றாக தானே இருக்கிறோம்?'' என்று கேட்டார்.ஆனால் அப்பாவின் பேச்சு,அவனை நிறைவுபடுத்துவதாகத் தெரியவில்லை.கோபமாக அங்கிருந்து சென்றுவிட்டான். சிறிது நாட்கள் சென்றன.பணிக்குச் சென்ற இடத்தில் பல நண்பர்கள் கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டு தனக்கு விருப்பமான வாழ்க்கையை வாழ ஆரம்பித்தான்.பிறகு சில நாட்கள் வீட்டிற்கு வராமல் வெளியில் தங்க ஆரம்பித்தான்.அவன் போக்கில் மாற்றத்தைக் கண்ட அவனது பெற்றோர் கவலையுற்றனர்.கொஞ்ச நாட்கள் கழித்து அவருடைய நண்பர்கள் மூலம் சில வருந்தத்தக்க தகவல்களைக் கேட்க நேர்ந்தது.சில நண்பர்களுடன் கூடி, தேவையில்லாத வேலைகளில் ஈடுபடுவதாகக் கேள்வியுற்றார்.அதை தன் மகனிடம் கேட்ட போது நீங்கள் உங்களுடைய வேலையைப் பார்க்கிறீர்கள், பிறருக்காக நமது பணத்தை அழிக்கிறீர்கள்.ஆனால் நான் பணத்தை எப்படிப் பெருக்குவது,மேலும் வருமானம் ஈட்டுவது என்று யோசிக்கிறேன்.அதனால் என்ன என்று கேட்டான்.ஆனால் அவனது போக்குப் பிடிக்காத அவனது தந்தை,நீ குடும்பப் பெயரைத் தான் கெடுக்கப் போகிறாய்.உன்னுடைய செயல்பாடுகளை நான் கவனித்துக் கொண்டு தான் இருக்கிறேன் என்றார்.ஆமாம்,பல நேரங்களில் நான் நண்பர்களோடு வெளியில் சென்று சிலரை சந்திக்க வேண்டியுள்ளது.அதனால் நான் சிறிது செலவு செய்கிறேன்.அதையெல்லாம் மீண்டும் நான் புதிதாக செய்யப் போகும் தொழிலில் இருந்து பெற்றுவிடுவேன் என்றான்.
''நீ முதலில் இருக்கும் வேலையில் நேர்மையாக இருக்கக் கற்றுக்கொள்.பிறகு மற்ற தொழில்களைத் தொடங்கலாம்'' என்றார்.ஆனால் தன் தந்தையை அவன் கவனிப்பதாகத் தெரியவில்லை.வாக்குவாதம் முற்றிய நிலையில் அவனது அம்மா அவனைக் கண்டித்து வெளியே அனுப்பினார்கள்.இப்படியாக சில நாட்கள் சென்றன..ஒரு நாள் திடீரென,தனதுத் தாயிடம் ஓடிவந்து,அம்மா எனக்கு ஒரு தொகை தேவைப்படுகிறது.அதற்காக பணம் வேண்டும் என்றான்.ஆனால் அவன் அம்மா , ''அப்பாவிற்குத் தெரியாமல் எப்படித் தருவது.அவருக்கு உண்மை தெரிந்தால் மிகவும் வருத்தப்படுவார்.நான் அதற்கு ஒப்புக் கொள்ளவே மாட்டேன்'' என்று கூறி விட்டார்.அம்மாவுடன் கோபித்துக் கொண்டு கோபமாக வீட்டை விட்டு வெளியேறினான்.சில நாட்கள் கழித்து,உறவினர்கள் சமாதானம் செய்து வீட்டிற்கு அழைத்து வந்தார்கள்.ஒன்றும் தெரியாதவன் போல வந்தவன்,சிறிது நாட்களில் மீண்டும் தன் வேலைகளைத் துவங்கினான்.திடீரென ஒருவர் வந்து,உங்கள் மகன் என்னிடம் பணம்

பெற்றார்,திரும்பத் தரவேயில்லை என்று கூறிக்கொண்டு வந்தார்.உங்களுடைய நற்பெயருக்குத் தான் நான் பணத்தைக் கொடுத்தேன்.ஆனால் இவ்வாறு செய்வார் என்று தெரியாது ஐயா,என்னை மன்னித்து விடுங்கள் என்றார்.மிகவும் நொந்துப் போன தந்தையோ,எவ்வளவு என்று கேட்டுவிட்டுப் பணத்தைத் திரும்பக் கொடுத்தார்.இனிமேல் தன் அனுமதியின்றி தன் மகனுக்கு பணம் எதுவும் தர வேண்டாம் என்று கூறினார்.
இப்படியாகச் சில நாட்கள் செல்ல திடீரென ஒரு நாள் காவல்துறையைச் சேர்ந்தவர்கள் அவருடைய இல்லத்திற்கு வந்தனர்.அக்கம் பக்கத்தினர் அதிர்ந்து போய் ஓடி வந்து என்ன நடக்கிறது,ஐயா வீட்டிற்கு ஏன் வர வேண்டும் என்று அதிசயமாகப் பார்த்தனர்.அப்போது காவல் துறை அதிகாரி உங்கள் மகனைக் கைது செய்ய வந்துள்ளேன் என்றார்.அதிர்ச்சியடைந்த தந்தை என்னவாயிற்று என்று கேட்டார்.அவருடைய மகன் வேலை செய்யும் இடத்தில் பணத்தைக் கையாடல் செய்து விட்டார் என்றும்,இவரின் நண்பர்களையும் கைது செய்துள்ளோம்,உங்கள் மகன் வேலையிலிருந்தும் நீக்கப்பட்டுள்ளார் , என்று அடுக்கிக் கொண்டே போக, குடும்பத்தினர்,அக்கம் பக்கத்தினர்,அனைவருமே என்ன சொல்வதென்று தெரியாமல் நின்றிருந்தனர்.அமைதியாக உங்கள் கடமையைச் செய்யுங்கள் என்று கூறி அவனது அப்பா அப்படியே உறைந்து உட்கார்ந்தார்.ஊராரும் ,ஐயாவின் பிள்ளை இப்படியா?கடைசியில் மகனை கவனிக்காமல் விட்டுவிட்டாரே என்று பேசத் தொடங்கிவிட்டனர்.மிகுந்த அவமானத்துடன் தலைகுனிந்த நிலையில் மகன் செல்ல,வாயடைத்துப் போய் கிடந்தார் தந்தை.

**குலஞ்சுடும் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்**
**நாண்இன்மை நின்றக் கடை** (1019)

ஒருவன் கொள்கை தவறினால் அத்தவறு அவன் குடிப்பிறப்பைக் கெடுக்கும்.மேலும் அந்நிலை தொடர்ந்தால்,அவன் நலம் அனைத்தையும் கெடுக்கும்.தான் செய்யும் தவறை எண்ணாமல் தொடர்ந்து செய்து வருபவர்களுக்கு,வரக்கூடிய நன்மைகள் கூட தடைப்பட்டுவிடும்.அவனது குலத்திற்கே அந்த செயல் அவப்பெயரைக் கொண்டு வந்து விடும்.நாம் செய்யும் எந்த செயலுக்கும் எதிர்வினை நடந்தே தீரும்.அவ்வாறிருக்க தீய செயல்களைச் செய்வதற்கு அஞ்ச வேண்டும்.அவ்வாறு அஞ்சாமல் பிறரைப் பற்றிய கவலையில்லாமல்,பின் விளைவைப் பற்றி அஞ்சாமல், செய்யும் செயலானது அவப்பெயரை கொண்டு வந்து சேர்க்கும்.உண்மையான நாணத்தைப் பேணுபவர்கள் தங்களுடைய உயிரையும் துச்சமென மதித்து,மானத்தைக் காத்துக் கொள்ள வழிகளைச் செய்வார்கள்.அவ்வாறு இருப்பவர்கள் தன்னுடைய நலனில் மட்டுமல்லாது,தன்னைச் சார்ந்திருப்பவர்களின் நிலையையும் சேர்த்தே மனதிற்கொண்டு கவனமாகச் செயல்படுவார்கள்.எவ்விதத்திலும் கீழான செயல்கள் செய்வதற்கும் அஞ்சுவர்.அப்படிப்பட்டவர்களை இவ்வுலகம் உயர்வான பண்புள்ளவராகக் கருதும்.



# இடுக்கண் களைவதாம் நட்பு

**செ.குருபரன் (**பன்னிரண்டாம் வகுப்பு,பால வித்தியா மந்திர்,அடையாறு)

செழியனும் முருகனும் இணைபிரியா நட்புக் கொண்ட பள்ளித் தோழர்கள்.இப்போது ஒன்பதாம் வகுப்பில் படிப்பவர்கள்.மூன்றாம் வகுப்பிலிருந்தே அவர்கள் நட்பு தொடங்கி உறுதியாக வளர்ந்து வருகிறது.முருகன் ஒவ்வொரு ஆண்டும் தன் பிறந்தநாளுக்கு எனத் தனியாகச் செழியனுக்கு மட்டும் இனிப்பு வாங்கிவந்து கொடுப்பான். செழியனும் முருகனுக்காகக் கோயிலுக்குச் சென்று முருகன் பிறந்தநாளில் வேண்டிக்கொள்வான்.முருகன் படிப்பில் ஆர்வம் காட்டுவதைவிட விளையாட்டில் மிகுந்த ஆர்வம் காட்டுவான். ஒவ்வொரு ஆண்டும் நண்பர்கள் நாளில் இருவரும் தத்தம் மணிக்கட்டில் கட்டியிருந்த காப்புக் கயிற்றை மாற்றிக்கொள்வது வழக்கமாயிருந்தது. செழியன் படிப்பைப் பெரிதாய்க் கருதி விளையாட்டில் கவனம் செலுத்துவது இல்லை.எனினும் இருவரும் ஒருவர்க்கொருவர் உதவி செய்துகொண்டு எல்லா ஆசிரியர்களிடமும் நல்ல பெயரையே பெற்றுவந்தனர்.

ஆண்டுகள் கடந்தாலும் இருவர் நட்பும் வளர்பிறையாகவே தொடர்ந்தது.ஆண்டுதோறும் வகுப்புகளில் இருவரும் எப்படியோ ஒரே பிரிவில் தொடர்வது அவர்களுக்குப் பெருமகிழ்ச்சியே.

ஒவ்பதாம் வகுப்புக்கு வந்தபோது இராமன் என்னும் மாணவன், அந்தப் பள்ளியில் புதிதாய்ச் சேர்ந்தவன், அவர்கள் படிக்கும் அதே பிரிவில் இணைந்தான்.அவனுடைய அப்பாவுக்குப் பணிமாறுதல் கிடைத்துச்

சென்னைக்கு வந்ததனால் அவன் ஊருக்கே புதியவன் எனவும் இதற்குமுன் திருச்சியில் படித்தபோது நன்கு படித்துப் பல போட்டிகளில் பரிசு பெற்றுள்ள திறமையாளன் எனவும் அவனைப் பற்றிய பேச்சு நிலவியது.அதனால் செழியனுக்கு அவனை நண்பனாக்கிக் கொள்ளும் ஆவல் மிகுந்தது.ஏதேனும் பொருள்களை அவனுக்குக் கொடுத்து அவனை மகிழ்விப்பதில் ஆர்வம் காட்டினான்.முருகனுக்கு இது சற்றும் பிடிக்கவில்லை. இராமன் தன்னலம் மிக்கவன் எனவும் அவனிடம் நட்பை விரும்புவது பயனில்லை எனவும் செழியனிடம் அடிக்கடி கூறிவந்தான்.புதிய நண்பன் மீது பொறாமை வேண்டாம் எனச் செழியன் சொல்லிவந்தான்.

ஓரிரண்டு நிகழ்ச்சிகள் நடந்தபின்னரே இந்தப் புதிய நட்பின் பொருந்தாமை செழியனுக்குப் புரியவந்தது.

ஒருநாள் விளையாட்டு நேரம்;விளையாட்டுத் திடலில் செழியன் தற்செயலாகத் தவறிவிழுந்து விட்டான்.பக்கத்திலே நின்றுகொண்டிருந்த இராமன் பாராமுகமாக வாளாவிருந்துவிட்டான். எங்கோ தொலைவில் இருந்த முருகன் பதற்றத்துடன் ஓடோடிவந்து செழியனைத் தூக்கிவிட்டான்.

இன்னொரு நாள்.அவர்களுடைய வகுப்பாசிரியர் தமிழ்வளர்ச்சிக்கு உழைத்த ஐந்து புலவர்களின்  படங்களைத் திரட்டி எடுத்துவருமாறு வீட்டுவேலை வழங்கியிருந்தார். செழியன் ஞாயிற்றுக்கிழமை விடுமுறையில் இதனை மறந்துவிட்டான்.அடுத்தநாள் திங்கள்கிழமை பள்ளிக்கு வந்தபோதுதான் அவன் நினைவுக்கு வந்தது.ஐயோ ஆசிரியர் கேட்டால் என்ன செய்வது என அவனுடைய நெஞ்சம் திக்திக் என அடித்துக்கொண்டது.

எல்லோரும் படங்களை எடுத்துவந்திருந்தனர்.பக்கத்து இருக்கைகளில் உள்ள நண்பர்களிடம் காட்டிப் பெருமையடித்துக் கொண்டிருந்தனர். ஆ.அதோ.ஆசிரியர் வரப் போகிறார்.யாராவது மிகுதியான படங்களைக்

கொண்டுவந்திருந்தால் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாமே என்னும் எண்ணம் செழியனுக்கு உதித்தது.

வகுப்பிலேயே நிறைய படங்களைத் திரட்டிவந்தவன் இராமனே எனப் பல பேர் பாராட்டிக் கொண்டிருந்தார்கள்.அவனிடம் ஓர் ஐந்து படம் கொடுத்து உதவுமாறு வேண்டிக் கேட்டுக் கொண்டான்  செழியன்.இராமன் மறுத்து விட்டான்.வெட்கத்தை விட்டுச் செழியன் கெஞ்சிக் கேட்டுப் பார்த்தான் .இராமன் மசிவதாகத் தெரியவில்லை.

ஐயோ!ஆசிரியர் வந்துவிடுவாரே!என்ன செய்யப்போகிறோம் எனப் பதைபதைத்தான் செழியன்.

பின்னிருக்கையில் அமர்ந்திருந்த முருகன் செழியனின் முகவாட்டத்தைத் தற்செயலாகக் கவனித்து ஓடோடிவந்தான்."என்னிடம் ஓரளவு மிகுதியாகப் படங்கள் உள்ளன.நாம் பகிர்ந்துகொள்வோம்.'' என ஆறுதல் வழங்கினான்.ஆசிரியரிடம் திட்டும் அடியும் வாங்கக் கூடிய ஆபத்து நீங்கியது செழியனுக்கு.

முருகனின் எச்சரிக்கையும் இராமனின் தன்னலப் போக்கும் செழியனுக்குத் தெளிவு ஏற்படுத்தின.

உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.( குறள் 788)
நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வாய் ஊன்றும் நிலை.( குறள் 789)



கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக



# குறள் விருந்து






குறள்நெறி பரப்பத் **திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்**

தி.வ.ஆ.-2054 சித்திரை- 11 பொ.ஆ.-2023 ஏப்பிரல்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









**குறளைக் கற்போம் குழந்தைகளே**

**குன்றெனப் புகழைக் குவிப்போமே**

**பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்**

**நெஞ்சில் நன்னெறி விதைப்போமே**

**சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்**

**பெருமைகள் பலவும் சேர்ப்போமே**

**வள்ளுவர் தந்த வான்மறையால்**

**வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே**

**நாடும் வீடும் நலம் பெறவே**

**நாளும் குறளைக் கற்போமே**

**கசடறக் கற்றுத் தெளிவோமே**

**கற்றபின் அதன்வழி நிற்போமே**

**வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே**

**வல்லமை பெற்றிட உழைப்போமே**

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



வணக்கம்.வாருங்கள்.



## பள்ளிப் படிப்பை முடித்தவரா?

போட்டித் தேர்வே பெரிதென்றே
பெற்றோர் மிரட்டும் நேரம் இதே!
வேண்டும் என்றே மிரட்டவில்லை!
உங்கள் வாழ்க்கை சிறப்புப் பெறவே
அவர்கள் காணும் கனவு வெல்ல
உங்களைத் தொல்லை செய்வது இயல்பே!
ஒன்றை மட்டும் என்றும் மறவேல்!
வையகம் பெரிதே வாய்ப்புகள் மிகுதி!
மதிப்பெண் மட்டுமே வாழ்க்கை அல்ல!
மருத்துவம் பொறியியல் மட்டுமா உலகம்!
உங்கள் ஆற்றல் மிகவும் பெரிதே!
திண்ணிய எண்ணமும் திடமிகு முயற்சியும்
எண்ணிய வாழ்வை நல்கிடுமே
உலகை வெல்வீர்! உயர்வு கொள்வீர்!
வாய்ப்புகள் நிறையக் காத்திருக் கின்றன!
எத்தனை விதமாய்க் கல்வித் துறைகள்!
எண்ணிப் பார்த்தால் வியப்பே மிகுதி!
நாளிதழ் ஊடகம் வழிகாட் டிடவே
நாடுவீர் பொருந்திய படிப்பைக் காணவே!
மாநில அரசும் ஒன்றிய அரசும்
போட்டி போட்டு உதவ வருகிறார்!
தேர்வீர் நல்ல துறையை எளிதாய்!
சேர்வீர் உமக்கு அண்மைப் பகுதியில்!
உழைப்பும் கருத்தும் செலுத்தும் மாணவர்
உயர்வைப் பெறுதல் உறுதியன்றோ?

சிறுவர் இலக்கியம்

குறள் விளக்க நாடகம்



## முனைவர் முரசு நெடுமாறன்

(நம் இதழின் சிறப்பாசிரியர்.உலகப்புகழ்பெற்ற பாவலர்.மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி.தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்ட அயலகத் தமிழர் என்னும் பெருமைக்குரியவர்.மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.)

# வடு மறையாது

**காட்சி : 1**

இடம் : இளவாணன் இல்லம்
கதை மாந்தர் : இளவாணன், இளவாணன் அன்னை..
நேரம் : மாலை

நிலை : இளவாணன் தன் நண்பன் வடமலை வீட்டிற்குச் செல்ல அன்னையிடம் இசைவு - அனுமதி கேட்டல்

இளவாணன் : அம்மா, நேற்று நான் உங்களிடம் கேட்டுக் கொண்டபடி என் நண்பன் வடமலை வீட்டிற்குப் போய் வரட்டுமா?

இளவாணன் தாய் : அதுபற்றி நான் பலவாறு எண்ணிப் பார்த்தேன். நீ அங்குச் செல்வது எனக்குச் சரியாகப் படவில்லை.

இளவாணன் : ஏன் அம்மா அப்படிச் சொல்கிறீர்கள் ?

இளவாணன் தாய் : அவன் முரட்டுத்தனம் உடையவன்போல் தெரிகிறது. நீ மென்மையானவன்; அமைதியானவன். உனக்கும் அவனுக்கும் சரிப்பட்டு வராது என்று நினைக்கிறேன்.

இளவாணன் : வடமலை வீட்டிற்கு நான் மட்டும் செல்லவில்லை. என் மற்ற நண்பர்களும் போகிறார்கள். நான் போகாவிட்டால்......

இளவாணன் தாய் : போகாவிட்டால் ஒன்றும் ஆகிவிடாது. அவன் பெரும் பணக்கார வீட்டுப் பிள்ளை. நீ ஏழைவீட்டுப் பிள்ளை. அதனால் அவர்கள் உன்னைத் தாழ்வாகக் கருத நேரிடலாம்.

இளவாணன் : இதுவரை என்னை யாரும் , ஏழை வீட்டுப் பையன் என்று ஒதுக்கியதில்லை அம்மா.

இளவாணன் தாய் : இதுவரை அப்படி நி னைக்கவில்லை. இனிமேலும் அப்படி நினைக்க மாட்டார்கள் என்பதற்கு என்ன உறுதி?

இளவாணன் : அம்மா! இதுவரை நான் உங்கள் சொல்லை மீறியதில்லை. இன்று அங்கு என் மற்ற நண்பர்களும் செல் லும்போது, நான் மட்டும் செல்லா விட்டால்...

இளவாணன் தாய் : என் மனத்தில் ஏதோ பட்டது. அதனால் உன்னைத் தடுக்க முயல்கிறேன்.

இளவாணன் : நீங்கள் போக வேண்டா என்றால் , நான் போகவில்லை அம்மா.

இளவாணன் தாய் : இளவாணா. நான் உன்னை வீட்டிலேயே அடைத்து வைக்க எண்ணியதில்லை. நீயும் எதற்கும் பிடிவாதம் பிடித்ததில்லை. இந்த நிகழ்வுக்கு நீ போக விரும்புவது எனக்குத் தெரிகிறது. உன்னை யாரும் தீய வழிக்குத் திருப்ப முடியாது என்பது எனக்குத் தெரியும் சரி, போய்வா. அங்குக் கவனமாக நடந்து கொள்.

இளவாணன் : நன்றி அம்மா! உங்கள் சொற்படியே நடந்து கொள்வேன்.

(இளவாணன் செல்லல்)

காட்சி முடிவு

இடம் : வடமலையின் வீடு

கதை மாந்தர் : வடமலை, அவன் தாய்.
நேரம் : இரவு

நிலை : விருந்து நடைபெறல் , வடமலை தன் நண்பர்களுடன் தனிமேசையில் அமர்ந்து உண்ணத் தொடங்குதல்.

வடமலை : என் அப்பாவுக்குப் பதவி உயர்வு கிடைத்திருக்கிறது. சம்பளமும் முன்பைவிடக் கூடியிருக்கிறது. அந்த மகிழ்ச்சியைக் கொண்டாடவே இந்த விருந்து.

நண்பன் 1 : இந்த விருந்து நிகழ்ச்சிக்கு எங்களையும் மறவாமல் அழைத்ததற்கு நன்றி.

வடமலை : வீட்டினுள் மிகப் பெரிய விருந்து நடைபெறுகிறது. உங்களுக்காக இங்கே தனியே ஏற்பாடு செய்தேன்.

நண்பன் 2 : நன்றி. வடமலை! ஆகா எத்தனை வகையான உணவுகள்!. எதை உண்பது? எதை விடுவது என்று தெரியவில்லை.

நண்பன் 1 : ம்... என்ன , இளவாணன் எதுவுமே பேசாமல் உட்கார்ந்திருக்கிறான்.

நண்பன் 2 : அவன் சாப்பாட்டில் மிகுந்த கட்டுப்பாடு உடையவன். எதையும் தேர்ந்தெடுத்து அளவோடுதான் சாப்பிடுவான்.

நண்பன் 1 : என்ன இளவாணா ! ஏன் சும்மா உட்கார்ந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாய்?

வடமலை : அவன் , இது போன்ற உணவு வகைகளைப் பார்த்தே இருக்கமாட்டான்.

இளவாணன் : நான் அளவோடுதான் சாப்பிடுவேன். முதலில் கொஞ்சம் பழச்சாற்றைப் பருகுகிறேன்.

நண்பன் 2 : ம்.............சரி பழச்சாற்றை எடுத்துக் கொள்.

(இளவாணன் பழச்சாறு இருந்த குவளையை எடுத்த போது கைத்தவறி விழுந்து பழச்சாறெல்லாம் மேசைமேல் ஊற்றி உணவுப் பொருட்களை யெல்லாம் நனைத்துவிட்டது. அப்போது...)

வடமலை : அடப்பாவி! இப்படிப் பண்ணிவிட்டாயே! உணவெல்லாம் வீணாகிவிட்டதே! உன்னை அழைத்ததே தப்பு. நீ ஒரு மட்டி , மடையன் குடிசை வீட்டில் வாழும் உனக்கு எப்படி நாகரிகம் தெரியும்?

நண்பன் 1 : என்ன வடமலை ? இளவாணன் வேண்டுமென்று செய்யவில்லையே! அவன் எடுத்தபோது கை தவறியதனால் தானே இப்படி ஆனது?




வடமலை : இல்லை , இல்லை. தன் வீட்டில் இப்படி ப்பட்ட உணவு கிடைக்காதே என்று பொறாமை ப்பட்டிருக்கிறான். அதனால் இப்படிச் செய்திருக்கிறான். நம்மை அமைதியாகச் சாப்பிட விடக்கூடாது என்று நினைத்திருக்கிறான். இவனைச் சும்மா விடக்கூடாது.

(வடமலை இளவாணனை ஓங்கி அறைதல். இளவாணன் கீழே விழுதல்; தலையில் காயம்பட்டுக் குருதி வெளிப்படல்)

நண்பன் 1 : என்ன வடமலை ! நீ அழைத்து விருந்துக்கு வந்தவனை இப்படிச் செய்யலாமா? இளவாணனை?

வடமலை : அவன் கிடக்கிறான். நீங்கள் வாருங்கள்.

அங்குள்ள மேசைக்குச் செல்லலாம். (எல்லாரும் போகிறார்கள்.
(இளவாணன் எழுந்து தன் வீட்டிற்குச் செல்லல்.)

(காட்சி முடிவு)

காட்சி : 3

இடம் : இளவாணன் இல்லம்

கதை மாந்தர் : இளவாணன் தாய், வடமலையின் தாய்.

நேரம் : இரவு

நிலை : வடமலையின் தாய் இளவாணன் தாயிடம் மன்னிப்புக் கேட்டல். இளவாணன் தாய் அவருக்கு த் திருக்குறள் நெறியை உணர்த்துதல்.

வடமலையின் தாய் : அம்மா! அம்மா!

இளவாணன் தாய் : வணக்கம். வாருங்கள். நீங்கள் யார்?

வடமலையின் தாய் : நான் வடமலையின் தாய்

இளவாணன் தாய் : உங்கள் வீட்டில் இன்று பெரிய விருந்து நடந்து கொண்டிருக்குமே. அதைவிட்டு விட்டு.... இங்கு ஏன் வந்தீர்கள். நீங்கள் உட்கார நல்ல நாற்காலி கூட இல்லை.

வடமலையின் தாய் : நான் அதனை எல்லாம் எதிர்பார்த்து வரவில்லை. உங்களிடமும் உங்கள் மகனிடமும் மன்னிப்புக் கேட்க வந்தேன்.

இளவாணன் தாய் : நீங்கள் ஏன் மன்னிப்புக் கேட்க வேண்டும் ? குற்றம் என் மகனுடையது. நான் பலவாறு எடுத்துச்சொல்லியும் உங்கள் மகன் அழைப்பை மதித்து அங்கு வந்தானே.... அது அவன் குற்றம்தானே?

வடமலை தாய் : அம்மா. உங்கள் மகன் தங்கமான பையன். என் மகன் அவனிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டதால்தான் உங்கள்

மகன் கீழே விழுந்தான் ; தலையில் காயம் பட்டு விட்டது என்று கேள்விப்பட்டேன். அவனை டாக்டரிடம் அழைத்துச் செல்லத்தான் நானே காரை ஒட்டிக் கொண்டு வந்தேன்.

இளவாணன் தாய் : அவனுக்கு நானே முதலுதவி செய்து கட்டுப் போட்டுப் படுக்க வைத்திருக்கிறேன். அவன் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறான். தேவை எனில் நானே என் மகனை மருத்துவரிடம் அழைத்துச் செல்வேன்.

வடமலையின் தாய் : அம்மா. எங்களை மன்னிக்க மாட்டீர்களா ?

இளவாணன் தாய் : உங்களை மன்னித்து ஆகப்போவது என்ன ? என் மகன் தலையில் ஏற்பட்ட காயம் இன்னும் சில நாள்களில் ஆறிவிடலாம். ஆனால் உங்கள் மகனின் சுடு சொற்கள் , என் மகன் மனத்தில் ஏற்படுத்திய த ழும்பு இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆனாலும் மறையுமோ?

தீயினால் சுட்ட புண் புறத்தே வடு
இருந்தாலும் உள்ளே ஆறிவிடும்; ஆனால்
நாவினால் தீய சொல் கூறிச் சுடும் வடு
என்றும் ஆறாது.

வடமலையின் தாய் : அம்மா நீங்கள் நன்கு படித்துப் பக்குவப்பட்டவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். பெருமனம் கொண்டு......

இளவாணன் தாய் : ஒன்று சொல்கிறேன் கேளுங்கள். நான் சொல்லவில்லை ; திருவள்ளுவர் சொன்னதை உங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

**“தீயினால் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே**
**நாவினால் சுட்ட வடு”**

இது திருக்குறள் 13ஆம் அதிகாரத்தில் வரும்
124ஆம் குறள்.

வடமலையின் தாய் : நான் திருக்குறள் படித்ததில்லை அம்மா.

இளவாணன் தாய் : தீயினால் நாம் ஒருவரைச் சுடுவோமேயானால் அது கொஞ்ச நாளில் ஆறிவிடும். ஆனால் தீய சொற்களால் ஒருவரை இகழ்ந்தால் அதனால் மனத்தில் ஏற்படும் த ழும்பு எந்தக் காலத்திலும் மறையாது. அது நினைவுக்கு வரும் போதெல்லாம் வலியை ஏற்படுத்திக் கொண்டே இருக்கும். அதனால் யாரையும் புண்படப் பேசக் கூடாது. இதனை உங்கள் மகனுக்கு உணர்த்துங்கள்.

வடமலையின் தாய் : அவனுக்கு அவன் செய்த தவற்றைச் சுட்டிக் காட்டுவேன் அம்மா. நான் தம்பிக்கு உணவு கொண்டுவந்திருக்கிறேன். தயவு செய்து எழுந்து சாப்பிடச் சொல்லுங்கள் அம்மா.

இளவாணன் தாய் : அவனுக்கு நான் உணவு கொடுத்துவிட்டேன். நீங்கள் கொண்டுவந்திருப்பது போன்ற உணவுகளை அவன் உண்ணமாட்டான். எளிமையான இயற்கை உணவே உண்ண அவனுக்குப் பழக்கியிருக்கிறேன்.

வடமலையின் தாய் : அம்மா...........

இளவாணன் தாய் : இதோ ஒரு திருக்குறள் புத்தகம் தருகிறேன். அவனைப் படிக்கத் தூண்டுங்கள்.

வடமலையின் தாய் : நான்..... நான்.....

இளவாணன் தாய் : நீங்கள் வீடுதேடி வந்ததற்கு நன்றி. சென்றுவாருங்கள். நாளைக்கு நிறைய வேலைகள் உள்ளன. நான் நேரத்தோடு உறங்கச் செல்ல வேண்டும்.

(வடமலையின் தாய் ஏமாற்றத்தோடு வீடு திரும்புகிறார்)

நாடகம் நிறைவு



**செ.குருபரன்** (பன்னிரண்டாம் வகுப்பு,பால வித்தியா மந்திர்,அடையாறு)

அனைவருக்கும் மகிழ்ச்சி தரும் இனிய சொல் இருக்கையில்
கேட்ட மாத்திரமே துன்பம் தரும் கொடிய சொல் கூறலாமா?

திருக்குறள் # 100
இனியவை கூறல்

நீ

இனிய உளவாக இன்னாத கூறல்
கனிஇருப்பக் காய்கவர்ந் தற்று.

www.neerodai.com

குறள் விளக்கம் (மு.வ) :

இனிய சொற்கள் இருக்கும் போது அவற்றை விட்டுக் கடுமையான சொற்களைக் கூறுதல் கனிகள் இருக்கும் போது அவற்றை விட்டு காய்களைப் பறித்துத் தின்பதைப் போன்றது .

**கோபம் வரும்போதும் கோபத்தை அடக்கவே குறள் வலியுறுத்துகிறது.அந்தச் சூழலில் எப்படி இனிய சொற்களைக் கூறுவது என்கிறீர்களா?இதோ விடை:**

| இப்படிச் சொல்லாதீர்கள் | இப்படிச் சொல்லுங்கள் |
|---|---|
| அட முட்டாளே | அடே புத்திசாலி |
| முட்டாள்தனமாய்ச் செய்கிறாயே | அறிவு கொழுந்துவிட்டு எரிகிறதா? |
| தொலைந்து போ | நலமாக இரு |
| பொய் சொல்லாதே | உண்மைக்கு மாறாய்ப் பேசாதே |
| பாவி படுபாவி | புண்ணியவானே |
| எக்கேடு கெட்டால் எனக்கென்ன | எங்கிருந்தாலும் வாழ்க |

# விடுமுறையைக் கொண்டாடலாம்! பெற்றவர்கள் திண்டாடவிடலாமா?

பாலாறு வெள்ள நீரில் மூழ்கி பள்ளி மாணவர்கள் பலி - சடலங்கள் மீட்பு



குளத்தில் ஆற்றில் ஏரியில் கடலில்
மூழ்கி இறந்திடும் துன்பச் செய்தி
அன்றாட வாடிக்கை ஆகி விட்டதே!
மலையில் ஏறவும் நீரில் மூழ்கவும்
ஆசை கொள்ளும் அன்புச் செல்வமே!
ஆபத்தைத் தவிர்த்தல் கடமை யன்றோ?
'அஞ்சுவ(து) அஞ்சாமை பேதைமை'யாம்!
அஞ்சுவ(து) அஞ்சல் அறிவார் தொழிலாம்!
அய்யன் வள்ளுவர் மொழிந்தார் நமக்கே
நாளும் போற்றிட அருமை அறிவுரை!
அதன்படி நடப்போம் அல்லல் தவிர்ப்போம்!
நீச்சல் எதுவும் தெரிந்து கொள்ளாமல்
நீர்நிலை தன்னில் இறங்கி விடாதீர்!
வெளியே செல்லும் ஆசை இருந்தால்
பெற்றோர் சுற்றம் பெரியோர் துணையுடன்
சென்றிடும் வழக்கம் என்றும் நன்மையே!



காவிரி ஆற்றில் மாணவிகள் அடுத்தடுத்து விழுந்த நிலையில் கீர்த்தனா என்ற மாணவி மூன்று பேரைக் காப்பாற்றியது தெரியவந்துள்ளது. நீச்சல் தெரிந்த **கீர்த்தனா**வுக்கு வயது பதின்மூன்று. இவர் ஏழாம் வகுப்பு படித்து வருகிறார். இவர் ஆற்றில் தத்தளித்துக் கொண்டிருந்த மூன்று மாணவிகளின் தலைமுடியைப் பிடித்து இழுத்துக் கரை சேர்த்துள்ளார். சாய் திவ்யதர்சினி, இரேணுகா உள்பட மூன்று பேரைக் காப்பாற்றினார்.



கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக



# குறள்  விருந்து




குறள்நெறி பரப்பத் **திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்**

தி.வ.ஆ.-2054 வைகாசி- 10 பொ.ஆ.-2023 மே-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









குறளைக் கற்போம் குழந்தைகளே

குன்றெனப் புகழைக் குவிப்போமே

பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்

நெஞ்சில் நன்னெறி விதைப்போமே

சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்

பெருமைகள் பலவும் சேர்ப்போமே

வள்ளுவர் தந்த வான்மறையால்

வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே

நாடும் வீடும் நலம் பெறவே

நாளும் குறளைக் கற்போமே

கசடறக் கற்றுத் தெளிவோமே

கற்றபின் அதன்வழி நிற்போமே

வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே

வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



# வணக்கம்.வாருங்கள்.



## பள்ளிப் படிப்பை முடித்தவரா?

போட்டித் தேர்வே பெரிதென்றே
பெற்றோர் மிரட்டும் நேரம் இதே!
வேண்டும் என்றே மிரட்டவில்லை!
உங்கள் வாழ்க்கை சிறப்புப் பெறவே
அவர்கள் காணும் கனவு வெல்ல
உங்களைத் தொல்லை செய்வது இயல்பே!
ஒன்றை மட்டும் என்றும் மறவேல்!
வையகம் பெரிதே வாய்ப்புகள் மிகுதி!
மதிப்பெண் மட்டுமே வாழ்க்கை அல்ல!
மருத்துவம் பொறியியல் மட்டுமா உலகம்!
உங்கள் ஆற்றல் மிகவும் பெரிதே!
திண்ணிய எண்ணமும் திடமிகு முயற்சியும்
எண்ணிய வாழ்வை நல்கிடுமே
உலகை வெல்வீர்! உயர்வு கொள்வீர்!
வாய்ப்புகள் நிறையக் காத்திருக் கின்றன!
எத்தனை விதமாய்க் கல்வித் துறைகள்!
எண்ணிப் பார்த்தால் வியப்பே மிகுதி!
நாளிதழ் ஊடகம் வழிகாட் டிடவே
நாடுவீர் பொருந்திய படிப்பைக் காணவே!
மாநில அரசும் ஒன்றிய அரசும்
போட்டி போட்டு உதவ வருகிறார்!
தேர்வீர் நல்ல துறையை எளிதாய்!
சேர்வீர் உமக்கு அண்மைப் பகுதியில்!
உழைப்பும் கருத்தும் செலுத்தும் மாணவர்
உயர்வைப் பெறுதல் உறுதியன்றோ?



**சிறுவர் இலக்கியம்**

**குறள் விளக்க நாடகம்**

# உயிரிலும் மேலானது

## முதுமுனைவர் முரசு நெடுமாறன்

(நம் இதழின் சிறப்பாசிரியர்.உலகப்புகழ்பெற்ற பாவலர்.மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி.தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்ட அயலகத் தமிழர் என்னும் பெருமைக்குரியவர்.மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.)

காட்சி : 1

இடம் : தங்கமணி இல்லம்

நேரம் : காலை

கதை மாந்தர் : தங்கமணி, நல்லதம்பி, கண்மணி

நிலை : அதியமான், ஐயாவிடம் திருக்குறள்பயில மூவரும் புறப்படுதல்

***நல்லதம்பி : (வீட்டின் கதவருகில் நின்றபடி) தங்கமணி, தங்கமணி நான்***

***ருக்கிறேன் ; கதவைத்திற.***



***: (கதவைத்திறந்து) வா நல்லதம்பி! தங்கை கண்மணியையும் அழைத்து வந்திருக்கிறாயா?***

நல்லதம்பி : ஆமாம் தங்கமணி. நாம் திருக்குறள் பயிலத் தமிழறிஞர் அதியமான் ஐயா வீட்டிற்குச் செல்வதாகச் சொன்னேன். தானும் வர விரும்புவதாகக் கண்மணி கூறினாள் ;. அழைத்து வந்தேன்.

தங்கமணி : என்னம்மா கண்மணி! உனக்குத் திருக்குறள் பிடிக்குமா ?

கண்மணி : என்ன அண்ணா இப்படிக் கேட்கிறீர்கள் ? அது நம் அறநூல் அல்லவா? அந்த நூலைப் படித்துத் தேர்ச்சிபெற வேண்டுவது நம் கடமை அல்லவா?

நல்லதம்பி : அவ்வப்போது என்னிடம் திருக்குறள் விளக்கம் கேட்பாள். எனக்குத் தெரிந்தவரை விளக்குவேன்.

தங்கமணி : உன் அண்ணன் நல்லதம்பி உன்னைப் பற்றிப் பெருமையாகச் சொல்வான். நீ படிப்பில் கெட்டிக்காரி என்று புகழ்வான்.

கண்மணி : படிப்பில் எனக்கு ஆர்வம் அதிகம் அண்ணா. திருக்குறளை நன்கு படித்துப் புரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன்.

தங்கமணி : ஐயாவிடம் நாம் திருக்குறள் படிக்கத் தொடங்கினால் , கண்மணி மிக விரைவில் அதில் தேர்ச்சிபெற்று விடுவாள். நம்மைப் பின்னுக்குத்தள்ளி விடுவாள்.



கண்மணி : நீங்கள் நன்கு கற்று என்னைப் பின்னுக்குத் தள்ள முயலக் கூடாதா?

தங்கமணி : யாரும் யாரையும் பின்னுக்குத் தள்ள வேண்டா. நாம் மூவரும் திருக்குறள் கற்றுத் திறமை பெறுவோம். சரி, புறப்படுவோம்.

காட்சி முடிவு.

காட்சி : 2

இடம் : அறிஞர் அதியமான் இல்லம்

நேரம் : காலை

கதை மாந்தர் : அதியமான், தங்கமணி, நல்லதம்பி, கண்மணி

நிலை : திறந்திருந்த அதியமான் இல்லத்தில் , அவர் நாற்காலியில் அமர்ந்திருத்தல். தங்கமணி , நல்லதம்பி , கண்மணி ஆகியோர் அவரை வணங்குதல்.

***தங்கமணி : ஐயா! வணக்கம். என்னுடன் நல்ல தம்பியும் அவன் தங்கை கண்மணியும் வந்துள்ளனர்.***

அதியமான் : மகிழ்ச்சி. உட்காருங்கள். முதலில் உங்களைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்கள். தங்கமணியைப் பற்றியும் எனக்கும் ஓரளவே தெரியும்.

தங்கமணி : ஐயா! நான் தமிழ்ப்பள்ளியில் ஆறாம் வகுப்புப் படிக்கிறேன். வகுப்புத் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளேன்.

நல்லதம்பி : நானும் அதே பள்ளியில் , அதே வகுப்பில் பயில்கிறேன் ஐயா . நூலகப் பொறுப்பாளனாகக் கடமை புரிந்து கொண்டிருக்கிறேன்.

கண்மணி : நானும் அதே பள்ளிதான். ஐயா வகுப்பு மாணவர்களின் கட்டொழுங்கைக் கவனித்துக் கொள்வது என் பொறுப்பு.

அதியமான் : நீங்கள் ஒவ்வொருவரும் பொறுப்புள்ள பதவியை வகித்து வருகிறீர்கள். திருக்குறளை நன்கு படித்துத் தேர்ந்தால்

எதிர்காலத்தில் மிக நல்ல பொறுப்புள்ள தலைவர்களாக வளர்ந்து புகழ்பெறுவீர்கள்.

மூவரும் : நன்றி ஐயா!

அதியமான் : இன்று இந்த வகுப்பின் முதல்நாள். அதனால் , உங்களுக்கு ஐயம் ஏற்படுத்தும் குறட்பாக்களுக்கு விளக்கம் கூறுவேன். அடுத்த வாரம் முதல், நான் தேர்ந்தெடுக்கும் குறட்பாக்களுக்கு விளக்கம் கூறுவேன்.

தங்கமணி : நல்லதுங்க ஐயா. நீங்கள் விரும்புவதுபோலவே குறள் வகுப்பை நடத்தலாம்.

கண்மணி : ஐயா! நான் என் வகுப்பில் கட்டொழுங்குப் பொறுப்பாளராக இருக்கிறேன் என்பதை முன்பே கூறினேன். எனக்கு ஒரு விளக்கம் தேவைப்படுகிறது ஐயா!

அதியமான் : என்ன விளக்கம் வேண்டும் ? கேள் கண்மணி

கண்மணி : ஒழுக்கம் என்றால் என்ன ஐயா ? இது பற்றித் திருவள்ளுவர் என்ன கூறுகிறார்?

அதியமான் : இதுதான் ஒழுக்கம் என்று திருவள்ளுவர் எதனையும் வரையறுத்துக் கூறவில்லை. ஒழுக்கமுடைமை என்ற 14ஆம் அதிகாரத்தில் அவர்

“உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார் (140) என்கிறார்.

நல்லதம்பி : இதன் பொருள் என்ன ஐயா ?

அதியமான் : உலகவாழ்க்கைக்குப் பொருந்துமாறு நடந்து கொள்வதுதான் ஒழுக்கம் என்கிறார். இதனில் எல்லாம் அடங்கிவிட்டது.

கண்மணி : இன்னும் கொஞ்சம் விளங்குமாறு கூறுங்கள் ஐயா.

அதியமான் : எவ்வளவு கற்றிருந்தாலும் உலக மக்களுடன் ஒத்துவாழும் முறையை அறியாதவன் அதுவும் கல்லாத அறிவிலியாவான், வாழும் முறை என்பது, பல ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து அனுபவப்பட்ட சான்றோர்களால் வகுத்துச் சென்ற நெறியாகும். இரவில் படுத்துக் காலையில் கண் விழித்து எழ வேண்டும் என்பது ஒரு பொதுவான நெறி. இப்படி அல்லாமல், இல்லை "இல்லை காலையில் படுத்து இரவுவரை தூங்கி எழுவதே நல்லது" என்று சொல்வது பொருந்துமா ? இதுபோல் நிறைய எடுத்துக் காட்டுகள் கூறலாம். உலகத்தோடு ஒட்ட ஒழுகல் என்பதில், உலகம் என்று உயர்ந்த மக்களாகிய சான்றோரைக் குறிக்கும்.

தங்கமணி : "ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும் (131) என்று திருவள்ளுவர் கூறியுள்ளாரே, ஒழுக்கம் உயிரைவிடப் பெரிதா ஐயா?

அதியமான் : ஆம் ! ஒழுக்கம் உயிரைவிடச் சிறந்ததுதான். நம்மிடம் இருக்கும் பணத்தை இழந்து விட்டால் மீண்டும் உழைத்துச் சம்பாதித்து விடலாம். ஆனால், தீயசெயல் செய்து ஒழுக்கம் கெட்டவன் என்று பெயர் எடுத்துவிட்டால், இழந்த நல்ல பெயரை மீட்க முடியுமா?

நல்லதம்பி : உயிரை இழந்துவிட்டால் வாழவே முடியாதே ஐயா. ஒழுக்கம் கெட்டவர்களும் வாழ்கிறார்களே.

அதியமான் : வாழ்கிறார்கள். எப்படி வாழ்கிறார்கள் ? “இழிந்தவர்கள்” என்ற பெயரோடு மானம் இழந்து நடைப் பிணம்போல வாழ்கிறார்கள். அது வாழ்வா ? அந்த உயிருக்கு மதிப்புண்டா ? ஏதோ ஓ ர் விபத்திலோ நோய்வாய்ப்பட்டோ உயிர் இழக்க நேர்ந்தாலும் “நல்ல மனிதர் போய்விட்டாரே!” என்று இரக்கப்பட்டு அவரை மக்கள் போற்றுவர். தீயவரை நோக்கி இந்தப் பாவி ஏன் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறான். என்பார்களே தவிர, பாராட்டி வாழ்த்த மாட்டார்கள்.




தங்கமணி : ஒழுக்கத்தின் மதிப்பு இப்பொழுது புரிகிறது ஐயா.

கண்மணி : ஐயா! குறள் எனக்கு ஒன்றாக விளங்குகிறது. என் வகுப்பில்

பயிலும் மாணவர்களுக்கு இக்குறளை எடுத்துக் கூறி விளக்குவேன்.

அதியமான் : கண்மணி , 14ஆம் அதிகாரத்தின் அந்தக் முதல் குறளை மீண்டும் கூறு.

கண்மணி : “ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்

உயிரினும் ஓம்பப் படும்.”

அதியமான் : அக் குறளை மீண்டும் விளக்குவேன். மனத்தில் பதியவைத்துக் கொள்ளுங்கள்.

மூவரும் : நல்லது ஐயா விளக்குங்கள்.

அதியமான் : ஒரு மனிதன் மற்றவர்கள் மதிக்கத்தக்க நல்ல முறையில் வாழ வேண்டும்; புகழ்பெற வேண்டும் ; மானம்மிக்கவனாக உயர்வு பெற வேண்டும் என்றால் , அவன் ஒழுக்கம் மிக்கவனாகத் திகழ வேண்டும். ஆகவே, ஒழுக்கத்தை உயிரைவிட மேலாகப் போற்ற வேண்டும். இதனை உணர்த்தத்தான் திருவள்ளுவர்

“ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.” என்றார்.

மூவரும் : குறளின் பொருள் நன்கு விளங்கி விட்டது ஐயா . உங்களுக்கு மிக்க நன்றி.

அதியமான் : நல்லது போய்வாருங்கள்.

- நாடகம் நிறைவு -

குறள்விளக்கக் கதை

# எண்ணிய எண்ணியாங்கு எய்துப



**செ.குருபரன்** (பன்னிரண்டாம் வகுப்பு,பால வித்தியா மந்திர்,அடையாறு)



குமரன் பதினோராம் வகுப்பு படிக்கும் மாணவன்.அவனுக்குத் தன் வாழ்க்கையை மகிழ்ச்சியாகவும் வளமாகவும் அமைத்துக் கொள்ளவேண்டும் என்னும் ஆசை இருந்தது.ஆனால் அவனது குடும்பத்தில் அவன் இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றவேண்டும் என எதிர்பார்த்தனர்.தனது பெற்றோரும் உறவினரும் ஆசைப்பட்டதைப் போன்று இராணுவத்தில் சேர அவன் விரும்பவில்லை.அவர்கள் எண்ணத்தைத் தட்டிக் கழிக்கத் திட்டமிட்டான்.கண் கண்ணாடி அணிந்தவர்களை இராணுவத்தில் சேர்த்துக்கொள்ளமாட்டார்கள் என்று கேள்விப்பட்டான்.

அப்படிக் கேள்விப்பட்டவன்  வீட்டுக்கு வந்தவுடன் “ஐயோ!எனக்குக் கண்வலிக்கிறதே!” என்று கதற ஆரம்பித்துவிட்டான்.உடனடியாக அவனைக் கண்மருத்துவரிடம்  அழைத்துச் சென்றார்கள். மருத்துவர் வலியுடன் வந்த குமரனின் கண்பார்வையைச் சோதனை செய்து “கிட்டப் பார்வைதான்.வேறு நோய் எதுவுமில்லை.கண்கண்ணாடி அணிந்துகொண்டால் கண்வலி நீங்கிவிடும்.இல்லாவிட்டால் கண்வலியோடு தலைவலியும் சேர்ந்து தொல்லை தரும்.அணியவேண்டிய கண்ணாடி இப்போது தேவைப் படுவதைவிடத் திறன் கூடிவிடும்.” என அறிவுரை கூறினார். அவர்கூறியபடியே குமரனுக்குக் கண்ணாடியும் அணிவித்துவிட்டனர்.



அதன்பின் ஒருமுறை அவனது பள்ளியில் அவ்வூரிலிருந்த இராணுவப் பயிற்சிக் கல்லூரிக்கு அழைத்துச் சென்றனர்.அங்கே வழங்கப்படும் பயிற்சியும் அதன்பின் பெறப்போகும் சிறந்த வேலைவாய்ப்பும் குமரனது

உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்துவிட்டன.இராணுவத்துக்கே போகமாட்டேன் எனப் பிடிவாதத்துடன் இருந்த குமரன் இராணுவத்தில் எப்படியாவது சேரவேண்டுமே என ஏங்க ஆரம்பித்தான்."அய்யோ!இந்தக் கண்ணாடி அணிந்த கண்ணுடன் நான் எப்படி இராணுவத்தில் சேரமுடியும்"எனத் தேம்பி அழ ஆரம்பித்துவிட்டான். "வைத்தால் குடுமி!நினைத்தால் மொட்டை"என்னும் ஊசலாட்டம் இதுதானோ?

அவன் தாயார் ஆறுதல் கூறினார்கள்."காலம் முழுதும் கண்ணாடி அணிய வேண்டியதில்லை;சில பயிற்சிகளைச் செய்யவேண்டும்.பச்சைக் காய்கறி,கீரை,மீனெண்ணெய் சேர்த்துக்கொள்ளவேண்டும்."என்பது போன்ற சில அறிவுரைகளைக் கூறி ஆறுதல்படுத்தினார்கள்.ஆனால் அவனது அப்பாவோ"ஒருமுறை கண்ணாடி அணிந்தால் வாழ்நாள் முழுதும் கண்னாடி அணிந்துதான் ஆகவேண்டும்"எனக் கூறினார். வாழ்வில் எதிர்மறைக் கருத்துகளுக்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதில் உறுதியாக இருந்த குமரன் அம்மா சொன்ன அறிவுரைகளை மனத்துட் கொண்டு கண்பயிற்சி செய்தான்.வைட்டமின்கள் ஏ,டி,இ நிறைந்த உணவுவகைகளை அம்மா சொன்னது போலவே கட்டுப்பாடாக உண்டுவந்தான்.

இப்படியே இரண்டு ஆண்டுகள் உருண்டு ஓடிப்போய்விட்டன. முழுநம்பிக்கையுடன் மீண்டும் கண்பரிசோதனைக்குப் போனான் குமரன். என்ன ஆச்சரியம்!அவனது பார்வைக்குறை முற்றிலும் நீங்கிவிட்டது. அவன் அணிந்திருந்த கண்னாடி +1 எனத் தொடக்கநிலையில் இருந்ததாலும் அவனது கண்பயிற்சி முறையானதாகவும் சிறப்பாகவும் அமைந்திருந்ததாலும் அக் குறை முழுமையாக விலகிவிட்டது எனக்

கண்மருத்துவர் கூறியது அவனுக்கு மட்டுமல்ல அந்தப் பயிற்சியை அவனுக்கு அறிவுறுத்திய அவனது தாயாருக்கும்-ஏன்,அவனது வீட்டாருக்கும் நண்பர்களுக்குமே—பெரும் மகிழ்ச்சியளித்தது.

வெற்று ஆசையுடனே சோம்பியிராமல் முயற்சியும் பயிற்சியும் மேற்கொண்டு தான் எண்ணிய எண்ணத்தை ஈடேற்றிக்கொண்ட குமரன் நமக்குச் சொல்வது என்ன?

**எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்**
**திண்ணியர் ஆகப் பெறின்- குறள்** 666

ஒன்றைச் செய்ய எண்ணியவர் அதைச் செய்து முடிப்பதற்கு ஏற்ற மனஉறுதியை உடையவராக இருந்தால், அடைய நினைத்தவற்றை எல்லாம் அவர் எண்ணப்படியே அடைவார்.

தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்

மெய்வருத்தக் கூலி தரும்- குறள் 619

கடவுளே என்று கூவி அழைப்பதால் நடக்காத காரியம் ஒருவர் முயற்சியுடன் உழைக்கும் போது அந்த உழைப்புக் கேற்ற வெற்றியைத் தரும்.





கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்
பெருமையின் பீடுடையது இல்”

# உழைப்பின் உயர்வு

**தாமரை சீனிவாசராவ்**

[திருமதி.தாமரை சீனிவாசராவ் நம் இதழின் பொறுப்பாசிரியர்;முற்போக்கு எழுத்தாளர்;பல மகளிர் அமைப்புகளின் ஒருங்கிணைப்பாளர்;கம்போடியா நாட்டு ஆங்கோர் தமிழ்ச்சங்கப் பொருளாளர்;பல மாநாடுகளைத் திறம்பட நடத்திய பெருமைக்குரியவர்.]

ஆசிரியர்:காலை வணக்கம் குழந்தைகளா.அனைவரும் நலமா?இந்தப் பள்ளி விடுமுறை தொடங்கும் முன்னர் உங்களுக்கெல்லாம் முக்கியமான ஒரு நாளைப் பற்றிய செய்தியைச் சொல்ல போகிறேன்.யாருக்காவது அந் நாளைப் பற்றி தெரியுதான்னு பார்ப்போம்.

மாணவர்கள்: சரிங்க ஐயா.

ஆசிரியர்: மே ஒன்றாம் தேதி என்ன நாளென்று உங்களால சொல்ல முடியுமா?

மாணவர்கள் சிலர்: தெரியும் ஐயா,அன்று தான் உழைப்பாளர் நாள்.

ஆசிரியர்: பரவாயில்லையே...எப்படித் தெரியும் உங்களுக்கு? என்று கேட்டார்.

மாணவர்கள் :

எங்கப்பா ஓட்டுநராக இருக்கிறார் என்றும்,

தொழிற்சாலையில் வேலை செய்கிறார் என்று சிலரும் கூறினர்.அவர்கள் அன்று கொடியேற்றிக் கொண்டாடுவார்கள் ஐயா,எனச் சிலரும் கூறினர்

.




ஆசிரியர்:நன்று என அவர்களைப் பாராட்டினார் .ஆம் உண்மை தான்,ஆனால் அதைப் பற்றி விவரமாகக் கூறுகிறேன் கேளுங்கள் என்றார்.

மனிதக் கூட்டம் நாகரிக வாழ்க்கையில் அடியெடுத்து வைத்த நாள் முதல் இன்பமாகவும்,கூடி மகிழ்ந்திருந்தார்களா என்றால் கேள்விக்குறியே.அந்த கேள்விகளின் அடையாளமே இந்த சர்வதேச மனித உரிமை தினத்தின் கொண்டாட்டம்.முதலாளித்துவ அதிகாரப் போக்கை எதிர்த்தும் பதினாறு மணி நேரம், பனிரெண்டு மணி நேர உழைக்கும் நேரத்தை எட்டு மணி நேரமாக மாற்ற தொழிலாளர்கள் ஒன்று கூடிப் பலவிதமான போராட்டங்களை நடத்தி,குருதி சிந்தி உயிர்த் தியாகம் செய்தனர்.அந்த கடின உழைப்பின் பலனாக எட்டு மணி நேரமாக வேலைச் சுமை குறைக்கப்பட்டது.அதுமட்டுமல்லாமல் தொழிலாளர்களின் உடல் நலத்திட்டங்கள்,சுய பாதுகாப்பீட்டுத் திட்டங்கள் ஆகியனவும் நிறைவேற்ற இப்போராட்டங்கள் பெரு உதவி புரிந்தன.

மாணவர் :அப்போ அவ்வளவு பேரும் துன்பப்பட்டு தான் பணி நேரத்தைக் குறைத்தார்களா ஐயா?

ஆசிரியர்: ஆமாம்,அது ஒரு நெடிய போராட்டம்.ஆனால் அனைவரும் ஒன்று கூடிப் போராடியதால் அதற்கு பலன் கிடைத்தது.முதன்முதலில் ஆத்திரேலியாவில் 15 மணி நேர பணி நீட்டிப்பை குறைக்க நடந்த இப்போராட்டத்திற்காக அமெரிக்காவிலும் குரல் எழுந்தது.அதன் பிறகு 1886 ஆம் ஆண்டு மே 1 ல் சிகாகோ நகரில் தொழிலாளர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து மிகப்பெரிய போராட்டத்திற்கு வழி வகுத்தார்கள்.இதன் மூலம் பல்வேறு விதமான அரசின்

மிரட்டல்கள்,அச்சுறுத்தல்கள்,துப்பாக்கிச் சூடுகள்,உயிர்ப்பலி என எதற்கும் அஞ்சாமல் நின்ற உழைப்பாளர்களைக் கண்டு அரசு அஞ்சியது.அவர்களின் கோரிக்கையும் நிறைவேற்றப்பட்டது.

மாணவர்: நம்ம ஊர்ல அது போல போராட்டங்கள் நடக்கலயா ஐயா?

ஆசிரியர்: ஏன் நடக்கல? நமது செந்தமிழ் நாடு உழைப்பிற்கே பெயர் பெற்றது.ஒவ்வொரு தனி மனிதனும் தன்னுடைய உழைப்பை இறைவனுக்கு நிகராக நினைத்து உழைப்பவர்கள்.வேளாண்மை தொடங்கி,அனைத்து வேலைகளையும் கண்ணெனப் போற்றியவர்கள்.கடினமான வேலைகளையும் கடமை தவறாமல் புரிபவர்கள்.வள்ளுவனின் குறளுக்கு இணங்க வாழ்ந்தவர்கள்.

மாணவர்: ஐயா,அந்த குறளை சொல்லுங்களேன்.அதையும் தெரிந்துக் கொள்கிறோம்.

ஆசிரியர்: அதைச் சொல்லாமல் போவேனா?குடிசெயல்வகை அதிகாரத்துல 1021 குறள்- பிள்ளைகளா,“கருமம் செயஒருவன் கைதூவேன் என்னும்

பெருமையின் பீடுடயது இல்”
அதாவது தனக்குரிய கடமையைத் தவறாமல்,சோர்வு இல்லாமல் எவனொருன் செய்கிறானோ,அந்தப் பெருமைக்கு மேலான பெருமைக் கிடையாது.அதைவிட மேம்பாடான செயல் வேறில்லை என்கிறார் வள்ளுவர்.எனவே அப்படிப்பட்ட மேன்மை பொருந்திய உழைப்பாளர்களைக் கொண்ட நம் தமிழகத்தில்,அதற்காகப் போராடாமல் இருந்திருப்பார்களா! தமக்குரிய உரிமைகளைப் பெற துணிந்து செயல்படும் திண்ணிய நெஞ்சம் கொண்டவர்கள் நிறையப் பேர் இருந்தனர்.

தமிழகத்தில்,இந்தியாவின் முதல் தொழிற்சங்கவாதியான சிங்கார வேலர் தலைமையில் 1923 ஆம் ஆண்டு சென்னையில் போராட்டம் நடத்தினார்.பிறகு 8 மணி நேர வேலைத்திட்டத்தை 1942 ல் சட்டமாக்கிய பெருமை அண்ணல் அம்பேத்கரையே சாரும். இப்படியாக கசக்கி பிழிந்து,உழைப்புக்கேற்ற ஊதியம் பெற முடியாமல்,தங்களின் இரத்தத்திலுள்ள வேர்வையையும் சிந்தி போராட்டம் செய்து அனைவருக்கும் சம ஊதியம்,தொழிலாளர் பாதுகாப்பு இயற்றி,இப்போது இருக்கும் அமைதியான சூழ்நிலையை உருவாக்கியது பலர் செய்த தியாகங்கள் தான் என்றால் மிகையல்ல. எனவே உழைக்கும் வருக்கத்தை,தொழிலாளர்களை எந்நாளும் போற்றி

வணங்குவது நமது கடமை.1959 ஆம் ஆண்டு சென்னையில் நிறுவப்பட்ட உழைப்பாளர் சிலையும்,1990 ம் ஆண்டு நேப்பியர் பூங்கா,மே தினப் பூங்காவாக பெயர் மாற்றம் செய்யப்பட்டது கூடுதல் பெருமை.உழைக்கும் மக்களின் பெருமையை போற்றுவோம்.நாடு செழிக்க அவர்கள் செய்யும் தியாகங்களை மதிப்போம்.என்ன குழந்தைகளே?சரிதானே...

மாணவர்கள்: ஆமாங்க ஐயா,நீங்க கூறுவது தான் உண்மை.அவர்கள் தியாகங்களை மதிக்க வேண்டும்.அப்படிப்பட்டவர்களின் தியாகம் தானே இன்று என் அப்பா போன்றவர்கள் தைரியமாகவும்,தன்னம்பிக்கையுடன் உழைக்கவும் காரணமாயிருக்கிறது..

ஆசிரியர்: அவர்கள் மட்டுமல்ல,நமக்காக உணவுப் பொருட்கள் தயார் செய்யும் விவசாயிகள்,துப்புரவு பணியாளர்கள்,கட்டிடத் தொழிலாளர்கள் என அனைவரும் நாம் மதிக்க வேண்டியவர்களே.அதுமட்டுமல்ல தன் குடும்பத்திற்காக உழைத்து, பிள்ளைகளைப் பேணி,நல்ல முறையில் வளர்க்கும் தாய்மார்களும் சிறந்த உழைப்பாளிகளே.நம்முடைய வளர்ச்சிக்கும்,நாட்டினுடைய முன்னேற்றத்திற்கும் முயற்சியெடுத்து சோர்வில்லாமல் கடுமையாக உழைக்கின்ற அனைவருமே நாம் வணங்க வேண்டியவர்கள் தான்.

மாணவர்: ஐயா,எனக்கு என் அம்மாவைப் பற்றி சில வார்த்தைகள் கூற வேண்டும்.எங்கம்மாவை நினைத்து மிகவும் பெருமைப் படுகிறேன்.அப்பா இல்லாத சூழலிலும்,என்னையும் பாப்பாவையும் அவர்கள் எவ்வளவு அழகா பார்த்துக்கறாங்க தெரியுமா!

ஆசிரியர்: ஏனப்பா அப்பாவுக்கு என்னவாயிற்று?




மாணவர்: அவர் ஒரு விபத்தில் இறந்துட்டார்.அதனால அவருடைய பணியை அம்மாவுக்கு அந்த தொழிற்சாலையிலேயே கொடுத்தாங்க.அம்மா இப்போ வீட்டு வேலையும் பார்த்து,எங்களையும் கவனித்து,வேலைக்கும் போறாங்க.அவங்கக்கிட்ட இதுவரையும் நான்



தொழிலாளர் தின வாழ்த்துக்களை சொன்னதே இல்லை.ஆனா நீங்க சொன்ன பிறகு எங்கம்மாவும் எவ்வளவு பெருமை மிக்க உழைப்பாளின்னு தெரியுது.கட்டாயமா மே ஒன்று அன்று நான் முதல் வாழ்த்தைச் சொல்லப் போறேன்..

ஆசிரியர்: சிறப்பு செல்வமே...நீ வாழ்த்துக்களைச் சொன்னால் அதுவே அவருக்கு பெரு மகிழ்வைத் தரும்.

அது மட்டுமல்ல பிள்ளைகளே,இப்போது நீங்க இந்த மாணவப் பருவத்தில் யாரை உயர்வாகப் போற்ற வேண்டும்?சொல்லுங்க பார்ப்போம்.

மாணவர்: எங்க பெற்றோரை ஐயா.அவர்கள் தானே,எங்களுக்காக இவ்வளவு கடினப்பட்டு எங்களுக்காக உழைக்கிறாங்க.

ஆசிரியர்: அருமை பிள்ளைகளே...உங்களுக்கெல்லாம் எனது கைத்தட்டல்கள்.உங்களுடைய பெற்றோரால் தான் இன்று நீங்கள் கல்வி பயில்கிறீர்கள்.நல்ல உடையும்,சத்தான உணவும் கிடைக்கப் பெறுகிறீர்கள்.அவர்களுக்கு நீங்கள் திரும்ப என்ன செய்ய வேண்டும்?

மாணவர்: அவர்களுக்கு நாங்கள் நன்றாக படித்து,நல்ல ஒழுக்கமான மாணவராக எல்லோரிடமும் பாராட்டுப் பெற்றால் மகிழ்ச்சியாக இருக்கும் ஐயா.

ஆசிரியர்: நன்று!நன்று! அப்படித்தான் இருக்க வேண்டும்.உங்கள் நலனில் அக்கறை கொண்டவர்களுக்கு நீங்கள் செய்யப் போகும் கைம்மாறு அதுவே.சரி அனைவரும் விடுமுறையை பயனுள்ள வகையில் கொண்டாடுங்கள்.வெயிலில் வெளியில் விளையாடாமல்,நல்ல நீதி நெறி புத்தகங்களைப் படியுங்கள்.அம்மாவிற்கு வீட்டு வேலைகளில் உதவி செய்யுங்கள்.உங்கள் வீட்டிலோ அல்லது அக்கம்பக்கத்தில் இடமிருந்தால் பறவைகளுக்கும்,விலங்குகளுக்கும் தண்ணீர் வையுங்கள்.அவைகள் தங்கள் தாகத்தை தீர்த்துக் கொள்ள உதவியாக இருக்கும்.வீட்டிற்கு வரும் விருந்தினரை அன்பாய் வரவேற்று,அருந்த தண்ணீர் கொடுத்து கவனியுங்கள்.தாத்தா,பாட்டியிடம் நல்ல கதைகளைக் கேளுங்கள்.என்ன சரியாகச் செய்வீர்கள் தானே...

மாணவர்: கட்டாயமாக தாங்கள் கூறியபடி செய்வோம் ஐயா.

ஆசிரியர்: நன்று.அனைவருக்கும் மே தின வாழ்த்துகள்.பத்திரமாக சென்று வாருங்கள்.

( வகுப்பு இனிதே நிறைவடைந்தது..)



கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக



# குறள் விருந்து





குறள்நெறி பரப்பத் திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்

தி.வ.ஆ.-2054 ஆனி- 9 பொ.ஆ.-2023 சூன்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்



குறளைக் கற்போம் குழந்தைகளே
குன்றெனப் புகழைக் குவிப்போமே
பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்
நெஞ்சில் நன்னெறி விதைப்போமே
சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்
பெருமைகள் பலவும் சேர்ப்போமே
வள்ளுவர் தந்த வான்மறையால்
வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே
நாடும் வீடும் நலம் பெறவே
நாளும் குறளைக் கற்போமே
கசடறக் கற்றுத் தெளிவோமே
கற்றபின் அதன்வழி நிற்போமே
வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே
வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

# வேண்டவே வேண்டாம் தற்கொலை எண்ணம்




தற்கொலை எண்ணம் வேண்டவே வேண்டாம்!
தம்பிகள் தங்கைகள் தயவாய்க் கேளுங்கள்!
அப்பா அம்மா தாத்தா பாட்டி
அழுது புலம்பி தேம்பிப் புரண்டிட
அய்யோ அந்தக் கொடுமைத் துயரம்
எண்ணிப் பார்த்து எண்ணத்தை மாற்றுங்கள்
தற்கொலை எண்ணம் வேண்டவே வேண்டாம்!
தம்பிகள் தங்கைகள் தயவாய்க் கேளுங்கள்!



கயிற்றுச் சுருக்கும் புடவைத் தலைப்பும்
கழுத்தைச் சுருட்டிக் கதிகலங்குவதும்
ரயிலடிப் பாதையில் தலையை வைத்தே
துடியாய்த் துடித்தே பலியாய்க் கொடுத்தும்
குளத்தில் ஏரியில் ஆற்றில் கடலில்
குதித்து விழுந்து நீரில் மூழ்கியும்




பூச்சி மருந்தும் எலிப்பாசாணமும்
பாலிடால் போன்ற கிருமிகொல்லியும்
அமுதம் என்றே அள்ளிக் குடித்தும்
பெற்றவர் மற்றவர் பேதலித்திடவே
அப்படி என்னதான் வெறுப்பு வந்திடுமோ?
அற்பமாய் உயிரை அவமதித்தே விடும்
தற்கொலை எண்ணம் வேண்டவே வேண்டாம்!
தம்பிகள் தங்கைகள் தயவாய்க் கேளுங்கள்!



அம்மா அப்பா அன்பைக் குழைத்தே
ஆக்கிக் கொடுத்த உனது உயிரைப்
போக்கிக் கொள்ள உனக்கென்ன உரிமை?
போனால் வருமா பொன்னான வாழ்க்கை?
தேர்வில் தோல்வி காதல் முறிவு
குடும்பச் சண்டை கடனால் தொல்லை
என்னென்ன காரணம் நீ சொன்னாலும்
தற்கொலை எண்ணம் வேண்டவே வேண்டாம்!
தம்பிகள் தங்கைகள் தயவாய்க் கேளுங்கள்!



சிறுவர் இலக்கியம்
குறள் விளக்க நாடகம்

**பொறாமைப் பண்பு கூடவே கூடாது!**

# முதுமுனைவர் முரசு நெடுமாறன்

(நம் இதழின் சிறப்பாசிரியர்.உலகப்புகழ்பெற்ற பாவலர்.மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி.தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்பட்ட அயலகத் தமிழர் என்னும் பெருமைக்குரியவர்.மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.)

**காட்சி : 1**

இடம் : வீட்டின் ஒரு பகுதி

நேரம் : மாலை

கதை மாந்தர் : மெய்யப்பன், அருள்மங்கை, அழகன்

நிலை : தந்தையுடன் பிள்ளைகள் உரையாடுதல் , கதை சொல்லும் கலைஞரை வீட்டிற்கு அழைக்கத் திட்டமிடல்.

அருள்மங்கை : அப்பா, நம் ஊருக்குக் கதை சொல்லும் ஒருவர் வந்திருக்கிறாராமே?

மெய்யப்பன் : ஆமாம். அவர் கதை சொல்வதில் வல்லவர். எந்தச் சிக்கலையும் கதை சொல்லி அதன் மூலமே தீர்த்துவிடுவார்.

அழகன் : அப்பா அவரை உங்களுக்குத் தெரியுமா?

மெய்யப்பன் : அவர் எனக்கு நண்பர்தான்.அடிக்கடி சந்தித்துக் கொள்வதில்லை. பெரும்பாலும் தொலைபேசி வாயிலாகவே உரையாடிக் கொள்வோம்.

அருள்மங்கை : அவர் திருக்குறளுக்கு விளக்கம் கூறுவாரா?

மெய்யப்பன் : அவர் திருக்குறளை முழுமையாக உணர்ந்தவர். அதில் உள்ள 1330 குறள் பாக்களையும் கதைகள் மூலமே நம் மனத்தில் பதியும் வண்ணம் விளக்கிவிடுவார்.

அழகன் : அப்பா , அவர் ஆயிரத்துக்கு மேற்பட்ட கதைகள் சொல்வாரா?

மெய்யப்பன் : அவர் ஒரு கதைக் களஞ்சியம். அவரை எல்லாரும் ‘கதை சொல்லும் கலைஞர் கலைமணி’ என்றே அழைப்பார்கள்.

அருள்மங்கை : அவரை நம் வீட்டிற்கு அழைத்து வர முடியுமா அப்பா.

மெய்யப்பன் : அழைத்தால் வருவார்.

அழகன் : அவர் பொதுக்கூட்டங்களில் பெரியவர்களுக்காகப் பேசுவார். சிறுவர்களாகிய எங்களுக்கு அது விளங்காது.

மெய்யப்பன் : உண்மைதான் அவரைப் போன்ற அறிஞர்கள் பொதுக்கூட்டங்களில் பேசுவது உங்களைப் போன்றவர்களுக்குப் புரியாதுதான்.

அருள்மங்கை : அப்பா , நானும் தம்பியும் திருக்குறளை ஆழ்ந்து கற்றுக் கொள்ள விரும்புகிறோம். அவர் நம் வீட்டிற்கு வந்து கதை மூலம் குறளை விளக்கினால் எங்களுக்கு அதில் ஆழ்ந்த பற்று உண்டாகும் ; படிக்க வேண்டுமென்னும் ஆர்வம் பன்மடங்கு பெருகும்.

மெய்யப்பன் : எதிர்காலத்தில் நீங்களும் கதை மூலம் திருக்குறளைப் பரப்ப வேண்டுமென்று விரும்புகிறீர்களா?

இருவரும் : அப்படி விரும்புவது தப்பில்லையே அப்பா.

மெய்யப்பன் : அது நல்ல எண்ணம். உங்களைப் போன்ற சிறுவர்களுக்கு ஏற்படவேண்டிய நல்லெண்ணம். உங்கள் நல்ல எண்ணத்தைப் பாராட்டுகிறேன்.

அருள்மங்கை : எனக்கும் தம்பிக்கும் பெருமகிழ்ச்சி அப்பா. அந்தக் கதை சொல்லும் கலைஞரை நம் வீட்டிற்கு அழைத்துவர ஏற்பாடு செய்யுங்கள் அப்பா.

மெய்யப்பன் : ஏற்பாடு செய்வேன் ; உங்களைப் போன்ற சிறுவர்களுக்கு ஒரு கூட்டத்திற்கும் ஏற்பாடு செய்து அவரைப் பேச வைப்பேன்.

அருள்மங்கை : நீங்கள் நல்ல அப்பா. நாங்கள் மட்டும் பயன் அடைய வேண்டுமென்று நீங்கள் எண்ணாமல்...

அழகன் : விரும்பும் சிறுவரெல்லாம் பயன் பெற நினைக்கிறீர்கள்.

அருள்மங்கை : சிறுவர்கள் சார்பாக உங்களுக்கு நன்றி அப்பா.

மெய்யப்பன் : அதற்குத் தூண்டுகோலாய் அமைந்தவர்கள் நீங்கள் தாமே!

இருவரும் : நாங்கள் உங்கள் பிள்ளைகள் அல்லவா? (சிரிப்பு)

**காட்சி முடிவு**

**காட்சி : 2**

இடம் : வீட்டின் ஒரு பகுதி

நேரம் : காலை

கதை மாந்தர் : மெய்யப்பன், அருள்மங்கை, அழகன்

நிலை : (கதைசொல்லும் கலைஞர்), கலைமணி, மெய்யப்பன், அருள்மங்கை, அழகன்.

மெய்யப்பன் : நண்பரே, கதை கூறுவதில் கைதேர்ந்த கலைமணியே!

கலைமணி : என்ன மெய்யப்பன் அப்படிக் கூறுகிறீர்கள்? நீங்கள் என் நண்பர் அல்லவா? என்னை உங்கள் வீட்டிற்கு அழைத்தமைக்கு நான் தான் நன்றி சொல்ல வேண்டும்.

மெய்யப்பன் : இவர்கள்....................

கலைமணி : உனக்கு வாய்த்த நன் மக்கள் பேறு இவர்கள். இவர்களின் பெயர்கள்....

மெய்யப்பன் : இவள் அருள்மங்கை, இவன் தம்பி அழகன்.

கலைமணி : நல்ல பிள்ளைகள். அருள்மங்கை, அழகன் என்று நல்ல தமிழ்ப் பெயர்களைச் சூட்டி இருக்கிறாய்.

மெய்யப்பன் : இவர்கள் தமிழ்ப்பள்ளியில் படிக்கிறார்கள். திருக்குறளில் நல்ல தேர்ச்சி பெறவேண்டும் என்பது இவர்கள் விருப்பம்.

கலைமணி : நல்ல விருப்பம். மனம் இருந்தால் வழிபிறக்கும்.

மெய்யப்பன் : நல்லது. முதலில் நாம் சிற்றுண்டி அருந்துவோம். தொடர்ந்து நீ இவர்களுக்கத் திருக்குறள் வகுப்பு நடத்து. எனக்குக் கணினியில் முக்கிய வேலை இருக்கிறது. முடித்துவிட்டு வருவேன். இன்று மாலை நடக்கவுள்ள உங்கள் சொற்பொழிவு நிகழ்வில் நான் நீ சொல்லும் கதைகளைக் கேட்டு மகிழ்வேன்.

காட்சி முடிவு

**காட்சி : 3**

இடம் : வீட்டின் ஒரு பகுதி

நேரம் : காலை

கதை மாந்தர் : கலைமணி, அருள் மங்கை, அழகன்

நிலை : கலைமணி திருக்குறள் வகுப்பு நடத்துதல்.

அருள்மங்கை<br>அழகன் } : ஐயா வணக்கம்!

கலைமணி : வாழ்த்துகள்! உங்களுக்குக் கதை கேட்பதில் ஆர்வம் மிகுதியா?

இருவரும் : ஆமாம் ஐயா.

கலைமணி : உங்கள் ஆர்வத்தைப் பாராட்டுகிறேன்.

அருள்மங்கை : பொதுவான கதைகளை நூல்களில் நிறைய படித்திருக்கிறோம். நீங்கள் ஒவ்வொரு குறளைப் பற்றியும் அழகழகான கதை சொல்வீங்களென்று அப்பா சொன்னார்.

கலைமணி : நான் இப்பொழுது அந்தப் பணியைத்தான் செய்து வருகிறேன். நீங்கள் ஒரு குறளைக் கூறுங்கள். கதை மூலம் அதற்கு விளக்கம் கூறுவேன்.

அழகன் : “அழுக்காறு உடையான்கண் ஆக்கம் போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு” (135)

கலைமணி : இது ஒழுக்கம் உடைமைஎன்ற 14ஆம் அதிகாரத்தில் வரும் 5ஆம் குறள்.

அருள்மங்கை : இந்தக் குறளை ஒரு கதை மூலம் விளக்குங்கள் ஐயா.

கலைமணி : சரி கேளுங்கள்:

கண்ணப்பனுக்கு மற்றவர்கள் சிறப்புப் பெறுவது பிடிக்காது. எல்லாச் சிறப்புகளும் தனக்கு மட்டுமே கிடைக்க வேண்டும் என்று நினைப்பான். மற்றவர்கள் வெற்றி பெறுவதை எப்படியாவது தடுத்துவிட வேண்டுமென்று முயல்வான். உடம்பு வணங்கி உழைக்காமல் குறுக்கு வழியில் வெற்றி பெற வேண்டுமென்று நினைப்பான். கண்ணப்பனிடம் நல்ல திறமை இருந்த தெனினும் அவனிடம் பொல்லாத பொறாமை உணர்ச்சி மிகுதியாக இருந்தது.

அவனைப் பற்றி ஆசிரியர்கள் நன்கு அறிந்தவர்கள். வகுப்பில் அவனுக்குத் தலைமைப் பொறுப்பு எதுவும் தரமாட்டார்கள். வகுப்பு தலைமை , கட்டொழுங்கும் பொறுப்பாளர் நூலகப் பொறுப்பாளர், போன்ற எந்தப் பதவியும் அவனுக்குக் கிடைக்காது.

தான் திறமைசாலியாய் இருந்தும் தனக்கு வகுப்பில் எந்தப் பதவியும் கிடைக்கவில்லையே என்று வருந்தித் தனியே

உட்கார்ந்து அழுது கொண்டிருந்தான். அப்பொழுது அவன் வகுப்பாசிரியர் அந்தப் பக்கமாக வந்தார். அவனை இரக்கத்தோடு பார்த்து,

“கண்ணப்பா! ஏன் தனியே உட்கார்ந்து அழுது கொண்டிருக்கிறாய்? என்று கேட்டார். உடனே அவன்,

“ஐயா! வகுப்பில் எனக்கு எந்தப் பதவியும் தரவில்லையே , ஏன்? நான் என்ன தரங்கெட்டவனா?'' என்று அழுதான்.

“நீ திறமைசாலிதான். ஆனால் உன்னிடம் பொறாமைக் குணம் மிகுதி. மற்றவரிகள் திறமையை நீ மதிப்பதில்லை. எல்லாரும் திறமை அற்றவர்கள் , நான் மட்டுமே திறமைசாலி என்று நினைப்பவன். அதனால்தான் உனக்குத் தலை மைப் பொறுப்பு எதுவும் தரப்படவில்லை. நீ உன்னை மாற்றிக்கொள் ; பொறாமைக் குணத்தை விட்டு ஒழி. அடுத்தடுத்த ஆண்டுகளில் உனக்கும் தலைமைப் பதவி கிடைக்கும்” என்று ஆறுதல் கூறினார்.

அழகன் : அருமையான கதை ஐயா.

அருள்மங்கை : ஐயா! தங்கள் கதை பாதிக் குறளுக்கு மட்டுமே விளக்கம் கூறுவதாய் உள்ளது. மறுபாதிக் குறளுக்கு....

கலைமணி : மிகவும் நுட்பமாகக் கதையைக் கேடுள்ளீர்கள். மறுபாதிக் குறளுக்கும் ஒரு கதை கூறட்டுமா?

இருவரும் : கூறுங்கள் ஐயா! கூறுங்கள்!

கலைமணி : எங்கே குறளைக் கூறுங்கள்.

அருள்மங்கை : “அழுக்காறு உடையான்கண் ஆக்கம்போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு”

கலைமணி : பொறாமை கொண்டவனிடத்தில், திறமை இருக்கலாம், செல்வம் இருக்கலாம். ஆற்றல் இருக்கலாம் அவற்றால் மட்டும் அவன் புகழ் பெற்று விடமுடியாது. உரிய பலனை அடைந்து விடமுடியாது. இதுதான் பாதிக் குறளுக்கு விளக்கம்.

இருவரும் : விளங்குகிறது ஐயா. அடுத்த பாதி...

கலைமணி : இந்த விளக்கத்தை ஒட்டியே அடுத்த பாதிக் குறளின் பொருளும் அமைந்திருக்கிறது; கதையைக் கேளுங்கள்.

அந்த ஊரில் இளம் மாணவர்களை நல்வழிப் படுத்தும் நோக்கத்தில், ஒவ்வொரு சனிக்கிழமையும் நன்னெறி வகுப்பு ஒன்று நடந்து வந்தது. நல்ல மனம் கொண்ட ஆசிரியர்கள் சிலர் கூடி அந்த வகுப்பை நடத்தி வந்தனர். ஒழுக்கம் உயிரைவிட மேலானது என்பதை அந்த மாணவர்கள் உணரும் வண்ணம் அவர்கள் கற்பித்து வந்தனர். ஆண்டு இறுதியில் எல்லா வகையிலும் சிறந்த மாணவர்கள் ஐந்து பேருக்கு மிக உயரிய பரிசு வழங்குவார்கள்.

ஏழிசை என்ற மாணவி தான் திறமைசாலி ஆதலால் நினைவுப் பரிசு தனக்கே கிடைக்குமென்று நம்பிக்கையோடு காத்திருந்தான். ஆனால் அவளுக்குப் பரிசே கிட்டவில்லை. வகுப்பின் சராசரியான மாணவர்கள் சிலருக்கும் பரிசு கிடைத்திருந்தது.

ஏழிசை துடிதுடித்துப் போனாள். பரிசு கிடைக்காததை அவளால் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. அவள் துணிசல் மிக்க மாணவி ஆதலால் , உடனே அந்த வகுப்பின் தலைவர்

அறைக்குச் சென்றாள். அவள் முகம் கடுங் கோபத்தை வெளிப் படுத்தியது. சற்றும் பணிவுடைமையே இல்லாமல்,

‘ஐயா! எனக்கு ஏன் பரிசு கிட்டவில்லை. நான் என்ன முட்டாள் மாணவியா? இந்த வகுப்பில் கற்பித்த செய்யுள் , பாட்டுகளை யெல்லாம் இப்பொழுது மனப்பாடமாக ஒப்புவிக்கட்டுமா ? என்னிடம் என்ன குறை கண்டீர்கள் ? பரிசு பெற்றவர்களை என்னிடம் போட்டிக்கு வரச் சொல்லுங்கள். என்ன்னை வென்று காட்டச் சொல்லுங்கள்.’ என்றாள்.

தலைவர் : நீ திறமைசாலியான மாணவி என்பதில் ஐயமில்லை ஏழிசை ஆனால், இந்த வகுப்பு நன்னெறி வகுப்பு. இங்குக் கட்டொழுங்கிற்கே முதலிடம். நீ பெரும்பாலும் நேரத்தோடு வகுப்பிற்கு வருவதில்லை. இடையிடையே வராமலும் போவதுண்டு. காரணத்தை முன் கூட்டியே சொல்வதில்லை. நீ எப்போதும் நொறுவல் தீனியைக் கொறித்துக் கொண்டே இருப்பாய் வகுப்பு முடிந்தபின் பார்த்தால் நீ உட்கார்ந்திருந்த இடத்தில் குப்பைகள் குவிந்து கிடக்கும். மேலும் உன்னிடம் பணிவுடைமையும், இன்சொல்லும் வெளிப்படுவதில்லை. உனக்குப் பரிசு கிடைக்காமைக்கு இதுவே காரணங்கள்” என்றார். ஏழிசை எதுவும் பேசாமல் எழுந்து வெளியே சென்றாள்.

அருள்மங்கை : ஐயா , குறளின் பொருளை நீங்கள் கூறிய கதை நன்கு விளக்குகிறது ஐயா.

அழகன் : மீண்டும் ஒருமுறை குறள் முழுவதற்கும் விளக்கம் கூறுங்கள் ஐயா.

கலைமணி : கூறுவேன் , குறளை மிண்டும் கூறு.

அழகன் : “அழுக்காறு உடையான் கண் ஆக்கம் போன்று இல்லை
ஒழுக்கம் இலான்கண் உயர்வு”(குறள்-135)

கலைமணி : தீய குணங்களில் ஒன் றான பொறாமை உடையவனிடம் செல்வம் சேராது அல்லவா ? அது போல ஒழுக்கம் இல்லாதவனிடம் உயர்ந்த புகழ் சேராது.ஆகவேதான் ஒழூக்கம் உயிரைவிட மேலானது என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

அருள்மங்கை : ஐயா , உங்கள் இரண்டு கதைகளாலும் திருக்குறளை நன்கு புரிந்துகொண்டோம்.

இருவரும் : உங்களுக்கு நன்றி ஐயா!

மெய்யப்பன் : (வந்து கொண்டே) என்ன? திருக்குறள் பாடம் முடிந்ததா?

அழகன் : ஐயா இப்பொழுதுதான் பாடத்தை முடித்தார்.

அருள்மங்கை : ஐயா அழகான கதைகள் முலம் திருக்குறளை அருமையாக விளக்கினார அப்பா.

மெய்யழகன் : மகிழ்ச்சி. கலைமணி உனக்கு நன்றி.

கலைமணி : என்ன மெய்யப்பா! நீ எனக்கு நன்றி கூற வேண்டுமா?

மெய்யப்பன் : நன்றி கூறுவதுதானே முறை. சரி , ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள்.
உணவுக்குப் பின் மாலையில் சொற்பொழிவுக்குச் செல்ல வேண்டும்.

இருவரும் :அப்பா! நாங்கள்?

மெய்யப்பன் : உங்களையும் அழைத்துச் செல்வேன்.

இருவரும் : நன்றியப்பா !

நாடகம் நிறைவு -





# உண்மை நட்பு

**தாமரை சீனிவாசராவ்**

[*திருமதி.தாமரை சீனிவாசராவ் நம் இதழின் பொறுப்பாசிரியர்;முற்போக்கு எழுத்தாளர்;பல மகளிர் அமைப்புகளின் ஒருங்கிணைப்பாளர்;கம்போடியா நாட்டு ஆங்கோர் தமிழ்ச்சங்கப் பொருளாளர்;பல மாநாடுகளைத் திறம்பட நடத்திய பெருமைக்குரியவர்.*]

இவ்வுலகில் உறவுகளுக்கு அப்பாற்பட்டு,மற்றுமொரு வகையில் மனதால் இணைந்திருப்பது நட்பு மட்டுமே.அது குழந்தைப் பருவம் முதல்,முதுமை வரை தொடரக்கூடிய அற்புதமான இணைவு.சில வேளைகளில் உறவு முறைகளை விட அதிகமான பாசத்தோடு நட்பானது நெடும் பயணத்தையும்,பாசத்தையும் தன்னிலையில் கொண்டிருக்கும் உறவாக மாறுகிறது.அப்படிப்பட்ட நட்பிற்கு எல்லையே இல்லை.உரிமையுடன்,கள்ளம் கபடமில்லாமல்,சென்று கொண்டு இருக்கும்.ஒருவருக்கொருவர் உதவி புரிதல்,இன்ப,துன்பத்தில் சமமாக பங்கு கொள்ளுதல் ஆகியன நல்ல நட்பிற்கு சிறந்த அடையாளமாக பார்க்கப்படுகிறது.அது மட்டுமல்லாது சிறந்த நட்பு எங்கே காணப்படுகிறது என்றால்,நண்பரில் ஒருவர் பிழை செய்தாலும்,ஏதாவது தவறான வேலைகள் செய்தாலும் அதை மற்றவர் விரைந்து அச்செயலைத் தடுப்பதே சிறந்த நட்பாக பார்க்கப்படுகிறது.தன் நண்பன் எது வேண்டுமானாலும்,எச் செயல் செய்தாலும்,கண்டும் காணாமல் இருப்பது மிகுந்த

தீமைக்குரியது.அது நல்ல நட்பாகவும் ஆகாது.எனவே ஒருவர் தவறு செய்யும் போது அதை விரைந்து சென்று தடுக்க வேண்டும்.

உலக வரலாற்றில் ரோமானிய பேரரசை ஆண்ட ஜூலியஸ் சீசர் மற்றும் மார்க் அந்தோணியின் நட்பு மிகச் சிறந்த நட்பாக பார்க்கப்படுகிறது.ஜூலியஸ் சீசரை கொல்ல திட்டமிட்ட ரோமானிய அரசு புரூட்டஸை வைத்தே அவரைக் குத்திக் கொன்றது.மேலும் அவரைப் பற்றிய தவறான பரப்புரைகளை மக்களிடையே விதைத்தது. ஆனால் மார்க் அந்தோணி அவரின் நாட்டுப்பற்றையும்,மக்கள் மீது அவர் வைத்திருந்த நல்லெண்ணத்தையும்,அவர் இறந்த பிறகு கூட அனைவரிடமும் கூறி,அவருக்கு கெட்ட பெயர் வராமல்,அவருடைய உண்மையான நோக்கத்தைப் பிறரிடம் கூறி நட்பின் இலக்கணமாகத் திகழ்ந்தார்.

நமது நாட்டிலும் நட்பிற்கு அடையாளம் சொல்லும் ஏராளமான தரவுகள் உள்ளது.நமது வரலாறு மற்றும் இலக்கியங்களில் கூட நட்பின் பெருமையும்,வலிமையும் கூறப்பட்டுள்ளது.

ஔவையார்-அதியமான்,கோப்பெருஞ்சோழன்- பிசிராந்தையார், போன்றோரின் நட்பு பெரிதும் பாராட்டத்தக்கது.அந்த காலத்திலேயே ஆண்,பெண் நட்பு இருந்ததற்கான அடையாளமாகத் திகழ்ந்தது அந்நட்பு.மேலும் ஒரு பெண்பாற் புலவரிடம்,மன்னன் நட்பு பாராட்டுவதும்,அவரது தமிழுக்கு மதிப்பளித்து,விருந்து வைத்து மரியாதை செய்வதும்,அதைவிட, தனக்கு கிடைத்த நெல்லிக்கனியை அளித்து,தன்னைவிட ஔவை நெல்லிக்கனியை உண்டால் நீடு வாழ்வாள்,அதனால் தமிழ் வாழும் என்று கருதி அதை ஔவைக்கு அதியமான் அளித்ததாக வரலாறு கூறுகிறது.

அதே போல ஆபத்தான போர் மேகம் சூழ்ந்த தருணத்தில் தொண்டைமானிடம் சென்று,அதியமானின் படை பலத்தைப் பற்றிக் கூறி போர் நிகழாமல் தடுத்து நிறுத்தி இரு நாட்டின் நலத்தையும் காத்தார். ஔவையார்.இவ்வாறு ஆபத்து நேரும் காலங்களிலும் தேடி வந்து நண்பருக்கு உதவி புரிவது சிறந்த செயலாகப் பார்க்கப்படுகிறது.

பாண்டிய நாட்டில் இருந்த புலவர் பிசிராந்தையாரும்,சோழ நாட்டு மன்னன் கோப்பெருஞ்சோழனும் ஒருவரையொருவர் காணாமலேயே தீவிர நட்பு பூண்டனர்.மேலும் அக்காலத்தில் மேற்கொண்ட வடக்கிருந்து உயிர்நீத்தல் என்ற உண்ணாநோன்பிருந்து உயிர்விடும் முறைப்படி சோழ மன்னன் இருக்க,தன் நண்பரான பிசிராந்தையார் உறுதியாக காண வருவார்,தன்னுடன் வடக்கிருப்பார் என்று கூறி அவருக்கும் ஓர் இடத்தை ஆயத்தம் செய்யச் சொன்னார்.அவ்வளவு சிறப்பான நட்பின் அடையாளங்களை நம்மால் காண முடிகிறது.

இவ்வாறு போற்றப்படும் நட்பே மிகச் சிறந்தது.காலம் முழுவதும் பிறருக்கு உதாரணமாகத் திகழ்வது.மாறாக நண்பர்கள் தவறு செய்யும் போது,அவர்களுடன் உடனிருப்பது அல்லது கண்டும் காணாமல் செல்வது,கூடவே தவறு செய்வது என்பது மிகப்பெரிய தவறான உதாரணமாக மாறும்.பெரும்பாலானவர்கள் தாங்கள் தவறு செய்யவில்லை என்றாலும் தவறான நண்பர்களால் தாங்களும் அந்த தீயச் செயல் புரியும் போது உடனிருப்பதால் பழிக்கு ஆளாகிவிடுகின்றனர்.அது அவர்களுடைய நற்பெயரை அழிப்பதுடன்,குடும்பத்திற்கும் களங்கம் விளைந்து விடுகிறது.

அதே போல எதிர்மறை எண்ணத்தோடு பேசுபவர்,சுயநலமாக பழகுபவர்,காரியத்தை முடிக்க மட்டும் நட்பு பாராட்டுபவர்,அதிகாரமாக தன் பலத்தைக் காட்டி பழகும் நண்பர்களின் நட்பும் சிறந்த நட்பாகக் கொள்ள முடியாது.ஒரு கூட்டத்தில் இருக்கும் தவறான நண்பரால்,எப்படி பழக்கூடையில் ஒரு அழுகிய பழத்தால் பிற பழங்கள் வேகமாகக் கெட்டுப் போகுமோ,அது போல அந்த நட்பில் இருப்பவர்கள் வேகமாகக் கெடுவதற்கு வழி வகுத்துவிடும். சிறந்த நண்பர்கள்,சக நண்பர்கள் கெடுவதற்கு காரணமாக மாட்டார்கள்.

தமிழரசுனும்,முகுந்தனும் நீண்ட நாள் நண்பர்கள்.சிறு வயது முதலே ஒன்றாகப் படித்தவர்கள்.அவர்களுக்கு ஒருவரையொருவர் விட்டுச் செல்லவே மனமிருக்காது.அப்படி இருவரும் பாசத்துடன் நல்ல நண்பர்களாக இருந்து வந்தனர்.படித்து விட்டு இருவரும் நல்ல பணிக்குச் செல்ல வேண்டும்,அனைவரிடமும் நல்ல பெயர் எடுத்து பெற்றோருக்கு நற்பெயர் எடுத்து தர வேண்டும் என்று அடிக்கடி பேசிக் கொள்வார்கள்.அதே போல தாய்,தந்தையை மதித்து நடக்கும் பிள்ளைகளாக

இருந்தார்கள்.அக்கம் பக்கத்தினர் பார்த்து வியக்கும் அளவிற்கு,பாராட்டும் அளவிற்கு நடந்துக் கொண்டார்கள்.பள்ளியில் கூடப் படிக்கும் மற்ற நண்பர்கள்,தவறாக நடந்து கொண்டாலும், சண்டை போட்டாலும் இவர்கள் இருவரும் எந்த வம்புக்கும் செல்ல மாட்டார்கள்.மாறாக அவர்களைச் சமாதானம் செய்வதற்கு முயல்வார்கள்.பலமுறை ஆசிரியர்களும் அவர்களின் செயலை பாராட்டாமல் இருந்ததில்லை.

மேல்நிலைப் பள்ளிக்குச் செல்லும் போது முகுந்தன் வேறு பள்ளிக்குச் செல்ல வேண்டியிருந்தது.இருவரும் மிகுந்த மனவருத்தம் கொண்டு இருந்தனர்.ஆனால் தமிழரசன்,முகுந்தனுக்கு ஆறுதல் கூறினான்.''அதனால என்னடா,நாம் என்றும் நண்பர்கள் தானே.நேரம் கிடைக்கும் போதெல்லாம் நாம் சந்தித்துக் கொள்ளலாம்.கவலைப்படாதே'' என்று கூறி இருவரும் தங்கள் வீடுகளுக்குச் சென்றனர். நாட்களும் சென்றன..அவரவர் பள்ளியில் சென்று படிக்கத் தொடங்கினர்.புதுப் பள்ளியில் நிறைய நண்பர்களுடன் முகுந்தன் சுற்றித் திரிந்தான்.நாட்கள் செல்ல செல்ல முகுந்தன்,தமிழரசனைச் சந்திப்பதைத் தவிர்த்தான். வீட்டில் போய் கேட்டாலும்,'ஏன் அவன் உன்னை அவன் சந்திக்க வருவதில்லையா' என முகுந்தனின் பெற்றோர் கேட்டனர்.அதற்கு இல்லையென கவலையுடன் தமிழரசன் கூறிவிட்டுச் சென்றான்.வழக்கமாக சந்திக்கும் இடத்தில் காத்துக் கொண்டு இருந்தான் தமிழரசன்.அப்போது முகுந்தன் அங்கு வந்து வீட்டிற்கு வந்தாயா?அம்மா சொன்னார்கள் என்றான்.ஆமாம் ,உன்னை தான் பார்க்கவே முடியவில்லையே! அதனால் தான் வந்தேன் என்றான்.

அதற்கு முகுந்தன் அப்படியெல்லாம் இல்லை நிறைய படிக்க இருக்கிறது.வெளியில் வர முடிவதே இல்லை..நீ எப்படிப் படிக்கிறாய் என கேட்டான்.நான் நன்றாகத் தான் படிக்கிறேன் என்றான் தமிழரசன்.சிறிது நேரம் கழித்து இருவரும் கிளம்பினர்.வீட்டிற்குச் சென்று முகுந்தனைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தான் தமிழரசன்.அவனது பேச்சில் மாற்றமிருக்கிறது என்பதை உணர்ந்தான்.கண்டிப்பாக அவன் என்ன செய்கிறான் என்று கவனிக்க வேண்டும் என நினைத்து,அவனை கவனிக்கலானான்.

ஒரு நாள் அவன் அப்பள்ளி நண்பர்களிடம் சில தீய பழக்கங்களைக் கற்றுக் கொண்டான் என்பதைக் கண்டான்.மிகுந்த வேதனையுற்ற அவன் ஓடிவந்து,''என்னடா செய்கிறாய்,இப்படி புகை பிடித்துக் கொண்டிருக்கிறாயே? நீயா இப்படியெல்லாம் மாறிவிட்டாய்'' என்றான்.அதற்கு அவன் ''டேய் அதெல்லாம் ஒன்றுமில்லை.நீ யாரிடமும் கூறி விடாதே'' என்று பயந்து கூறினான்.தமிழரசன் நேரே போய் முகுந்தனின் நண்பர்களிடம் கடிந்து கொண்டான்.'படிக்கிற வயதில் இவ்வாறு செய்யலாமா?' என்று கேட்டதற்கு,அவர்கள் அனைவரும்,தமிழரசனைக் கேலி செய்தனர்.உனக்கென்ன வந்தது? என்று திட்டினர்.ஆனாலும் தமிழரசன்,இதை உங்கள் ஆசிரியரிடம் கூறத்தான் போகிறேன் என்றான்.ஆனால் முகுந்தன்,ஓடி வந்து இதெல்லாம் நீ தலையிட வேண்டாம் என்று கூற தமிழரசன் சற்று அதிர்ந்து போனான்.தன் நண்பன் முகுந்தனா இப்படிப் பேசுவது என்று ஆச்சரியமும்.அதிர்ச்சியும் அடைந்தான்.ஆனால் எப்படிக் கூறினாலும்,அவனை தன் தவறை உணரச் செய்ய வேண்டியதும்,மீண்டும் அவ்வாறான தவறைச் செய்யாமல் தவிர்க்கவும் செய்ய வேண்டுமென உறுதியாக இருந்தான்.முதலில் முகுந்தனின் அம்மாவைச் சொல்லி, அம்மா எவ்வளவு வேதனை அடைவார் ..அப்பா கோபமுறுவார் என்றெல்லாம் சொல்லிப் பார்த்தான்.இதெல்லாம் சொல்லி என்னை பயமுறுத்த வேண்டாம்,நான் ஒன்றும் சின்னப் பிள்ளை இல்லை,நீ முதலில் கிளம்பு என்று கோபமாகக் கத்தினான் முகுந்தன். அமைதியாக திரும்பிச் சென்றான் தமிழரசன்.நாட்கள் சென்றது.ஆனால் அவனின் நடவடிக்கைகள் நன்மையானதாகத் தெரியவில்லை தமிழரசனுக்கு.கண் முன்னே நண்பன் கெடுவதைப் பார்த்துக் கொண்டிருப்பவன் நல்ல நண்பன் இல்லையே.அது நட்புக்கே களங்கம் விளைவிக்கும் செயலல்லவா!

தமிழரசன் துணிந்து முகுந்தனின் ஆசிரியரிடம் சென்றான்.முகுந்தனின் பெற்றோரிடம் சொன்னால் அவனை மட்டுமே கண்டிக்க முடியும்.மாறாக பிற மாணவர்களும் திருந்த வேண்டுமென நினைத்து பள்ளி ஆசிரியரிடம் கூறினான்.இதையெல்லாம் கேட்ட ஆசிரியர் நீ எந்த பள்ளியைச் சேர்ந்தவன்?என கேட்டார்.உனக்கென்ன அவர்கள் மீது அக்கறையெனவும் கேட்டார்.அதற்கு தன்

நண்பன் முகுந்தன் மிகவும் நல்லவன் என்றும்,நன்றாகப் படிக்கக் கூடியவன் என்றும்,தகாத சில பேரின் செயலால் தீய பழக்கத்தால் பாதிப்படைந்து விட்டான். மேலும் சிலரின் செயலால் பிற நல்ல மாணவர்களும் பாதிப்படைவர் ஐயா.அதனாலேயே உங்களிடம் கூற வந்தேன் என்றான்.அவனின் நற்குணத்தைப் பாராட்டி,கவலைப் படாதே தமிழரசா,நான் பார்த்துக் கொள்கிறேன் என்றார்.அவ்வாறே அவர்கள் செய்யும் செயல்களை நோட்டம் பிடித்து ,அந்தக் கடைக்காரரையும் கண்டித்து காவல் நிலையத்தில் புகார் அளித்து விடுவேன் என்று மிரட்டினார்.மேலும் மாணவர்களின் பெற்றோரை வரவழைத்து அவர்களிடம் கூற,அனைவரும் அதிர்ந்து போயினர்.மேலும் இது போன்ற தீய செயல்களைச் செய்தால்,அனைத்து மாணவர்கள் முன்னர் நிறுத்தி வைக்கப்பட்டு கேலிக்குள்ளாவீர்கள்,பரவாயில்லையா?என்றார் ஆசிரியர்.இல்லை ஐயா,இனி செய்ய மாட்டோம் என்று அழுது புலம்பினர்.பின்னர் வீட்டிற்கு வந்த முகுந்தனின் அம்மா அவனிடம் பேசவே இல்லை.எவ்வளவு கெஞ்சியும்,பேசவில்லை.மிகவும் வெட்கமடைந்து தமிழரசனிடம் சென்று,அம்மாவை பேச சொல்..எனக்கு வருத்தமாக இருக்கிறது.நீயும் என்னை மன்னித்து விடு என்றான் முகுந்தன்.அதெல்லாம் பரவாயில்ல,நான் ஏன் உன்னை கோபிக்கப் போறேன்! வா,நான் அம்மாவை சமாதானப் படுத்துகிறேன் என்றான்.வீட்டில் அவனது பெற்றோர் கோபமாக இருந்த நிலையில்,அவன் அனைத்தையும் கூறி அவர்களுக்குப் புரிய வைத்தான்.அவர்களும் முகுந்தனை மன்னித்து,தமிழரசனின் நல்ல எண்ணத்தைப் பாராட்டினர்.

எவ்வளவு இக்கட்டான சூழ்நிலைகள் வந்தாலும்,நமக்கே துன்பம் விளைந்தாலும்,நண்பன் கெடுவதைப் பார்த்துக் கொண்டிருப்பது தவறான செயல்.அவர்களைத் தடுத்து நன்னெறிப்படுத்தி வழிகாட்டுதலே நல்ல செயல்.நல்ல நண்பராய் வாழ்ந்து,நற்செயல் புரிய துணை இருப்போம்.

***நகுதல் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்***

***மேல்சென்று இடித்தற் பொருட்டு.***—குறள்-784.[ அதிகாரம்-79.நட்பு.]

ஒருவரோடு ஒருவர் சிரித்து மகிழ்வதற்காக நட்புக் கொள்வது உண்மைநட்பு அல்ல. நட்பின் பயன் என்ன என்றால், நண்பர் தவறு செய்ய முற்படும்போது ,விரைந்து சென்று கண்டித்து உரைத்தல் பொருட் டு நட்பு செய்வ தே உண்மை நட்பாகும்.[ **அதிகாரம்-79.நட்பு.]**



கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக



# குறள் விருந்து






குறள்நெறி பரப்பத் திங்கள் தோறும் வெளி வரும் உலகின் ஒரே சிறுவர் மின்னிதழ்

தி.வ.ஆ.-2054 ஆடி- 8 பொ.ஆ.-2023 சூலை-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்



குறளைக் கற்போம் குழந்தைகளே
குன்றெனப் புகழைக் குவிப்போமே
பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்
நெஞ்சில் நன்னெறி விதைப்போமே
சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்
பெருமைகள் பலவும் சேர்ப்போமே
வள்ளுவர் தந்த வான்மறையால்
வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே
நாடும் வீடும் நலம் பெறவே
நாளும் குறளைக் கற்போமே
கசடறக் கற்றுத் தெளிவோமே
கற்றபின் அதன்வழி நிற்போமே
வல்லரசாய் நாட்டை வளர்ப்போமே
வல்லமை பெற்றிட உழைப்போமே

சிறப்பாசிரியர்: முனைவர் முரசு நெடுமாறன் பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

# நூலகம் செல்வோம்









அறிவுக்கோவில் நூலகம் செல்வோம்
அன்றாடம் படிக்கும் பழக்கம் கொள்வோம்
உலகின் புதுமைகள் அனைத்தும் அறிவோம்
பலபல துறைகளின் அறிமுகம் பெறுவோம்
எத்தனை துயரம் வந்தாலும் நமக்குப்
புத்தகம் போல் ஒரு நண்பன் உண்டோ?
ஆளுமை வளர்த்திடும் நூல்களைப் படிப்போம்
அப்துல் கலாமும் அழ.வள்ளியப்பாவும் என
அருமைத் தாத்தாக்கள் நமக்குக் கிடைத்தது
நூலகம் சென்று படித்ததால்தானே?
எளிமையாய்ப் பற்பல உத்திகள் சொல்லி
ஏணியாய் உயர்த்தும் இறையன்பு அய்யாவும்
பழகும் இனிமைப் பாட்டுகள் வழங்கும்
கவிஞர் பலரும் பொழுதைப் போக்கிடக்
கதைகள் படைத்த பெரியவர் பலரும்
அறிமுகம் ஆனது நூலகத்தில்தானே?
படிப்போம் படிப்போம் பற்பல நூல்கள்
பகிர்வோம் பகிர்வோம் படித்ததையெல்லாம்
நாமும் ஒருநாள் கலாம் தாத்தா போலே
நானிலம் போற்ற உயர்வோம் உறுதி.
அக்கா அண்ணா தம்பி தங்கையே
வாருங்கள் வரிசையாய் நூலகம் போவோம்
கண்ணைக் கெடுக்கும் காணொளி எதற்கு?
விண்ணை எட்டும் ஊக்கம் தந்திடும்
புத்தகம் படிப்போம் வித்தகம் வளர்ப்போம்.










# நூலகத்தின் பெருமையே பெருமை!

முனைவர்ந.ஆவுடையப்பன்,
கன்னிமரா பொதுநூலக மேனாள் இயக்குநர்

தமிழ்நாட்டில் பல்வேறு வகையான பெரிய பெரிய நூலகங்கள் நூறு ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றி இன்றுவரை செயல்பாட்டில் இருந்து வந்தாலும் கடைக்கோடியில் வசிக்கின்றன எளிய மக்களுக்கும் பயன்படுகின்ற அளவில் பொது நூலகங்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என்ற நோக்கில் இந்தியாவில் முதல் முதலாக தமிழ்நாட்டில் சட்ட அறிந்தேற்புடன் அரசு சார்பாகப் பொது நூலகங்கள் ஏற்படுத்த வேண்டும் என்ற கருத்து மேலோங்கியது.

அதன் அடிப்படையில் 1948 ஆம் ஆண்டில் தமிழ்நாடு பொது நூலகங்கள் சட்டம்,1948 இயற்றப்பட்டது. இந்தச் சட்டம் 1-4-1950 முதல் நடைமுறைக்கு வந்தது. பொதுமக்கள் செலுத்துகின்ற வீட்டு வரியின் மேல் வரியாக ஒரு ரூபாய்க்கு மூன்று காசுகள் நூலக வரியாக உள்ளாட்சிகளுக்குச் செலுத்த வேண்டும் என்ற சட்ட விதி ஏற்படுத்தப்பட்டது. அந்த மேல் வரி, காலப்போக்கில் ரூபாய்க்கு 10 காசுகளாக உயர்த்தப்பட்டுள்ளது.அதன் மூலம் கிடைக்கின்ற தொகை மற்றும் அரசு வழங்குகின்ற மானியத்தைக் கொண்டு தமிழகமெங்கும் பல்வேறு படிநிலைகளில் பொது நூலகங்கள்

தோற்றுவிக்கப்பட்டன. அதன்படி மாவட்டத்திற்கு ஒரு மாவட்ட மைய நூலகம், 5000 மக்கள் தொகைக்கு அதிகமாக உள்ள இடங்களில் கிளை நூலகங்கள், 1000 மக்கள் தொகைக்கு அதிகமாக உள்ள இடங்களில் நூல் வழங்கு முனைகள் தோற்றுவிக்கப்படவேண்டும் என்றும் விதிமுறைகள் ஏற்படுத்தப்பட்டன.அதற்கேற்ப படிப்படியாக பொது நூலகங்கள் திறக்கப்பட்டன. இந்த நூலகங்களை இயக்குவதற்கு ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட நூலக ஆனைக்குழு ஏற்படுத்தவும் சட்டத்தில் உறுதி செய்யப்பட்டது. இந்தக் குழு உள்ளாட்சிச் சார்பாளர்களை உறுப்பினர்களாகக் கொண்டு ஏற்படுத்தப்படும் ஒரு குழுவாகும். ஏற்கெனவே இயங்கி வந்த கன்னிமாரா பொது நூலகம்,இந்தத் தமிழ்நாடு பொது நூலகச் சட்டத்தின்படி மாநில மைய நூலகமாக அறிவிக்கப்பட்டது. காலப்போக்கில் மக்கள் தொகைப் பெருக்கத்திற்கு ஏற்ப நூலகங்கள் அமைப்பதிலும் புதுமைகள் புகுத்தப்பட்டன. ஊர்ப்புற நூலகங்கள் என்ற புதிய நூலகப் பிரிவு தொடங்கப்பட்டு அவை கிளை நூலகங்கள், மாவட்ட மைய நூலகங்களோடு இணைந்து செயல்படக் கிராமங்களில் அமைக்கப்பட்டன. இது தவிர நூலக வழங்குமுனைகளுக்கு பதிலாகப் பகுதி நேர நூலகம் என்ற தனி நூலகப் பிரிவும் தொடங்கப்பட்டது. ஆயிரம் மக்கள் தொகை கொண்ட கிராமங்களுக்கு ஒரு பகுதி நேர நூலகம் என்ற அடிப்படையில் நூலகங்கள் திறக்கப்பட்டன. அந்த வகையில் இன்றைக்கு தமிழகத்தில் அரசு சார்பாக 4500 க்கும் அதிகமான நூலகங்கள் செயல்படுகின்றன.

காலப்போக்கில் கிராமப்புறங்களில்  நூலகங்களின் தேவை அதிகமாக உணரப்பட்டதாலும் நூலகவரி மூலம் பெறும் தொகையைக் கொண்டு அதிக நூலகங்களை தொடங்கிப் பேணுவது இயலாது என்பதை உணர்ந்து , 1996-2001 ஆண்டுகளில் ஊரக வளர்ச்சி துறை சார்பாக ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்திற்கும் ஒரு நூலகம் திறக்கவேண்டும் என அன்றைய முதல்வர் டாக்டர் கலைஞர் தலைமையிலான அரசு முடிவெடுத்தது. அதன்படி தமிழகத்தில் உள்ள 12,600 கிராம பஞ்சாயத்துகளில் அண்ணா மறுமலர்ச்சி நூலகம் என்ற பெயரில் ஒரு நூலகத்திற்கு ரூ.5 லட்சம் வீதம் தொகை ஒப்பளித்து அரசாணை வெளியிடப்பட்டது. இந்தியாவில் ஒரு அரசாணையின் மூலம் 12,600 நூலகங்கள் திறக்க ஆணையிட்டது இதுவே

முதல்முறையாகும். இதுவரை வேறு எந்த அரசும் இதுபோன்ற ஆணையை வெளியிடவில்லை என்பது வரலாறாக உள்ளது திராவிட முன்முறை அரசின் முன்னோடிச் செயலாக இதனை வரலாற்று ஆய்வாளர்கள் ஆவணப்படுத்துவார்கள் என்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது..

இவ்வாறு பல்வேறு வகையான நூலகப் பணிகளை ஆற்ற வேண்டிய சூழ்நிலையில், கணினியமாக்கப்பட்ட நூலகங்களின் செயல்பாடுகள் உலக அளவில் மிகுந்து வரும் நிலையில், தமிழகத்திலும் அதுபோன்ற ஒரு பிரம்மாண்டமான நூலகத்தைக் கட்டமைக்க வேண்டும் என்ற குறிக்கோளின் அடிப்படையில் 2008 ஆம் ஆண்டு சென்னை கோட்டூர்புரத்தில் 8 ஏக்கர் பரப்பளவில் பேரறிஞர் அண்ணா அவர்களின் நூற்றாண்டை முன்னிட்டு மிகப்பெரிய நூலகம் அமைக்க அரசு முன் வந்தது. அதன் அடிப்படையில் சுமார் 3 லட்சம் சதுர அடி பரப்பளவில் எட்டு மாடிகளைக் கொண்ட அண்ணா நூற்றாண்டு நூலகம் ரூ. 176 கோடி செலவில் மிகப் பிரம்மாண்டமாக அமைக்கப்பட்டது. பேரறிஞர் அண்ணா அவர்களின்  நூற்றாண்டை முன்னிட்டு 15-9-2010 அன்று அன்றைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் அண்ணா நூற்றாண்டு நூலகத்தை திறந்து வைத்தார்கள். இந்தியாவில் வேறு எங்கும் இது போன்ற ஒரு நவீனமான நூலகம் இல்லை .

ஆட்சி மாற்றத்தின் போது ஏற்கனவே செயல்பட்டு வரும் திட்டங்களை மாற்றுவதும் நிறுத்துவதும் என்ற ஒரு பழக்கம் அரசியல் வழமையாகச் செயல்பட்ட காரணத்தினால் அண்ணா நூற்றாண்டு நூலகத்தை, குழந்தைகள் மருத்துவமனையாக மாற்றுவதற்கு அன்றைய  முதலமைச்சர் மறைந்த ஜெ ஜெயலலிதா அவர்கள் தலைமையிலான அரசு அரசாணை வெளியிட்டது. நூலக ஆர்வலர்கள், கல்வியாளர்கள், பொதுமக்கள் என அனைத்துப் பிரிவினரும்  கடுமையான எதிர்ப்பு தெரிவித்தும் பலன் இல்லாததால், கல்வியாளர் சார்பாக சென்னை உயர்நீதிமன்றத்தை அணுகி அரசின் நடவடிக்கைக்குத் தடையானை பெறப்பட்டது. அண்ணா நூற்றாண்டு நூலகம், நூலகமாகவே செயல்பட வேண்டும் என்ற ஆணையை சென்னை உயர்நீதி மன்றம் வழங்கி அந்த நூலகத்திற்கு உயிர் கொடுத்தது. ‘உருப்படியாக எதுவும்

செய்யாவிட்டாலும் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்டும்' என்ற சொலவடை நினைவிற்கு வருகிறது.

அண்ணா நூற்றாண்டு நூலகத்திற்குப் பொதுமக்களிடம் கிடைத்த வெற்றியை தொடர்ந்து, இதுபோன்று நூலகங்கள் மாவட்டம் தோறும் ஏற்படுத்த வேண்டும் என்ற கோரிக்கைகள் அவ்வப்போது எழுந்து வந்தாலும் மக்கள் செலுத்துகின்ற நூலக வரியில் இதுபோன்று பெரிய நூலகங்களை ஒவ்வொரு மாவட்டத்திலும் அமைப்பதற்கு நிதி நிலைமை இடம் கொடுக்காது என்ற நிலையில், 2021 ஆம் ஆண்டு தமிழகத்தில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. தமிழக முதல்வர் மாண்புமிகு மு க ஸ்டாலின் அவர்கள் டாக்டர் கலைஞர் அவர்களின் நூற்றாண்டு விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடும் விதத்தின் ஒரு பகுதியாக மதுரையில் கலைஞர் நூற்றாண்டு நூலகம் அமைப்பது என்ற அரசின் கொள்கையை வெளியிட்டார். சுமார் இரண்டு லட்சம் சதுர அடியில் 6 மாடிகளைக் கொண்ட அதிநவீனமான புதிய கட்டடக்கலைக்குச் சான்றாகவும் பல்வேறு துறைகளைச் சார்ந்த பிரிவுகளை உள்ளடக்கியதுமான கலைஞர் நூற்றாண்டு நூலகம் ரூ. 215 கோடி செலவில் 2.75 ஏக்கர் பரப்பளவில் மதுரையில் புது நத்தம் ரோட்டில் கட்டப்பட்டு பெருந்தலைவர் காமராசர் அவர்கள் பிறந்த தினமான சூலை, 15, 2023 அன்று தமிழக முதல்வர் மு க ஸ்டாலின் அவர்கள் திறந்து வைத்து பொதுமக்களுக்கு அர்ப்பணித்துள்ளார். இந்த விழாவின் கூடுதல் சிறப்பாக உலகத்தின் மிகப்பெரிய செல்வந்தர்களில் ஒருவரும் இந்திய அளவில் அதிக நன்கொடை வழங்கும் முதல் மனிதர் என்ற பெருமை பெற்றுத் திகழ்கின்ற HCL Technologyயின் நிறுவனரும் பெரும் தமிழருமான டாக்டர் சிவ நாடார் அவர்களும் அவர்களுடைய புதல்வி உரோசினி அவர்களும் கலந்து கொண்டு சிறப்பித்தது பெருமையாகக் கருதப்படுகிறது. இந்த நூலகம் தென் தமிழக மக்களின் அறிக்ச் சுரங்கமாக செயல்படும் என்பதில் ஐயம் இல்லை.

இது போன்ற மாபெரும் நூலகங்கள் தமிழ்நாட்டின் பிற பகுதிகளிலும் அமைய வேண்டும் என்ற பொதுமக்களின் விருப்பத்தை அரசு பரிவுடன் ஆய்ந்துது செயல்படுத்த வேண்டும்.



# கொடுத்து மகிழ்வோம்

**தாமரை சீனிவாசராவ்**

*[திருமதி.தாமரை சீனிவாசராவ் நம் இதழின் பொறுப்பாசிரியர்;முற்போக்கு எழுத்தாளர்;பல மகளிர் அமைப்புகளின் ஒருங்கிணைப்பாளர்;கம்போடியா நாட்டு ஆங்கோர் தமிழ்ச்சங்கப் பொருளாளர்;பல மாநாடுகளைத் திறம்பட நடத்திய பெருமைக்குரியவர்.]*

ஒரு ஊரில் மிகப்பெரிய செல்வந்தர் ஒருவர் வாழ்ந்து வந்தார்.அவருக்கு இல்லாத செல்வ வளமே இல்லை என்று சொல்லாம்.அவ்வாறு அவர் தன் சொந்த உழைப்பின் மூலம் பெற்றதை வைத்துக் கொண்டு சிறப்பாக வாழ்ந்தார்.தன்னிடம் பணி புரியும் பணியாளர்களிடம் மிகுந்தமரியாதையுடன் நடந்துக் கொள்வார்.மேலும் உதவி கேட்டு வருபவர்களுக்கும் இல்லை என்று சொல்லாமல் வாரி வழங்கும் வள்ளலாகத் திகழ்ந்தார்.அவருக்கு இரு மகன்கள் இருந்தார்கள்.அவர்கள் இருவரும் தந்தைக்கு உதவிக் கொண்டு,தொழில்களைக் கவனித்துக் கொண்டு இருந்தார்கள்.ஆனால் இருவருக்கும் தந்தை இவ்வாறாக தானமளிப்பது பிடிக்காமல் சற்று வெறுப்புடன் இருந்தார்கள். அவர்களுக்கு தங்கள் சொத்துக்களைத் தந்தையார் இவ்வாறே தானமளித்து கரைத்து விடுவார் என்று அஞ்சினர்.நாளை தங்களுக்கு எதுவும் மிஞ்சாது என்று அச்சம் கொண்டனர்.ஆனால் தந்தையை எதிர்த்துப் பேச முடியாதவர்களாகத் திணறிக் கொண்டிருந்தனர்.நாட்கள் செல்ல செல்ல ஒரு முடிவெடுத்து தந்தையிடம் பேசி விட வேண்டும் என்று முடிவெடுத்தனர். “அவரிடம் சென்று நீங்கள் செய்வது கொஞ்சம் கூட சரியில்லை.நீங்கள் வருகிறவர்,போகிறவர் என அனைவருக்கும் இந்த

சொத்தை  அளித்துக் கொண்டிருந்தால் கடைசியில் நாங்கள் என்ன செய்வது?ஏன் இப்படி வாரி வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள்?”எனக் கேட்டனர்.

சற்றே சிந்தித்து விட்டு “நான் ஏதும் வரம்பு மீறி செய்யவில்லையப்பா..நம்மை நம்பி வருபவர்களுக்கு,நம்மிடம் பணி புரிபவர்களுக்கு சிறிதளவு உதவி புரிகிறேன்.அவ்வளவு தான்.அதனால் இந்த செல்வம் கரைந்து விடுமா என்ன?இந்த நிலையில்லாதச் செல்வத்திற்கு ஏன் இப்படி புரியாமல் பேசிக் கொண்டு இருக்கிறீர்கள்! நாம் செல்வம் வைத்திருக்கும் போதே நாலு பேருக்கு உதவினால் அது உங்களையும் காப்பாற்றும்,உங்கள் பிள்ளைகளையும் காப்பாற்றும்.



இன்று அவசரத்திற்கு உதவி தேடி வருபவர்களிடம் நாளை,நாளை என்று தள்ளிப் போட முடியுமா? அப்படிச் செய்தால் நாம் சேர்த்த செல்வத்தால் என்ன பயன்.மனிதராய் பிறந்தவர் பிறருக்கு இயன்ற உதவிகளை இன்றே செய்ய வேண்டும்.அதையும் நன்றாய் செய்ய வேண்டும்,”என்று கூறினார்.ஆனால் அவருடைய பேச்சைக் கேட்க முடியாதவர்களாகத் தந்தையை எதிர்த்து மீண்டும் மீண்டும் பேசினர்.பிறகு மிகப்பெரிய வாக்குவாதமாக மாறியது.பின்னர் அவர்கள் இருவரும் “எங்களுக்கு உரிய பங்கைப் பிரித்துக் கொடுங்கள்” என்று உறுதியாகக் கேட்டவுடன்,தந்தை மிகவும் வருத்தமாக உணர்ந்தார்.

தன் மீது எந்த தவறும் இல்லையே.பிள்ளைகள் இப்படி பேசுகிறார்களே என்று சிந்தித்தார்.பின்னர் “சரிப்பா நான் உங்களுக்குக் கொடுக்கிறேன்.ஆனால் பின்னாளில் எனக்கு நீங்கள் எந்தவித தொந்தரவுகளும் தரக் கூடாது.நீங்களே இந்த நிர்வாகத்தை

ஏற்று நடத்துங்கள்,இனி நான் இங்கு வரப் போவதில்லை." என்று மனம் நொந்து கூறினார்.



பணியாட்கள் எவருக்கும் அவர் செல்வது பிடிக்கவில்லை.அனைவரும் அவரிடம் வந்து,தயவு செய்து போக வேண்டாம் என்று கெஞ்சினர்.ஆனால் அவர் கேட்பதாகத் தெரியவில்லை.

சொத்து பிரித்துத் தரப்பட்டது.நிர்வாக முறைகள் மாற்றப்பட்டன.வழக்கம் போல பணிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன.தந்தையோ தனியாக சில சமூகக் கடமையாற்றிக் கொண்டு காலத்தைக் கழித்து வந்தார்.ஆனால் அவ்வப்போது பிள்ளைகளின் போக்கையும் கவனித்து தான் வந்திருந்தார்.அவர்களின் செயல்கள் அவருக்கு சற்று வருத்தத்தையே அளித்தது.அவர்களின் அறியாமையைக் கண்டு மனம் கலங்கினார்.

சில வருடங்கள் சென்றன.அவரின் மகன்கள் இருவரும் நடத்தி வந்த பொது நிறுவனங்கள்  வளர்ச்சியில் பின் தங்கிச்  சென்று கொண்டிருந்தன.அதற்காக அவர்கள் இருவரும் பல இடங்களில் கடன் பெற்றும்,உதவிகள் நாடிப் பலரிடம் பணம் பெற்றும் மேலும்,மேலும் முதலீடு செய்து கொண்டிருந்தனர்.இறுதியில் ஏமாற்றமே ஏற்பட்டது.பல வித நிருவாகக் கோளாறுகளால், பணம் பலவிதத்திலும் செலவடைந்தது.செய்வது அறியாது இருவரும் திகைத்தனர்.பின்னர் கடன் சுமைகள் நிறைந்து அவர்களின் தொழில் நிறுவனங்கள் அனைத்தும் முடக்கப்பட்டன.மிகுந்த வருத்தத்தில் இருவரும் சோர்ந்திருந்த நேரம் அவர்களது தந்தையின் அழைப்பு அவர்களுக்கு உயிர் மூச்சு கிடைத்ததற்கு மேலாக ஆறுதலாக இருந்தது.

தந்தையிடம் கைகட்டி நின்று கண்ணீர் சிந்தினர்.ஒன்றுமே சொல்லாமல் அவர்களை அரவணைத்து ஆறுதல் கூறினார் தந்தை."இதைத் தான் கூறினேன்,இந்த நிலையில்லாத பணத்திற்கு தான் இவ்வளவு நீங்கள் அதை அடைய முயற்சி செய்தீர்கள்.அதையும் கவனமில்லாமல்,திட்டமிடாமல் வேகமாக வளரும் முயற்சியில்,நிதானத்தை இழந்தீர்கள்.அதற்காக தான் அவ்வளவு உங்களுக்குக் கூறினேன்.இந்த நிலையில்லாத செல்வம் நம்மிடம் இருக்கும் போதே,அதை நல்ல முறையில் பயன்படுத்தி,அச் செல்வத்தின் பயனை நிலைநாட்ட வேண்டும்." என்று கூறினார்.

தந்தையிடம் மன்னிப்பு கோரி,இனி உங்கள் விருப்பம் போல நடக்கிறோம் அப்பா என்று கூறி,தந்தை சொற்படிக் கேட்டு நடக்க ஆரம்பித்தனர்.

அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்

அற்குப ஆங்கே செயல்- குறள் : 333

நம்மை வந்து சேரும் செல்வம் நிலையற்றது.அது நிலைக்காத தன்மை உடையது.அதனால் நம்மிடம் செல்வம் இருக்கும் போதே அதை நிலையான பல நல்ல அறச்செயல்களுக்குப் பயன்படுத்த வேண்டும்.அவ்வாறு செய்வதால் காலம் கடந்த பின்னும் அச்செல்வத்தால் ஏற்பட்ட நன்மைகள் காலம் கடந்தும் நிற்கும் தன்மையை அடைந்துவிடும்.இதையே நமது முன்னோர்கள் பலரும் கடைப்பிடித்து வந்துள்ளனர்.தமக்கான செல்வத்தில் கல்விக் கொடையாகவும்,நிலக் கொடையாகவும் தந்துள்ளனர்.உலகிலேயே பெரிய வீரராகக் கருதப்பட்டோரும்,உலகையே ஆண்ட பெரு மன்னராக இருந்தாலும்,பல நாடுகளை வெற்றி கொண்டவராக இருந்தாலும் அவர்கள் மறைந்த பின்னர் அவர் இறந்தவராகவே கருதப்படுவர்.அதனால் நிலையான பெருமை என்பது நாம் செய்யும் நற்காரியங்களைப் பொறுத்தே அமையும்.நிலையாமை கொண்ட இந்த உலகத்தில் தானமும்,கொடையும் வெறும் பொருள் சார்ந்ததாக மட்டுமல்லாமல் ஒரு மனிதனின் உடல் அங்கங்களும்,குருதியும் கூட வழங்கப் படுகின்றன. தற்காலத்தில் இருக்கும் அறிவியல் வளர்ச்சியின் உதவியால் இறந்தவர் கூட தற்சமயம் தன்னுடைய உடல் பாகங்களைப் பிறருக்கு பயன்படும் வகையில் அளிக்க

முடியும்.அப்படித்தான் பலருக்கு உடல் தானமானது பல வகைகளில் பயன்படுகிறது.கண் தானம் தொடங்கி, இருதயம், கல்லீரல்,மூளை சிறுநீரகம் என அனைத்தையும் வழங்கி பிறருக்கு பயன்படும் வகையில் அளித்து இந்த நிலையாமை என்னும் தன்மைக்கு ஆளாகாமல் இருக்க முடிகிறது. நமது செவ்விலக்கியங்களில் பல வள்ளல்கள் பற்றிய குறிப்புகள் நிரம்பிக் கிடக்கின்றன. முதலேழு,இடையேழு,கடையேழு,என அழகாகப் பிரித்து வைத்துள்ளனர்.அவ்வாறு சிறப்புற ஆட்சி புரிந்துக் கொண்டிருந்த மன்னர்கள் தம்மை நோக்கி வரும் புலவர்களுக்கும், வறுமையில் வாடுவோர்க்கும்,அளவில்லா உதவி செய்து பெரும் புகழ் அடைந்தனர்.மேலும் தம் காலத்திற்குப் பிறகும் கூட பேர் சொல்லும் அளவிற்கு மக்களுக்கு நன்மைகள் செய்து போற்றப்படுகின்றனர்,அதனால் புகழ்பெற்றனர். அதைவிட பாரி முல்லைக்குத் தேரையும்,பேகன் மயிலுக்குப் போர்வை அளித்து பிற உயிர்கள் மீதும் அளவில்லா அன்பு செலுத்தியதால்,இன்றளவும் வரலாற்றில் பெரும்பேர் பெற்றவர்களாக இன்றளவும் போற்றப்படுகிறார்கள். மேலும் இன்றளவும் கூட பெரும் செல்வந்தர்கள் தங்கள் சொத்துக்களைப் பலருக்கு தானம் வழங்குகின்றனர். பொருட்செல்வம் என்றும் அழியும் தன்மையுடையது என்று உணர்ந்தவர்கள் தமது செல்வத்தை எல்லாம் தானம் கொடுக்கின்றனர். மேலும் அறக்கட்டளை அமைத்து மக்களுக்காக பல்வேறு நலத்திட்டங்களை வழங்குகிறார்கள். “இளமையும் நில்லா,யாக்கையும் நில்லா,வளவிய வான்பெரும் செல்வமும் நில்லா”






கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து




தி.பி.2053 ஆவணி-7 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆகத்து 24.2022

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்












சந்திரயான்-3 வெற்றியைப் பாராட்டுவோம்.

**ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வானம் நணிய துடைத்து - குறள்353**

ஐயப்பாடுகளைத் தெளிந்த ஆராய்ச்சி வாயிலாகத் தீர்த்துக் கொண்டவர்களுக்குப் பூமியைவிட வானம் மிக அருகில் இருப்பதாகக் கருதுகின்ற ஊக்கம் ஏற்படும்

-- கலைஞர் விளக்க உரை

**உலகப்பேராசான் திருவள்ளுவர் “ மெய்யுணர்வு” என்னும் அதிகாரத்தின்வழி அறிவியல் ஆராய்ச்சி நெறிக்கு வழிகாட்டியுள்ளார்.சந்திரயான் -2 எழுப்பிய ஐயங்களுக்குத் தீர்வு கண்டு சந்திரயான் -3 சிறப்பாகச் செயல்படுத்திய அறினியலாளர்களுக்கு வணக்கமும் வாழ்த்தும்.**


சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

சிறுவர் இலக்கியம்: குறள் விளக்க நாடகம்



# பொறுமையின் பெருமை

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் “ மலேசியாவின் அழ.வள்ளியப்பா “ “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் “என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

**காட்சி : 1**

இடம் : வீட்டின் ஒரு பகுதி
நேரம் : முற்பகல்
கதை மாந்தர் : பொற்கொடி, கனலன்

நிலை : வெளியூரில் படித்துக்கொண்டிருக்கும் கனலன் இல்லத்திற்கு வருதல். அன்னையுடன் கலந்துரையாடுதல்.

கனலன் : அம்மா , வணக்கம்!

பொற்கொடி : வாமகனே! உன்னைப் பார்த்து மூன்று மாதம் ஆகிறது (தழுவிக் கொள்ளுதல்)

கனலன் : எனக்கும் அப்படித்தான் அம்மா. இப்போது உங்களைப் பார்க்கும் பொழுது எத்துணை மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா?

பொற்கொடி : நானும் அதைவிட மகிழ்ச்சி அடைகிறேன்.

கனலன் : அப்பா எங்கே அம்மா ?

பொற்கொடி : அப்பா அலுவலகத்திற்குச் சென்றுள்ளார். மாலையில் தான் திரும்புவார். நீ போய் உடைமாற்றிக் கொண்டு வா. பகலுணவு உண்ணலாம்.

கனலன் ; அப்பாவுடன் சேர்ந்து சாப்பிட நினைத்தேன்.

பொற்கொடி : இரவு உணவை அப்பாவுடன் சேர்ந்து உண்ணலாம்/

கனலன் : சரி , அம்மா.

பொற்கொடி : நான் போய் உணவு எடுத்து வைக்கிறேன். நீ போய் உடை மாற்றிக் கொண்டு கைகால் அலம்பி வா. (செல்லுதல்)

**காட்சி முடிவு.**

**காட்சி : 2**

இடம் : வீட்டின் ஒரு பகுதி
நேரம் : பிற்பகல்
கதை மாந்தர் : பொற்கொடி, கனலன்

நிலை : பகல் உணவுக்குப் பின் தாயும் மகனும் உரையாடி மகிழ்தல்.

கனலன் : அம்மா ! உங்கள் கையால் உணவுண்டு எத்தனை நாள் ஆகிறது ? நாள்தோறும் விடுதிச் சாப்பாடுதான். இன்று எனக்கு எத்துணை மகிழ்ச்சியாக இருக்கிறது தெரியுமா ? என்ன இருந்தாலும் , தாய் தரும் உணவு தனிதான்!

பொற்கொடி : நீ தங்கிப் படிக்கும் உயர்நிலைப் பள்ளியும் , நாகரிகமான விடுதிப் பள்ளிதானே!

கனலன்                 ; உண்மைதான். அங்குக் குறை ஒன்றும் இல்லை. இருந்தாலும்...

பொற்கொடி : உன் எதிர்கால நன்மைக்குத்தானே அங்குப் படித்துக் கொண்டிருக்கிறாய்! சிரமங்களைப் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்.

கனலன் : அங்குள்ள ஒரு குறையைச் சொல்லத்தான் வேண்டும் அம்மா.

பொற்கொடி : (கவலையோடு) என்ன குறை ?

கனலன் : நீங்களும் அப்பாவும் இல்லாததுதான் (இருவரும் சிரித்தல்)

பொற்கொடி : உங்கள் பள்ளியில் பாடங்களை அடுத்து என்ன நடவடிக்கைகள் மேற்கொள்வார்கள்?

கனலன் : பள்ளி முதல்வர் மிக உயர்ந்த மனிதர். ஆழக்கற்ற சான்றோர். எங்களுக்குத் திருக்குறள் வகுப்பும் நடத்துவார். நாங்கள் கட்டொழுங்கோடும், சமுதாயத்துக்குப் பயனுடைய இளைஞர்களாகவும் வளர வேண்டும் என்பதில் கருத்துடையவர்.

பொற்கொடி : நீ நல்ல பேறு பெற்றவன். சரியான இடத்தில் போய்ச் சேர்ந்திருக்கிறாய்.

கனலன் : முதல்வர் என் பெயரைப் பற்றிக்கூடச் சொன்னார்.

பொற்கொடி : உன் பெயரைப் பற்றி என்ன சொன்னார் ?

கனலன் : “கனல்” என்றால் , நெருப்பு ; கனலன் என்றால் நெருப்புப் போன்றவன். ஆனால் நீ பொறுமையும் பொறுப்பும் நிறைந்தவனாக இருக்கிறாய்” என்றார்.

பொற்கொடி :: “என் அப்பா கோபக்காரர். அதனால் அப்பெயர் வைத்திருக்கலாம். என் அம்மா மிகவும் பொறுமையானவர். எல்லார் மேலும் அன்பு காட்டுபவர்” என்றேன்.

பொற்கொடி : அதற்கு அவர் என்ன சொன்னார் ?

கனலன் : “கோபக்காரராக இருந்தாலும் , உன்னைப் பொறுப்போடு படிக்கவைத்திருக்கிறாரே; அவர் நல்லவர்தான் என்றார்” மேலும் உன் அப்பா சில நேரங்களில் புயலாக மாறினாலும் அம்மா தென்றலாகக் குளிர்வதால் , உன்னில் பொறுமைக் குணம் குடிகொண்டிருக்கிறது, என்றார்.

பொற்கொடி : உன் பள்ளி முதல்வர் ஓர் உயர்ந்த மனிதர்தான். சரி , கடந்த வாரம் அவர் நடத்திய திருக்குறள் வகுப்புப் பற்றிக் கொஞ்சம் கூறுகிறாயா?

கனலன் : திருக்குறளின் 16ஆம் அதிகாரமான ‘பொறை உடைமை’ பற்றிக் கூறினார். குறிப்பாக முதல் குறளான,

“அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை (151)

என்ற குறளை நன்கு விளக்கினார்.

பொற்கொடி :: சரி , அதுபற்றிப் பிறகு பேசலாம். நீ போய் ஓய்வெடுத்துக் கொள். அப்பா 5.00 மணிக்கெல்லாம் வந்து விடுவார். நான் போய்ச் சிற்றுண்டி தயாரிக்கிறேன் ; நாம் மூவரும் அமர்ந்து மகிழ்ச்சியோடு அருந்தலாம்.

கனலன் : சரி அம்மா , அப்பாவோடு சேர்ந்து சிற்றுண்டி அருந்தப் போவதை எண்ணி மகிழ்கிறேன்.

பொற்கொடி : சரி , ஓய்வெடுத்துக் கொள் (செல்கிறார்)

**காட்சி முடிவு.**

**காட்சி : 3**

இடம் : வீட்டின் ஒரு பகுதி
நேரம் : பிற்பகல்
கதை மாந்தர் : வேலப்பன், பொற்கொடி, கனலன்

நிலை : பெற்றோருடன். கனலன் சிற்றுண்டி அருந்துதல் ; தந்தையுடன் கலந்துரையாடுதல்.

கனலன் : அப்பா ! உங்களோடும் அம்மாவோடும் சேர்ந்து சிற்றுண்டி அருந்துவது எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது.

வேலப்பன் : எங்களுக்கும் உன்னுடன் ஒன்றாகச் சிற்றுண்டி அருந்துவது எல்லையற்ற மகிழ்ச்சிதான்.

கனலன் : கடந்த சனிக்கிழமை இந்த நேரத்தில்தான் எங்களுக்குத் திருக்குறள் வகுப்பு நடந்தது.

வேலப்பன் : அங்குத் திருக்குறள் வகுப்பும் நடத்துகிறார்களா ?

கனலன் : ஆமாம் அப்பா , பள்ளி முதல்வரே அந்த வகுப்பை நடத்துகிறார்.

பொற்கொடி : சரி. இருவரும் பேசிக்கொண்டிருங்கள் இரவு உணவு சமைக்க வேண்டும். நான் போய் அந்த வேலையைக் கவனிக்கிறேன்.

வேலப்பன் : பல மாதங்கள் கழித்துப் பிள்ளை வந்திருக்கிறான். நல்ல சுவையான உணவாகச் சமைத்திடு. சேர்ந்து மகிழ்ச்சியாக உண்ணலாம். கனலன், நீ திருக்குறள் வகுப்புக் குறித்துச் சொல்.

கனலன் : அப்பா , அதற்கு முன் உங்களிடம் ஓர் அனுமதி வேண்டும்

வேலப்பன் : : அனுமதியா ? என்ன அனுமதி?

கனலன் : பள்ளியிலே எனக்கு ஒரு நண்பன் இருக்கிறான். அவன் மிகவும் நல்லவன். எனக்கு மிகவும் உதவியாக இருக்கிறான். அடுத்த முறை வரும் போது அவனை நம் வீட்டிற்கு அழைத்து வரலாமென்று நினைக்கிறேன்.

வேலப்பன் : : அவன் யார் ? அவன் குடும்பப் பின்னணி என்ன ? பெற்றோர் எப்படிப்பட்டவர்கள் என்று தெரியாமல் நம் வீட்டிற்கு அழைத்துவரக் கூடாது.

கனலன் : அவன் பின்னணி எல்லாம் எனக்குத் தெரியும் அப்பா. வேண்டுமானல் சொல்கிறேன்.

வேலப்பன் : சரி. சொல்.

கனலன் : அவன் பெயர் அறிவரசு.

வேலப்பன் : (அதிர்ச்சியோடு) என்ன அறிவரசா ? அவன் தந்தை பெயர்

கனலன் : நற்குணன்

வேலப்பன் : (மேலும் அதிர்ச்சியோடு) என்ன ? நற்குணனா?

கனலன் : என்னப்பா , அவரை உங்களுக்குத் தெரியுமா?

வேலப்பன் : (பதற்றத்தோடு) அவர் என்ன வேலை பார்க்கிறார் ?

கனலன் : அவர் ஒரு கல்லூரி விரிவுரையாளர்.

வேலப்பன் : (மேலும் அதிர்ச்சியோடு) முன்பு அவர் வாழ்ந்த இடம் ?

கனலன் : கடந்த 10 ஆண்டுகளுக்கு முன் நாம் வாழும் இந்தப் பகுதியில்தான் அவர் வாழ்ந்திருக்கிறார்.

வேலப்பன் : அவன்தான்! அவன்தான்! அந்தப் பொல்லாதவன் தான்!

கனலன் : என்னப்பா என் நண்பனின் தந்தையை உங்களுக்கு முன்பே தெரியுமா?

வேலப்பன் : தெரியுமாவா ? அவனால் எனக்கு நேர்ந்த அவமானம்...

கனலன் : அவரால் உங்களுக்கு என்ன அவமானம் நேர்ந்தது.

வேலப்பன் : அவமானம் மட்டுமா ? அவனால்தான் என் தலைவர் பதவியை இழக்கவும் நேர்ந்தது.

கனலம் : கொஞ்சம் விளங்கும்படி விளக்கமாகக் கூறுங்கள் அப்பா.

வேலப்பன் : நான் ஓர் இயக்கத்தில் நீண்ட காலம் தலைவர் பகுதி வகித்து வந்தேன். அந்த இயகத்திற்கு ஒரு கட்டடம் வாங்கத் திட்டமிட்டேன்; கூட்டத்தில்அதை அறிவித்தேன். அதற்கு யாரும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. யாரும் எப்போதும் என்னை எதிர்த்துப் பேசியதே இல்லை. அவன் மட்டும் அவ்வப் போது எதிரான கருத்துகளைக் கூறுவான்.

கனலன் : கட்டடம் வாங்க அவர் விருபவில்லையா ? உங்கள் திட்டத்தை எதிர்த்தாரா?

வேலப்பன் : “நம்மிடம் போதிய பணமில்லை முதலில் அறக்கட்டளை ஏற்படுத்த வேண்டும். அதன் மூலம் பணம் திரட்ட வேண்டும். அறக்கட்டளை மூலம் தான் கட்டடம் வாங்க முயற்சி செய்ய வேண்டு மென்றான். அவன் பேச்சை ஒரு சிலர் வரவேற்றார்கள். இது எனக்குப் பெருத்த அவமானம் ஆகிவிட்டது. அடுத்தடுத்த கூட்டங்களில் பலர் அவன் பேச்சுக்கு ஆதரவு தெரிவித்தார்கள். அதனால் தன்மானத்தைக் காத்துக் கொள்ளத் தலைவர் பதவியில் இருந்து விலக நேர்ந்தது.

கனலன் : அவர் கூறிய கருத்தில் தவறு இருப்பதாகத் தெரியவில்லையே. நீங்கள் தலைவர் பதவியிலிருந்து விலகியதும் அவர் தலைவரானாரா?

வேலப்பன் : இல்லை. அவன் பிறகு இயக்கத்தில் ஈடுபாட்டைக் குறைத்துக் கொண்டான். கல்வி அமைச்சும் அவனுக்குப் பதவி உயர்வு கொடுத்து வேறு இடத்திற்கு அனுப்பி விட்டது.

கனலன் : அப்பா நீங்கள் சொன்னதை எல்லாம் கேட்டபின் அவர் மேல் குற்றம் இருப்பதாகத் தெரியவில்லை தலைவர் பதவியிலும் ஆசை இல்லாதவராக இருந்திருக்கிறார். எல்லாம் முறைப்படிச் செய்ய வேண்டு மென்று நினைத்திருக்கிறார்.

வேலப்பன் : நீ என்ன சொல்கிறாய் ?

கனலன் : அவர் உங்களுக்கு ஏற்பட இருந்த சிக்கலில் இருந்து உங்களைக் காப்பாற்றி இருக்கிறார் ; நேர இருந்த அவமானத்தை தடுத்திருக்கிறார்.

வேலப்பன் : (நிதானித்துக் கொண்டு) கனலன்!

கனலன் : இயக்கம் என்பது உறுப்பினர் எல்லாருக்கும் சொந்தமானது. அங்கு யாரும் கேள்வி எழுப்பலாம். "வெறுங்கையில் கையில் முழம் போடக்கூடாது என்பார்கள். கடன் பட்டுக் கட்டடம் வாங்கப் போய் , கடனைக் கட்ட முடியாமல் போனால் , யாரும் உதவ முன்வர மாட்டார்கள். நீங்கள்தான் மாட்டிக் கொண்டு அவமானப் பட நேர்ந்திருக்கும். நல்ல வேளை அந்த நல்ல மனிதர் உங்களைக் காப்பாற்றி இருக்கிறார்.

வேலப்பன் : கனலன்......!

கனலன் : நீங்கள் காரணம் இல்லாமல் திடீர் திடீர் என்று சினம் கொள்பவர் அதனால் உண்மைகளை ஆராய்ந்து பார்ப்பதில்லை.

வேலப்பன் : என்ன ? என்னிடம் பொறுமையே இல்லையா?

கனலன் : ஆம்! அதனால்தான் இத்தனை தொல்லைகளும் நேர்ந்தன. கடந்த வாரம் எங்கள் முதல்வர் நடத்திய குறள் வகுப்பில் ஒரு குறளுக்கு விளக்கம் கூறினார். இதுதான் அந்தக் குறள்:

"அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தகை" (151)

வேலப்பன் : இதன் பொருள் என்ன ?

கனலன் : நாம் பூமியின் மேல் நிற்கிறோம். நடகிறோம். அது பொறுமையோடு நம்மைத் தாங்கிக் கொள்கிறது. பூமியில் நீருக்காக குளம் தோண்டுகிறோம். பூமி நம்மையும் சுமந்து கொண்டு தன்னைத் தோண்டவும் இடம்கொடுக்கிறது. அது போல, நாம் பொறுமை காக்க வேண்டும் ; நம்மை இகழ்வாரைப் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

வேலப்பன் : நான் அன்று கூட்டத்தில் நடந்து கொண்டது.....

கனலன் : தவறு என்று சொல்ல மனம் வரவில்லை. நீங்கள் பொறுமை காத்திருக்கலாம். அவர் உங்கள் நன்மையை எண்ணியே

சொல்லியிருக்கிறார். அதை நீங்கள் உணராமல் போய் விட்டீர்கள். நீங்கள் பொறுமை காத்திருந்தால் , அவர் சொன்ன கருத்துக்கு மதி ப்பளித்திருந்தால், நீங்கள் தலைவராய் நீடித்திருக்கலாம்; கட்டடம் கூட வாங்கி இருக்கலாம்.

வேலப்பன் : எங்கே அந்தக் குறளின் கருத்தை மீண்டும் கூறு.

கனலன் : நிலம் ஒருவனைத் தாங்கிக் கொள்கிறது. நீர்த்தேவைக்காக அவன்குளம் தோண்டும் போதும். அவனைப் பாதுகாப்பாகத் தாங்கிக் கொண்டே கிணறு தோண்டவும் இடம் தருகிறது.. அது போன்று நம்மை இகழ்ந்துபேசுபவர் மேல் கோபப்படாமல் பொறுமை காத்திட வேண்டும்.

வேலப்பன் : நல்லது. நீ உன் நண்பனை மட்டும் அல்ல , அவன் பெற்றோரையும் நம் வீட்டிற்கு அழைத்துவா.

கனலன் : நன்றி. மகிழ்ச்சி அப்பா.

பொற்கொடி : (அப்போது) உணவு தயாராகி விட்டது வாருங்கள் உண்ணலாம்.

வேலப்பன் : கனலன் இரவு உணவுக்கு அழைப்பு வந்துவிட்டது வா செல்வோம். (இருவரும் செல்லல்)

**நாடகம் நிறைவு.**

## வாசகர் குரல்

சூலைத் திங்கள் குறள் விருந்து வழக்கம் போலவே அருமை.

நூலகம் பற்றிய கவிதை சிறார்களிடையே நூலகம் செல்லும் பழக்கத்தைத் தூண்டும் ஆற்றல் சால் கவிதை.மேனாள் கன்னிமரா இயக்குநர் ஆவுடையப்பன் அவர்கள் தமிழ்நாட்டு முதன்மை நூலகங்கள் பற்றிய பல அரிய கருத்துகளை அறியச்செய்தார்.பொறுப்பாசிரியர் திருமதி.தாமரை சீனிவாசராவ் அவர்கள் கற்கண்டுக் கதை சொல்லிக் கொடைப்பண்புக்கு வித்திட்டார்கள்.

இப்படி அருமையாக நடக்கும் சிறார் இதழைப் பள்ளியெங்கும் பரப்பவேண்டும்.

அன்புடன், வதிலை பிரதாபன்,தலைவர்,மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை,மும்பை.

# உயிர்நேயம்



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

**ஒரு ஊரில்** ஓர் **அம்மாவும்,அப்பாவும் வாழ்ந்து வந்தார்கள்.அவர்களுக்கு அழகான செல்ல மகன் ஒருவன் இருந்தான்.அவனுக்கு அழகன் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்.அழகன் சிறு வயதிலிருந்து பிற உயிர்களிடத்தில் பேரன்பு கொண்டிருந்தான்.அவர்களிடத்தில்** வளர்ப்புச் செல்வங்களாக **ஆடுகள்,மாடுகள்,கோழிகள் என நிறைய இருந்தன.அது மட்டுமல்லாமல் நாய்கள்,பூனைகள் வேறு இருந்தன.இ**வற்றை வளர்ப்பது பெருஞ்செலவு உண்டாக்குமல்லவா? **அவனது தந்தை இவ்வளவு சுமைகளைத் தாங்க முடியாமல் சில கால்நடைகளை விற்க ஆரம்பித்தார்.மிகவும் கடினமான சூழ்நிலையில் சற்றும் விருப்பமில்லாமல் அழகனின் தாயும் அதற்கு சம்மதித்தார்.**

**எவ்வளவு நாட்கள் தான் நாம் இவ்வாறு கடினமாக உழைப்பது ?அழகனையும் நாம் இவ்வாறே வேலையில் ஈடுபடுத்திவிட்டால் அவனுக்குப் படிப்பில் கவனம் இருக்காது.ஆகவே நாம் இவற்றை விற்றுவிட்டு எங்கையாவது நகர்ப்புறம் சென்றுவிடலாம் என்று முடிவெடுத்தனர்.வேறு வழியில்லாமல் பெற்றோருடன் சென்றான் அழகன்.தந்தையிடம் தான் வளர்த்த சில பூனைகள் ,நாய்களாவது கொண்டு செல்லலாம் என்று கெஞ்சி அழுதான்.சரியென்று அவரது தந்தையும் ஒப்புக் கொண்டார்.அவரது உறவினர்களும் ,அக்கம் பக்கத்தாரும் அவர்கள் செல்வது சரியில்லை என வாதம் செய்தார்கள்.இங்கில்லாத செல்வத்தை,வசதியை நகரத்தில் காண முடியுமா என்று கேள்வி கேட்டனர்.தங்கள் கருத்தைக் கூறிக் கொண்டிருந்தவர்களை அவர் சற்றும் கவனிப்பதாகத் தெரியவில்லை. அழகனின் தந்தை முடிவை மாற்றிக் கொள்ளவே இல்லை.கண்டிப்பாக நகரத்தில் வேலையெடுத்து,சீக்கிரமாக நல்ல நிலைமைக்கு உயர்வேன் என்று உறுதியாகக் கூறினார்.பின்பு தங்கள் உடைமைகளை எடுத்துக் கொண்டு கிளம்பினர்.நகரத்திலும் குடியேறினிட்டனர்.கிராமத்தில் இருந்த நிதானமான ,ஆனந்தமான வாழ்க்கை நகர வாழ்க்கையில் கிடைக்குமா என்ன?அந்த பரபரப்பான சூழல் சற்றுக் கடினமாகவே இருந்தது மூவருக்கும்.தந்தைக்கும் வேலைக் கிடைப்பது மிகவும் கடினமானதாக இருந்தது.சில நாட்கள் கழித்து ஒரு இடத்தில் அழகனின் தந்தைக்குப் பணியும் கிடைத்தது.அவர் வேலைக்குச் சென்று**

வர,சில நாட்கள் கழித்து அழகனை ஒரு நல்ல பள்ளியில் சேர்த்தார்.புது இடத்தில் பழக சில நாட்கள் ஆகும்..ஆனால் அழகனுக்கு க் கிராமத்து ச் சூழல் தான் பிடித்திருந்தது.இச்சூழல் மிகவும் அந்நியமாகவே தெரிந்தது.மிகவும் வருத்தப்பட்டான்.இயற்கையின் சூழலும் ,அவனது வீடும்,அவனது நினைவுகளும் வந்து ,வந்து கண் முன் நின்ற ன.சில நாட்கள் அழுவதும் ,அடம் பிடிப்பதுமாக,பிறகு அமைதியடைவது என்று மாறி மாறிச் சென்றது.ஆனாலும் பெற்றோர் சொல் கேட்கும் பிள்ளையாக இருக்கத் தவறவில்லை.மாதங்கள் கழிந்த பிறகு அனைத்தையும் பழகிக் கொண்டான்.வழக்கம் போல ப் பள்ளிக்குச் செல்லும் நேரம் மட்டுமன்றி தனது ஓய் வு நேரங்களையும் மிகச் சரியாகப் பயன்படுத்தினான்.தனது செல்லப் பிராணிகளைப் பத்திரமாகக் கவனித்து வந்தான்.

பள்ளியில் எப்போது கட்டுரைகள் வரையச் சொன்னாலும்கதைகள் கேட்டாலும் தனது ஊரின் இயற்கை எழில் பற்றியும் ,அவர்கள் வீட்டுச் செல்லப் பிராணிகள் பற்றியும் அடிக்கடி கூறிக் கொண்டிருப்பான்.ஆசிரியரே அவன் விலங்குகளிடம் காட்டும் அன்பைப் பார்த்து வியந்து போனார்.அடிக்கடி பள்ளியில் விழா நடத்தும் போது அழகனின் பங்களிப்பு மிகவும் முக்கியமானதாக மாறியது.பேச்சில் பிறரைக் கவர்ந்திழுப்பான்.இப்படியாகப் பல ஆசிரியரின் பாராட்டுக்களைப் பெற்றான்.

ஒரு நாள் பள்ளியின் சுதந்திர தின விழாவிற்காக மாவட்ட ஆட்சியர் வருவதாக முடிவு செய்திருப்பதாகத் தலைமை ஆசிரியர் கூறினார்.அந்த மாவட்ட ஆட்சியரும் அரசுப் பள்ளியில் தமிழ் வழியில் படித்தவர் என்பதால் மிகுந்த ஆர்வத்துடன் கலந்துரையாடல் செய்ய இருக்கிறார் என்று அறிவிப்பை வெளியிட்டார்.மாணவர்கள் அனைவருக்கும் மிகுந்த மகிழ்ச்சியாக இருந்தது.ஒவ்வொரு வகுப்பிலும் ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களை தயார் செய்துக் கொண்டிருந்தார்கள்.மாவட்ட ஆட்சியரிடம் எப்படி பேச வேண்டும்,எப்படியெல்லாம் தகுந்தவாறு மரியாதையுடன் நடக்க வேண்டுமெனப் பயிற்சி அளித்தார்கள்.



நாட்களும் சென்றன.பள்ளியின் சுதந்திர தின விழா நிகழ்வுகளுக்கான அரங்கங்கள்,தூய்மைப் பணிகள்,இருக்கை வசதிகள் அனைத்தும் தயார் நிலையில் இருந்த ன.நிகழ்ச்சி தொடங்கிய நிலையில் பல காவல்துறை வாகனங்கள் சூழ மாவட்ட ஆட்சியர் வந்தார்.தலைமை ஆசிரியரும்,பிற ஆசிரியர்களும்,மாணவர்கள் கொடியசைத்து வரவேற்க தாங்களும் கைத்தட்டி அவரை உற்சாகமாக வரவேற்றனர்

பிறகு பள்ளி வளாகத்தில் கொடியேற்றி விட்டு நாட்டுப்பண் பாடினர்.கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.பிறகு ஆசிரியர்கள் அவருக்கு மரியாதை செய்து தலைமையுரை அளிக்குமாறு அழைத்தனர்.மிகுந்த மகிழ்வோடு மாவட்ட ஆட்சியர் தனது உரையைத் தொடங்கினார்.நம் நாட்டின் விடுதலைக்காக எண்ணற்ற மகாத்மாக்கள் போராடியதையும் ,உயிர் நீத்ததையும் மிகவும் உணர்வுப் பூர்வமாகப் பேசினார்.அந்த வரலாறு தான்தான் ஒரு நாட்டு நலப் பணியில் ஈடுபடும் ஊழியனாக மாற வேண்டும் என்ற நோக்கமானது என்றார்.இன்று மாவட்ட ஆட்சியராக சாதாரண நிலையிலிருந்து இவ்வாறாக உயர்ந்திருக்கிறேன் என்று கூறினார்.உரையை முடித்தபின் தேர்வு செய்த மாணவர்களோடு உரையாடலைத் துவக்கினார்.

பலரும் விதவிதமாக கேள்விகள் கேட்டு ,பதில்கள் கூறி அவரை வியப்பில் ஆழ்த்தினர்.அப்போது அழகன் எழுந்து ஐயா நான் உங்களுக்கு அளிக்க ஒரு மனு கொண்டு வந்திருக்கிறேன் என்றான்.அதை உங்கள் முன்னரும்,ஆசிரியர்கள் முன்னரும் படித்துக் காட்டி விடுகிறேன் என்றான்.ஆசிரியர்கள் பயந்து ,வேண்டாம்,வேண்டாம் கேள்விகளுக்கு மட்டும் பதில் சொல் என்றனர்.ஆனால் மாவட்ட ஆட்சியர் பரவாயில்லையப்பா நீ படி என்றார்.

உடனே முன்னெழுந்து வந்து ஐயா நான் இப்பள்ளியில் ஆறாம் வகுப்பு படிக்கிறேன்.என் பெயர் அழகன் ,நான் எனது கிராமத்தில் இருந்து படிப்பதற்காக எனது தந்தை என்னை அழைத்து வந்தார்.நான் பள்ளிக்கு வரும் வழியில் நிறைய கால்நடைகளைப் பார்க்கிறேன்.அவைகள் மிகவும் மெலிந்தும் காணப்படுகி ன்றன.அது மட்டுமல்லாமல் அவை உணவில்லாமல் தாள்களையும் , நெகிழிப் பைகளையும் உட்கொள்கி ன்றன.பார்ப்பதற்கே பாவமாக உள்ளது.மேலும் மனிதர்கள் அதிகமாக நடமாடும் பகுதியாதலால் நிறைய விபத்துக்களும் நடைபெறுகி ன்றன.நகரத்தில் அனைவரும் சிறு குடியிருப்பில் இருப்பதால் அவைகளைப் பராமரிக்க முடியாமல் சாலையில் விட்டு விடுகின்றனர்.எனவே தங்களின் மேற்பார்வையில் அவைகளைத் தங்க வைக்க அரசு ஒரு மாட்டுத் தொழுவம் கட்டித் தந்தால் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். உரிமையாளர்களை வலியுறுத்திக் கட்டணம் பெற்றுக் கொண்டு,உணவளித்து சரியாகக் கவனித்துக் கொள்ளலாம் என்றான்.

மாவட்ட ஆட்சியர் ,அவனைக் கட்டியணைத்துப் பாராட்டினார். “இவ்வளவு சிறு வயதில் எவ்வளவு இரக்க மனம் உனக்கு! நீ கூறுவதும் அருமையான செய்தி தான்.கண்டிப்பாக இதைக் கவனத்தில் எடுத்துச் செய்கிறேன் ” என்றார். ’ஆமாம்,இதை யார் உன்னிடம்

கூறினார்கள்' என்று கேட்டார்.அதற்கு அழகன் , "இல்லை ஐயா அந்த கால்நடைகள் தரும் பாலைத் தானே நாமும் குடிக்கிறோம்.நெகிழிப் பைகள் மக்குவது எவ்வளவு கடினம் என்று நாங்கள் தான் பாடப் புத்தகத்தில் படிக்கிறோமே.அப்படிப்பட்ட உணவை கால்நடைகள் உண்பதால் எவ்வளவு கேடு விளையும் ?இதை நாம் தடுக்க முயற்சி செய்ய வேண்டாமா! " என்றான்.

ஆமாம். அழகனின் அந்த முன்னெடுப்பு அனைவரையுமே சிந்திக்க வைத்தது.அது அவ்வளவு எளிய பணி இல்லையென்றாலும் அரசிடம் அதை முக்கியப் பணியாக தேர்வு செய்ய முயல்கிறேன்.செய்து காட்டுகிறேன் என்று உறுதியளித்தார் மாவட்ட ஆட்சியர்.அனைவரும் அவனது இரக்க மனத்தையும் ,அறிவுத் திறத்தையும் ,தைரியத்தையும் பாராட்டினர்.விழா இனிதே நிறைவு பெற்று அனைவரும் சென்றனர்.

எவ்வளவு துன்பங்கள் வந்தாலும் ,கடின நிலையில் இருந்தாலும் , அருள் உள்ளம் கொண்டு பிறருக்காக இரங்குபவரிடம் எப்போதும் இருள் சேராது என்பதே இக்குறள் விளக்கம்.சாதாரண நிலைமையில் அழகனின் குடும்பம் இருந்தாலும் அவன் சிந்தனையோ இரக்கமுள்ளதாகவும், உயர்வானதாகவும் இருந்தது.அன்பு செய்து வாழ்வோம்.கனிவுடன் பழகுவோம்.அருள்சேர்நத மாந்தராய் மாறுவோம்.

அருள்சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த

இன்னா உலகம் புகல்.- குறள் – 243 [அருள் உடைமை]

அன்பு,இரக்கம்,கருணை ஆகியவற்றால் ஆனதே இப்பூவுலகம்.ஒவ்வொரு இயக்கமும் அன்பினாலேயே பின்னப்பட்டுள்ளது.இறைப் பொருளும் நமக்கு உணர்த்தும் கருத்தும் அதுவே.மதத்தாலும்,இனத்தாலும்,மொழியாலும் பல்வேறு பிரிவுகள் மனிதரிடையே இருந்தாலும் அனைவருக்கும் அடிப்படையாக இருக்க வேண்டியது அருளுடன் கூடிய அன்பு.அப்படிப்பட்ட அருள் உள்ளத்தவர்க்கு எந்த விதமான கடின சூழ்நிலையையும் மாறிவிடும்.பகைமையை குறைத்துவிடும்.அதைத்தான் வள்ளுவர் மிக அழகாக இக்குறளிள் வலியுறுத்தியுள்ளார். அருளாளர்கள் என்றுமே இருள் என்னும் உலகிற்கு செல்வதில்லை.அவர்களுக்கு என்றும் இருள் சூழ்வதில்லை.கருணை என்னும் அருள் வட்டத்தில் இருப்பதால் எப்போதும் ஒளி வீசி அருள் பொழிவார்கள்.

அனைத்து உயிரையும் தம்முயிர் போல் விரும்பி வாழுபவர்க்கு என்றும் அழிவில்லை.சமரச சன்மார்க்கம் என்னும் ஒப்பற்ற உயரிய நெறியை வழங்கிய வள்ளலார் இன்றளவும் போற்றப்படுகிறார் என்றால் அது அருள் நெறியை அளித்ததால் மட்டுமே தவிர வேறு பொருள் இருக்க முடியாது.மனிதரை மட்டுமன்றி அனைத்து உயிர்களுக்கும் கருணையை வாரி வழங்கினார்." வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்" என்று செடி,கொடிகளுக்கும் கருணை பொழிந்தார்.அப்படிப்பட்ட கருணையுள்ளத்தோடு பிற உயிர்களிடத்தில் அணுகுபவர்க்கு வாழ்வில் இருள் ஏது.?

## கல்வி சிறந்த தமிழ்நாடு  வான்புகழ் கொண்ட தமிழ்நாடு



செல்வன் செ.குருபரன்

சந்திரயான் 3 வெற்றிகரமாக நிலாவில் தரையிறங்கிவிட்டது. மொத்த உலகின் கண்களும் இஸ்ரோ மீது பதிந்திருந்த நேரத்தில் இந்த வரலாற்றுச் சாதனையைப் புரிந்திருக்கிறது.

சந்திரயான் -3இன் விக்ரம் லேண்டரும், பிரக்ஞான் ரோவரும் நிலவின் தென் துருவத்தில் தரையிறங்கி உள்ளன. இதன் மூலம் நிலவில் லேண்டரை தரையிறக்கிய நான்காவது நாடு என்ற பெருமையை இந்தியா பெற்றுள்ளது. லேண்டரை மென்மையாகத் தரையிறக்கிய முதல் நாடு என்ற சாதனையையும் இந்தியா படைத்துள்ளது.

செயற்கைக்கோள்களின் சேவை இன்று அனேகமாக அனைத்துத் துறைகளுக்கும் இன்றியமையாததாகி விட்டது.அதாவது பாதுகாப்பு, கல்வி, தொலைத்தொடர்பு, பேரிடர் மேலாண்மை, காலநிலை மாற்றம், காடுகள் பாதுகாப்பு, தொலைதூர மருத்துவம், வானிலை முன்னறிவிப்பு, வங்கி, தொலைக்காட்சி, இணையதளம், கடல்சார் பணிகள், விமானப் போக்குவரத்து எனப் பல்வேறு முக்கிய துறைகளிலும் செயற்கைக்கோள்களின் பயன்பாடு இன்று இன்றியமையாததாக உள்ளது.

தமிழ்நாட்டு பாடத்திட்டம் வென்றது, இஸ்ரோவின் முதன்மைப் பணிகளின் திட்ட இயக்குனர்கள் !

சந்திராயன் 1 - மயில்சாமி அண்ணாதுரை

சந்திராயன்  2 - வனிதா முத்தையா

சந்திராயன்  3 - வீரமுத்துவேல்

மங்கள்யான் - சுப்பையா அருணன்

இவர்கள் அனைவரும் தமிழர்கள்....

இதைவிட முதன்மையானது

இவர்கள் தமிழ்நாடு மாநிலப் பாடத்திட்டத்தில் படித்தவர்கள்



மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.

குறள் விளக்க்க் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை anjal@kuralvirtual.com எனும் மின்ன்ஞ்சல் முகவரிக்கு  அனுப்புங்கள்

குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு

உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது

புலன எண் தெரிவித்தால் போதும்!



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2054 புரட்டாசி--7 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2023 செபுத்தம்பர்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்










**குறளைக் கற்போம் குழந்தைகளே**

**குன்றெனப் புகழைக் குவிப்போமே**

**பிஞ்சு வயதினில் கற்றிடும் குறளால்**

**நெஞ்சில் நன்னெறி விதைப்போமே**

**சிறுவர்கள் பயிலும் குறள்நெறியால்**

**பெருமைகள் பலவும் சேர்ப்போமே**

**வள்ளுவர் தந்த வான்மறையால்**

**வாழ்வில் சிறப்புடன் உயர்வோமே**

**நாடும் வீடும் நலம் பெறவே**

**நாளும் குறளைக் கற்போமே**

**கசடறக் கற்றுத் தெளிவோமே**

**கற்றபின் அதன்வழி நிற்போமே**

**வல்லமை பெற்று உழைப்போமே**

**வல்லரசாக நாட்டை அமைப்போமே**


சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்



# பொறுமை வென்றது

பாவலர் முரசு நெடுமாறன்

(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் " மலேசியாவின் அழ.வள்ளியப்பா " "என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் "என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.
தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)

## காட்சி : 1

இடம் : அலுவலகத்தின் ஒருபகுதி
நேரம் : காலை

கதை மாந்தர் : இளங்கோ, மணிமொழி

நிலை : இளங்கோ அருள் மாமணியைச் சந்திக்க வருதல். அவர் அலுவலகத்தில் இல்லாததால் அவர் மனைவி மணிமொழியைச் சந்தித்தல்.

இளங்கோ : (அறைக் கதவைத் தட்டுதல், மணிமொழி கதவைத் திறத்தல்.) அம்மா வணக்கம். என் பெயர் இளங்கோ வணக்கத்திற்குரிய அருள் மாமணி ஐயாவைப் பார்க்க வந்தேன்.

மணிமொழி : வாருங்கள்! உட்காருங்கள். ஐயா வெளியே சென்றுள்ளார்; மாலையில்தான் திரும்புவார்.

இளங்கோ : நான் சென்று மாலையில் வரட்டுமா அம்மா ?

மணிமொழி : எதற்காக அவரைப் பார்க்க வந்தீர்கள் என்று சொன்னால் நான் அவரிடம் சொல்லி, நாளை நீங்கள் அவரைச் சந்திக்க ஏற்பாடு செய்வேன்.

இளங்கோ : நான் வேறு ஒருவருக்காக உதவிநாடி ஐயாவைப் பார்க்க வந்தேன்.

மணிமொழி : யார் அவரென்று தெரிந்தால் , அவரைப்பற்றி ஐயாவிடம் சொல்லிச் சந்திக்க ஏற்பாடு செய்வேன்.

இளங்கோ : அவரை உங்களுக்குத் தெரியும் அம்மா.

மணிமொழி : (சிறிது எண்ணிப் பார்த்து) யார் அவர் ? அவர் பெயரைச் சொல்ல ஏன் தயங்குகிறீர்கள்?

இளங்கோ : அவர் நம் ஐயாவுக்குப் பெருங்கொடுமைகள் செய்தவர். அவர் நேரில் வந்து ஐயாவைப் பார்த்து உதவி கேட்க வெட்கப்படுகிறார்.

மணிமொழி : ஐயா யாரையும் புறக்கணிக்க மாட்டார். அவர் பகைவனுக்கும் அருளும் பண்புடையவர்; திருவள்ளுவர் தந்த திருக்குறள் நெறிப்படி வாழ்பவர்.

இளங்கோ : ஐயாவைப் பர்றித் தெரியும் அம்மா. இருந்தாலும்.

மணிமொழி : தயங்க வேண்டா. அவர் யாரென்று சொல்லுங்கள்

இளங்கோ : பதவித்திமிரும்        , அதிகார வெறியும் கொண்ட.......

மணிமொழி : யார்       ? மாமல்லனா?

இளங்கோ : (வியப்புடன்) கண்டுபிடித்து விட்டீர்களே. அம்மா!
எல்லாரும் போற்றும் சான்றோரான அருள்மொழி
ஐயாவின் துணைவியார் அல்லவா நீங்கள்.

மணிமொழி : சரி       , அவர் ஏன் ஐயாவைப் பார்க்க விரும்புகிறார். என்று
தெரிந்து கொள்ளலாமா?

இளங்கோ : அதை அவர் வெளிப்படையாகச் சொல்லவில்லை.
“ஐயாவைக் கண்டு பேச அனுமதி வாங்கிக் கொடுங்கள்
என்று மட்டும் கேட்டுக்கொண்டார்.

மணிமமொழி : இந்தச் செய்தியை நான் ஐயாவிடம் சொல்வேன்.

இளங்கோ : நன்றி அம்மா. நாளைக்கு அவரை வந்து ஐயாவைச்
பார்க்கச் சொல்வேன்.

மணிமொழி : நல்லது. சென்று வாருங்கள்.

**காட்சி முடிவு.**

**காட்சி : 2**

இடம் : அலுவலக அறை
நேரம் : காலை
கதை மாந்தர்   :  அருள்மொழி, மாமல்லன்
நிலை : மாமல்லன் தாம்  செய்த மொடுமைகளுக்காக
மன்னிப்புக்

கோருதல் ; அருள்மொழி உதவுதல்.

அருள்மொழி : (தம்மைக் காண வந்தவரிடம்)
வா மாமல்லன் (நாற்காலியைக் காட்டி) அமருங்கள்.

மாமல்லன் : (கூனிக் குறுகி) நன்றி ஐயா.

அருள்மொழி : சிற்றுண்டி அருந்தலாமே.

மாமல்லன் : (மிகப்பணிவாக) நன்றி ஐயா! சற்றுமுன்தான் ஐயா சிற்றுண்டி அருந்தினேன்.

அருள்மொழி : என் அலுவலகத்திற்கு நீங்கள் இதுவரை வந்ததே இல்லை. இன்று திடீரென்று வந்திருப்பது....?

மாமல்லன் : நேற்று என் நண்பர் இளங்கோவிடம் தங்களைக் காண அனுமதி கேட்டு......

அருள்மொழி : என் துணைவியார் சொன்னார்கள். என்னை வந்து பார்க்க என்ன தயக்கம்?

மாமல்லன் : நான் உங்களுக்கு எத்தனையோ கொடுமைகள் செய்திருக்கிறேன். அதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

அருள்மொழி : ஒருவர் செய்த நன்றியைத்தான் மறக்கக் கூடாது. நன்று அல்லாதவற்றை அன்றே மறந்து விட வேண்டுமென்று திருவள்ளுவர் கூறியுள்ளாரே!

மாமல்லன் : ஐயா! நான் திருக்குறள் எல்லாம் படித்ததில்லை.

அருள்மொழி : சரி      , நீங்கள் என்னைப் பார்க்க வந்த நோக்கத்தைக் கூறுங்கள்.

மாமல்லன் : என் மகனைத் தனியார் கல்லூரி ஒன்றில் சேர்க்க விரும்புகிறேன். அந்தக் கல்லூரியில் ஒரு மாணவனுக்கு. இடம் கிடைப்பது அவ்வளவு எளிதான காரியம் இல்லை மதிக்கத்தக்க. உயரிய பண்பாளர் ஒருவரின் பரிந்துரைக் கடிதம் இருந்தால்தான் இடம் தருவார்கள்.

அருள்மொழி : இங்குப் பெரிய பெரிய பதவிகளில் உள்ளவர்களை எல்லாம் உங்களுக்குத் தெரியுமே.

மாமல்லன் : அங்குப் பதவி முக்கியம் இல்லையாம். பண்பாட்டில் உயர்ந்தவர் பரிந்துரைதான் தேவையாம். தங்களிடம் பரிந்துரைக் கடிதம் பெற்ற மாணவர் சிலர் அக் கல்லூரியில் சேர்ந்திருக்கிறார்களாம்.

அருள்மொழி : அக் கல்லூரியில் சேர்ந்தால் உங்கள் மகன் அங்குள்ள நெறிமுறைகளைத் தவறாமல் பின்பற்றி ஒழுங்காக நடந்து கொள்ள வேண்டுமே.

மாமல்லன் : நடந்து கொள்வான் ஐயா! நான் உங்களுக்கு உறுதி கூறுகிறேன். அவனை நான் கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொள்வேன் ஐயா. அவன் உங்களைப் போன்றவர்கள் வழியைப் பின்பற்றிவாழ வேண்டுமென்று  விரும்புகிறேன். நான் முன்போல இல்லை. இப்பொழுது என்னை எவ்வளவோ மாற்றிக் கொண்டேன். என் பையனை மற்றவர் மதிக்கும் வண்ணம் உயர்த்திக்காட்ட வேண்டும் என்பதே என் இலட்சியம்.

அருள்மொழி : உங்கள்பையனைப் பற்றித் தப்பாகஎதுவும் நான் கேள்விப்பட்டதில்லை.

மாமல்லன் : ஐயா , அவனை அவன் தாய் கவனமாகப் பார்த்துக் கொள்கிறாள்.
தமிழையும் ஆழமாகக்கற்றுத் தருகிறாள் அவளின் விருப்பப்பபடிதான் நான் என் பையனை அக் கல்லூரியில் சேர்க்க விரும்புகிறேன்.

அருள்மொழி : சரி. கடிதம் எழுதி வைக்கிறேன். நாளை வந்து பெற்றுக் கொளுங்கள்.

மாமல்லன் : ஐயா. நான் உங்களுக்கு எப்படி நன்றி கூறுவதென்று தெரியாமல் தவிக்கிறேன். நான் தங்களுக்குச் செய்த கொடுமைகளுக்காக மீண்டும் என்னை மன்னிக்க வேண்டுகிறேன்.

அருள்மொழி : மன்னிப்பெல்லாம் கேட்க வேண்டா. பையன் நல்வழியில் நடந்து உயர உங்கள் மனைவியோடு நிங்களும் சேர்ந்து பாடுபடுங்கள்.

மாமல்லன் : நன்றி யா. அப்படியே நடந்து கொள்கிறேன். நாளைக்கு வந்து கடிதத்தைப் பெற்றுக் கொள்வேன்.

அருள்மொழி : சரி. நாளை வாருங்கள்.

**காட்சி முடிவு.**

**காட்சி : 3**

இடம் : இல்லத்தின் ஒரு பகுதி
நேரம் : மாலை

கதை மாந்தர் : அருள்மொழி, மணிமொழி

நிலை : மாமல்லனுக்குப் பரிந்துரைக் கடிதம் தந்தது பற்றி உரையாடுதல்.

மணிமொழி : மாமல்லன் கேட்டதும் அவர் மகனுக்குப் பரிந்துரைக் கடிதம் தந்து விட்டீர்களே.

அருள்மொழி : ஒரு மாணவன் கல்விக்கண்பெற உதவத் தயங்கக் கூடாது. அந்தப் பையன் அவன் அன்னையின் கண்காணிப்பில் ஒழுங்கானவனாக வளர்ந்து வருவதை அறிந்தேன். அப் பையனைப் பற்றி இதுவரை எந்தப் புகாரும் எழுந்ததில்லை. தந்தையால் அவன் பாழ்பட்டு விடக் கூடாது அல்லவா?

மணிமொழி : அவன் உங்களுக்கு எத்தனை க் கொடுமைகள் செய்தான்? உங்களுக்குக் கெட்ட பெயர் ஏற்படுத்த எத்தனை முயற்சிகள் மேற்கொண்டான்?

அருள்மொழி : நாம் நல்லவர்களாக இருந்தால் யாராலும் நமக்குக் கெட்ட பெயரை ஏற்படுத்த முடியாது.

மணிமொழி : நீங்கள் இந்த அளவு பொறுமை சாலியாக இருப்பது வியப்பாக இருக்கிறது.

அருள்மொழி : என் தந்தை திருக்குறளை ஆழப் படித்தவர். எனக்கு அவர் கற்பித்த திருக்குறள்தான் என்னை இத்துணைப் பொறுமைசாலியாக்கியது.

மணிமொழி : உங்களிடம் உள்ள பொறுமை , பொறுமையிலும் பொறுமை மிக்கது. திருக்குறளின் பதினாறாம் அதிகாரமான 'பொறை உடைமை' அதிகாரத்தைப் பலமுறை ஆழ்ந்து படித்திருக்கிறேன். பலர் எழுதியஉரை விளக்கங்களைத் தேடித் தேடிப் படித்திருக்கிறேன்.அந்த அதிகாரத்தில் எந்தக் குறள் உங்களுக்கு மிகவும் பிடிக்கும்.

அருள்மொழி : பட்டை தீட்டப் பெற்ற உயரிய வைரக் கற்களில் , எது சிறந்தது என்று கூற முடியுமா? அதுபோல்தான் திருக்குறள் பாக்களும்!

அண்மையில் நான் ஆழ்ந்து படித்த குறள்;

“மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தான்தம்
தகுதியான் வென்று விடல்” (158) என்ற குறள்.

மணிமொழி : இந்தக் குறளுக்குப் பலபேர் எழுதிய விளக்கங்களைப் படித் திருக்கிறீர்கள்.. அதுபற்றி நீங்கள் அறிந்து வைத்துள்ள விளக்கத்தைக் கூறுங்களேன்.

அருள்மொழி: : சிலர் செருக்குமிக்கவர்களாக - அதாவது ஆணவம் மிக்கவர்களாக இருப்பர். செல்வத்திலும் உயர்ந்திருப்பர். பதவிதந்துள்ள அதிகாரத்திலும் வலிமை பெற்றிருப்பர். அப்பேர்ப்பட்டவர்களில் சிலர் தம்மை யாரும் எதுவும் செய்ய முடியாது என்று கருதிப் பிறர்க்குக் கொடுமை செய்வர், மனம் வருந்தி நொந்து போகும் அளவு திட்டித் தீர்ப்பர்.
அப்பேர்ப்பட்டவர்களைப் பழிக்குப் பழி வாங்கும் வண்ணம் நாமும் கொடுமைப் படுத்த கூடாது. நாம் காட்டும் பொறுமையினால் அவர்கள் வெட்கப்பட்டுத் தம் தவறை உணர்ந்து தலைகுனியச் செய்ய வேண்டும். அதற்குத் துணை புரிவதே பொறுமை. ஆகவே, பொறுமையைப் போற்றி உயர வேண்டும் என்பதேஇக் குறளுக்குரிய பொருள்.

மணிமொழி : நீங்கள் முன்பு கூறிய விளக்கத்தை விட , இப்பொழுது கூறிய விளக்கம் மிக நன்றாகப் புரிகிறது.

அருள்மொழி : அப்படியா ? அண்மையில் இது குறித்துப் பல உரைகளைப் படித்தேன் அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளையும் ஆழ்ந்து படித்தேன். எனக்கு அதனில் நல்லதெளிவு ஏற்பட்டது. நாம் நாள் தோறும் குறைந்த நேரமாவது ஒதுக்கி, நூல்களைத் தவறாமல் படித்து வரவேண்டும். அப் பொழுதுதான் தெளிவு பிறக்கும்.

மணிமொழி : நான் இனிமேல் புத்தகம் படிக்க ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் ஒதுக்குவேன்.

அருள்மொழி : உனக்கு மிகுதியான நேரம் இருக்கிறது. நூல்கள் படிக்க ஒரு நாளைக்கு இரண்டு மணிநேரமாவது செலவிடலாமே.

மணிமொழி : நீங்கள் சொன்னபடியே செய்வேன். இந்தப் பேழையில்
- அலமாரியில் உள்ள நூல்களில் பாதியையாவது
படித்துத் தெளிவு பெறுவேன்.

அருள்மொழி : மகிழ்ச்சி. இதற்காக மாமல்லனுக்கு நன்றி கூற
வேண்டும்.

(வியப்புடன்)

மணிமொழி : என்ன ? அவனுக்கு நன்றி கூற வேண்டுமா? ஏன்?

அருள்மொழி : உனக்கு நிறைய நூல்கள் படிக்க வேண்டுமென்ற
விருப்பம் தோன்றக் காரணமாக இருந்தான் அல்லவா?
அதற்காகத்தான்.

மணிமொழி : நல்ல வேடிக்கை (இருவரும் சிரித்தல்)

நாடகம் நிறைவு

## இனிய சொற்களைத் தேர்ந்து சொல்வாயே

அகத்தில் அன்பை வளர்த்திட வேண்டும்-உலகில்
அனைவர் நட்பையும் இணைத்திட வேண்டும்
சொல்லில் அன்பைக் குழைத்திடவேண்டும்
வெல்லச் சொல்லை வழங்கிட வேண்டும்
சிரித்தால் உனது சொத்து குறையுமா
வணக்கம் சொன்னால் வாய் வலித்திடுமா? (அகத்தில்)
கடுகடு முகத்தைக் கண்ணாடியில் பார்த்தால்
கசந்தே வெறுப்பாய் உன்னையே நீயும்!
மலர்ந்த முகமும் மகிழ்ந்த சொல்லாடலும்
உலகையே உன்வசமாக்கிடும் உறுதியாய்!
இனிய சொற்களைத் தேர்ந்து சொல்வாயே
எடுத்த செயலெல்லாம் வெற்றி கொள்வாயே!
கனியும் நாள்பட்டால் கன்றிப் போய்விடும்
இனியசொல்லோ என்றும் அமுதமாய் நிலைக்கும். (அகத்தில்)
தாயிடம் கண்ட நேயமும் பாசமும்
தரணியில் அனைவர்க்கும் வழங்கித் தான் பாரேன்!
உறவாய் உலகெலாம் போற்றிடுவாரே!
வையத்தலைமையை வழங்கிடுவாரே! (அகத்தில்)

# சோம்பலைத் தவிர்ப்போம்



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச்
சங்கத்தின் பொருளாளர்.

.

அழகான பெருங் காட்டில் மிருகங்கள் அனைத்தும் கூடி மகிழ்ந்து இருந்தன.வழக்கம் போல காட்டிற்குத் தலைவனான சிங்கம் தனது கூட்டத்துடன் மகிழ்ச்சியாக வாழ்ந்து வந்தது.இன்ன பிற வேட்டையாடும் மிருகங்களான புலி,சிறுத்தை,ஆகியன அதன் கூட்டத்துடன் வாழ்ந்து வந்தன.ஒரு நாள் திடீரென சிங்கத்திற்கு ஒரு யோசனை தோன்றியது.நாம் தான் இந்த காட்டையே ஆண்டு கொண்டு இருக்கிறோமே,நாம் ஏன் ஓடித் திரிந்து வேட்டையாடி உணவைத் தேட வேண்டும்? நம்மிடம் இவ்வளவு நாட்கள் நாம் உண்ட உணவுகளின் மிச்சத்தை இந்த ஓநாய்,நரியெல்லாம் தின்றதே.இனிமேல் அதை மிரட்டி உணவு எடுத்து வரச் சொல்லுவோம் என்று நினைத்தது.ஆனால் கூட இருந்த மற்ற சிங்கங்கள்,நீ செய்வது பெருந் தவறு.உனக்கான உணவை நீ தான் தேடிச் செல்ல வேண்டும்.இப்படி அடுத்தவர்கள் கொண்டு வருவார்கள் என்று நினைத்தால் அதுவே பெரிய தவறு.இதில் எங்களை வேறு உன்னுடன் அழைக்கிறாய்! நாங்கள் வரவில்லையப்பா.ஆளை விடு என்று கூறிவிட்டுச் சென்றது.எங்கள் உணவை நாங்களே தேடிக் கொள்கிறோம்

என்று அவைகள் பிரிந்து சென்று விட்டன.ஆனால் அந்த சிங்கம் தனது முடிவில் தெளிவாக இருந்தது.போங்கப்பா போங்க,நான் நமக்கிருக்கும் பலத்தைப் பற்றிச் சொன்னேன்.உங்களுக்கு அது புரியவில்லை என ஏளனமாகச் சிரித்தது.ஆனால் மற்ற சிங்கங்கள் அதனது அறியாமையை எண்ணி,உன் சோம்பேரித்தனம் உன்னை எங்கே கொண்டு விடப் போகிறதோ என்று கூறி அவைகள் பிரிந்து சென்றன.

சிங்கம் ஒரு நரியை வரவழைத்து,ஏ நரியே,நான் யார் என்று கர்வமாக கேட்டது.உடனே சிங்கத்தின் குணத்தை அறிந்த அந்த தந்திரமான நரி,அடடா என்ன சிங்க இராசா இப்படி கேக்கறீங்க?நீங்க இந்த காட்டிற்கே தலைவன் இல்லையா? ஒருத்தர் உங்க கிட்ட நேரே வந்து நிற்க முடியுமா! உங்க தோற்றமே அவர்களை நடுங்கச் செய்து விடுமே..பாருங்க நான் கூட எவ்வளவு தூரத்துல நிற்கிறேனு…என்றது.உடனே சிங்கம் தன்னைப் பற்றிய பெருமிதத்தில்,உண்மையாகவே நரி பயந்து பேசுகிறது என நினைத்து,பலமாக ஒரு முறை முழங்கித் தன்னை மீண்டும் பெரியவனாக நினைத்துக் கொண்டது.

பிறகு நரியிடம் சரி,நான் சொல்வதை கேள்.எனக்கு தினமும் சாப்பாடு நீ ஏற்பாடு செய்து தர வேண்டும்.ஏனெனில் நான் சில நாட்கள் ஓய்வு எடுக்க போகிறேன்.அதனால் எனக்கு எப்போது பசிக்கிறதோ நீ எனக்கான உணவை தேடியெடுத்துக் கொண்டு என்னிடம் வர வேண்டும் என்றது.திடுக்கென தூக்கிவாரிப் போட்டது நரிக்கு.

“அட முட்டாள் சிங்கமே உன் பசியை நான் ஆற்றுவதா?என்னடா அநியாயம்? உன் வயிற்றுக்கு நான் எப்படி உணவுத் தர முடியும்” என்று யோசிக்க ஆரம்பித்தது.கர்வத்தில் சிங்கத்திற்கு மதி கலங்கிவிட்டதா என்று

எண்ணியது.உடனே சத்தமாக என்ன எந்த பதிலும் சொல்லாமல் நிற்கிறாய் என்று சிங்கம் மிரட்டியது .அலறியடித்து, 'அதுக்கென்ன சிங்க இராசா நீர் காட்டுக்கே தலைவர்.உங்களுக்கு போய் உணவு கிடைக்காமலா போய்விடும்' என்று கூறியது.'ஆகட்டும் அப்படியென்றால் உணவை உடனடியாக ஏற்பாடு செய்,மீந்ததை நீயே வழக்கம் போல சாப்பிட்டுக் கொள்' என்று சிங்கம் கட்டளையிட்டது.

'அட சோம்பேறி சிங்கமே,நான் என்னடா செய்வது.எனக்கு தான் வேட்டையாட தெரியாதே! இந்த சிங்கத்துக்கு என்னவாயிற்று' என்று சிந்தித்துக் கொண்டே சென்றது நரி.சரி இன்று முதல் நாள் வேறு,இதன் வாயை அடைக்காவிட்டால் நம்மையே இரையாக்கி விடும்.சிந்திப்போம் நமக்கா தெரியாது என்று நரி சென்றது.அங்கே கூட்டமாய் மேய்ந்துக் கொண்டிருந்த விலங்குகளையெல்லாம் கூட்டியது.இதோ பாருங்கள் சிங்க இராசா சில நாட்கள் ஓய்வு எடுக்க போகிறார்.அதனால் அவரவர் கூட்டத்திலிருந்து தினமும் ஒருவர் சிங்க இராசாவிற்கு இரையாக வர வேண்டும்.மீறினால் அவர் கோபத்தைப் பற்றி உங்களுக்கே தெரியும் சொல்லிவிட்டேன் என்றது.உடனே விலங்குகள் அனைத்தும் பேசி,வேறு வழியில்லாத நிலையில் நாளொன்றாக ஒவ்வொரு விலங்கும் உணவுக்காகச் சென்றது.இப்படியே நாட்கள் செல்ல செல்ல சிங்கம் மிகப்பெரிய சோம்பேறியாக மாறிவிட்டிருந்தது.உழைக்காமல் சோம்பேறியாக உட்கார்ந்து சாப்பிட்டதால் எடையும் கூடி இன்னும் மந்தமானது.ஒரு நாள் அந்த சிங்கக் கூட்டத்தின் ஒரு சிங்கம் வந்து,நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய் என தெரிகிறதா?ஏன் தான் இப்படி ஆனாயோ! இந்தச் சோம்பல் முதலில் எங்களிடமிருந்து உன்னைப் பிரித்தது.இப்போது உட்கார்ந்து சாப்பிட்டு எடை வேறு கூடி விட்டாய்.நாளை உனக்கே ஆபத்து வந்தால் கூட காப்பாற்றிக் கொள்ள முடியாது போலவே?என்று கேட்டது.அதற்கு கோபப்பட்ட சோம்பேறிச்

சிங்கம் ,எனக்கு என்னைப் பார்த்துக் கொள்ளத் தெரியும்.நீ உன் வேலையை பார் என்றதும் அந்த சிங்கம் சென்று விட்டது.நாட்கள் செல்ல செல்ல சிங்கத்திற்கு சோம்பேறித்தனம் கூடி தனக்கு எட்டிய தூரத்திற்கு ஓட கூட முடியாமல் கிடந்தது. நாளாக நாளாக நரிக்கும் சிங்கத்தின் மீதிருந்த பயம் குறைந்துக் கொண்டே வந்தது.இந்த சோம்பேறிச் சிங்கம் எழுந்து வந்து என்னை என்ன செய்ய போகிறது என்று திமிராகவும் பேசியது. உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டே உனக்கு இவ்வளவு திமிரா.?இன்னும் திமிர் அடங்கவில்லை உனக்கு.உன்னை என்ன செய்கிறேன் பார் என்றது.சிங்கத்திற்கு எவ்வாறு திட்டம் தீட்டியதோ,அதே போல தன் இனக் குழுவை அழைத்து,நான் சொல்வதை கேளுங்க.இந்த சிங்க இராசா அளவுக்கு அதிகமாக சாப்பிட்டு நகர முடியாம கிடக்கிறார்.நாம் அனைவரும் அந்த குகைக்குள் சென்று அவரை தாக்கிக் கொன்று விட்டால் பல நாட்களுக்கு வயிறார சாப்பிடலாம்.என்ன சொல்கிறீர்கள் என்று கேட்டது.முதலில் பயந்து போன நரிகள்,இது நடக்குற காரியமா?சிங்க இராசாவ போய் நாம கொல்றதாவது? என்றது.ஆனால் சிங்கத்தின் நிலையை அறிந்த நரி,அதையெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்.நான் சொல்லும் போது மட்டும் சேர்ந்து வந்து ஒன்றாக தாக்குங்கள்.அதனால் எழுந்து கூட ஓட முடியாது.எளிமையாகக் கொன்று விடலாம் என்றது. சரியென்று நரியின் திட்டத்திற்கு மற்ற நரிகளும் ஒப்புதல் அளித்தது.

சரியான நேரத்திற்கு காத்துக் கொண்டிருந்தது நரி.நான்கு நாட்கள் சிங்கத்தை தந்திரமாகப் பட்டினி போட்டது நரி.கோபம் கொண்ட சிங்கமோ முழங்கியது.எங்கே எனது உணவு என்று கோபப்பட்டது.உடனே நரி,நான் என்ன இராசா உங்களை பட்டினி போடவா நினைக்கிறேன்?இந்த திமிர் கொண்ட மிருகங்கள் எங்க தான்

போச்சோ தெரியல.இன்றைக்காவது மதியம் இழுத்துட்டு வர சொல்லி என் இனத்திடம் சொல்லியிருக்கேன் என்று பணிவாகக் கூறுவது போல் நடித்தது.உடனே அதை நம்பிய சிங்கம்,சரி சரி என்று பசியோடு விழித்து காத்துக்கொண்டிருந்தது.அப்போது கூட்டமாக வந்தன நரிகள்.

சிங்கமோ,ஓ சரி நான்கு நாட்கள் கழித்து நமக்கு சரியான வேட்டை தான் என்று மகிழ்ச்சியடைந்தது. கூட்டமாக வந்த நரிகள் திடீரென சிங்கம் எதிர்பார்க்காத வேளையில் அதைத் தாக்கின.மிரண்டு போன சிங்கம் செய்வதறியாமல் திமிறியது.தன்னை தயார் செய்து முழக்கத்துடன் நிமிர்ந்தது.நரிக் கூட்டம் தன்னைப் பெரிய அளவில் சூழ்ந்ததைப் பார்த்து அங்கிருந்து தப்புவது தான் புத்திசாலித்தனமென்று ஓடத் துவங்கியது.ஆனால் பெரு மூச்சு வாங்கவும்,அதனால் ஓட முடியவில்லை. மேலும் வெகு நாட்களாக வேட்டைக்குச் செல்லாததால் எதிரிகளை சமாளிக்கும் பக்குவமும் அதற்கு இல்லை.தன் முடிவை அறிந்து,தன் இயலாமையை நினைத்து தலை குனிந்தது.தன் சோம்பேறித்தனம் எவ்வளவு பெரிய ஆபத்தை விளைவித்து விட்டது என்று வருந்தியது.தன்னை யாரும் வீழ்த்த முடியாது என்ற நிலையில்,தன்னுடைய சோம்பேறித் தனத்தால் தன் உயிர் போக தானே காரணமாகிவிட்டதை எண்ணித் துடித்தது.இந்த சிந்தனைகள் ஓடி முடிவதற்குள்,நரிக் கூட்டத்தின் வேட்டைக்கு இரையானது சிங்கம்.

எவ்வளவு பெரிய பலசாலியாக இருந்தாலும்,திறமை மிக்கவராக இருந்தாலும்,சோம்பல் எங்கே கொண்டு வந்துவிடுகிறது பார்த்தீர்களா!அதனால் நமது வளர்ச்சிக்கு ஆபத்தாக இருக்கும் சோம்பலை அறவே ஒழித்திடுவோம்.சுறுசுறுப்பாய் திரியும் எறும்பு போல நாமும் நமது செயல்களைச் சிறப்பாக செய்திடுவோம்.நன்மைகள் பெற்றிடுவோம்.

***இடிபுரிந்து எள்ளுஞ்சொல் கேட்பர் மடிபுரிந்து***

***மாண்ட உஞற்றி லவர்.-*** குறள் எண் :607

சோம்பலை மேற்கொண்டு சிறந்த முயற்சி இல்லாதவர் நாட்கள் செல்லச் செல்ல,பிறர் இகழும் நிலைக்கு ஆளாவார்கள்.சோம்பல் மிகப் பெரிய எதிரி.மனிதர்கள் மட்டுமல்ல எந்த உயிரினங்களும் சோம்பல் கொண்டால் அவை தம்மைத் தாமே காப்பாற்றிக் கொள்ளக் கூட முடியாத சூழலுக்கும் இட்டுச் செல்லும். ஏளனச் சொல்லிற்கும்,இழி நிலைமைக்கும் இட்டுச் செல்லும் சோம்பலை அறவே விட்டொழிக்க வேண்டும். சோம்பல் யாவர்க்கும் எதிரி தான்.அது ஒரு தீராப் பழியையும்,வீழ்ச்சியையும் கொண்டு வந்து விடும்.எனவே சோம்பலை நீக்கிச் சுறுசுறுப்புடன் இருக்கப் பழகுவோம்.



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.




# குறள் விருந்து




தி.பி.2054 ஐப்பசி-7 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2023-அக்குத்தோபர்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









## திருக்குறள்

சாதிமதங்கள் சொல்லா நூல் – எந்த
சாத்திரச் சிக்கலும் இல்லா நூல்!

நாட்டின் பெயரை நவிலா நூல் - அந்த
வீட்டின் மொழியை விளம்பா நூல்!

இனத்தைப் பற்றி எழுதா நூல் - மனித
குணத்தைப் பற்றியே கூறும் நூல்!

காலம் தோறும் நிற்கும் நூல் - என்றும்
ஞாலம் வாழ வாழும் நூல்!

திருக்குறள் என்னும் தீந்தமிழ் நூல்! - இந்தத்
தரையில் சிறந்த தீர்ப்பு நூல்!

--பாவேந்தர் விருதுப் பாவலர் கண்மதியன்

சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்
பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்
ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

# இன்ப உலகைப் படைப்போம்



இனி வரும் காலத்தில் சண்டை செய்யாத

இன்ப உலகைப் படைப்போம் நாமே.

சண்டைக்குக் காரணம் மதங்கள் என்றார்-அந்த

மதங்கள் அனைத்தையும் மறப்போம் நாம்

மனிதம் ஒன்றே உலகில் இனிமேல்

வாழ்வின் வழிமுறை என்றிடுவோம்-குழப்பம்

அனைத்தையும் வென்றிடுவோம்

கருப்பும் வெளுப்பும் சிவப்பும் மஞ்சளும்

தோலுக்கு வெளியே அமைந்தாலும்

இரத்தம் ஒரே நிறம் உணர்ந்திடுவோம்



யுத்தம் எனும்சொல்லை மறந்திடுவோம்

பாலையைச் சோலையாய் மாற்றிடுவோம்

பட்டினிக் கொடுந்துயர் போக்கிடுவோம்

உணவுக்கும் உடைக்கும் உறையுளுக்கும்

இனி ஒரு மனிதன் ஏங்காமல்

தனியே துயரத்தில் வருந்தாமல்

அனைவர்க்கும் அனைத்தும் வாய்த்திடவே

உழைத்தல் கடமை எனக் கொள்வோம்

ஒன்றுபட்டுழைப்போம் வாருங்கள்

ஓரணியில் ஒன்று சேருங்கள்!

சிறுவர் இலக்கியம்: குறள் விளக்க நாடகம்



# மழையும் ஒழுக்கமும்

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் “ மலேசியாவின் அழ.வள்ளியப்பா “ “என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. “மலேசியக் கவிதைக்களஞ்சியம் “என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**



காட்சி 1

இடம் : இல்லம்
நடிப்போர் : பூவரசு , சுடர்மதி
காலம் : இரவு

நிலை : அன்று முழுதும் ஓயாத மழை. காற்றும் மிகக் கடுமையாக வீசியது.

இடியும் மின்னலும் அச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. தெரு விளக்குகளோடு வீட்டு விளக்குகளும் அணைந்து இருள் சூழ்ந்திருந்தது.
சில மெழுகுவர்த்திகள் மட்டும் எரிந்து கொண்டிருந்தன.

பூவரசு : அம்மா , அம்மா, இங்கே வாங்க.

சுடர்மதி : என்ன பூவரசு. உனக்கு என்ன வேண்டும்.

பூவரசு : எனக்கு வெளிச்சம் வேண்டும்.

சுடர்மதி : அதுதான் மெழுகுவர்த்தி எரிந்து கொண்டிருக்கிறதே.

பூவரசு : இந்த வெளிச்சத்திலே எப்படிப் படிக்க முடியும் ? நாளைக்குப் பள்ளியிலே முக்கியமான தேர்வு நடக்க இருக்கிறது.

சுடர்மதி : வீட்டில் மூன்று மெழுகுவர்த்திகளே இருந்தன. நீ படிக்க ஒன்று ; முற்றத்திலே ஒன்று; வரவேற்பு அறையிலே ஒன்று. வேண்டுமானால் முற்றத்திலே உள்ள மெழுகுவர்த்தியையும் கொண்டு வந்து வைக்கிறேன்.

பூவரசு : எனக்கு 20 மெழுகுவர்த்திகள் வைத்தாலும் போதா. அப்பா எங்கே?

சுடர்மதி : அப்பா பக்கத்து வீட்டுக்காரரிடம் மெழுகுவர்த்திகள் இரவல் வாங்கப் போயிருக்கிறார்.

பூவரசு : என்ன ?மெழுகுவர்த்தி வாங்கப் போயிருக்கிறாரா? எனக்கு மின்சார விளக்குத்தான் வேண்டும்.

சுடர்மதி : மழை இடி மின்னல் கடுமையானதால் மின் தொடர்பு அறுந்து விட்டது. மின்சார விளக்குகள் எரிய இன்னும் நீண்ட நேரம் ஆகும்.

பூவரசு : பாழாய்ப் போன மழையால் நமக்கு எத்துணைத் தொல்லை!

சுடர்மதி : மழை நாள்தோறுமா இப்படிப் பெய்கிறது ? கடுமையாகப் பெய்வது சில நாள்களில்தானே?

.....ம்..... அதோ! அப்பா வருகிறார்.

(காட்சி முடிவு)



காட்சி 2

இடம் : இல்லம்

நடிப்போர் : பூவரசு , சுப்பையா, சுடர்மதி

நேரம் : இரவு

நிலை : சுப்பையா இரவல் வாங்கி வந்த மெழுவர்த்திகள் ஏற்றப்படல். பூவரசு மழையைத் திட்டுதல். தந்தை சுப்பையா மழையின் சிறப்புகளை விளக்குதல்.

சுப்பையா : சுடர்மதி ,இந்த மெழுகுவர்த்திகளில் நாலைந்தை ஏற்றிவை. பூவரசு படிக்க வேண்டும்.

சுடர்மதி : அவனுக்கு 20 மெழுகுவர்த்திகள் ஏற்றிவைத்தாலும் போதாவாம். மின்சார விளக்குகள் வேண்டுமாம்.

சுப்பையா : என்ன பூவரசு , ஏன் பிடிவாதம் செய்கிறாய்? நாங்களெல்லாம் அகல் விளக்கு வெளிச்சத்தில் படித்தவர்கள் தெரியுமா?

பூவரசு : நீங்கள் படித்த மாதிரியேதான் நாங்களும் படிக்க வேண்டுமா ?

சுப்பையா : மழைக்காலத்தில் இப்படியெல்லாம் நடப்பது இயல்பு. இடி மின்னல் நின்றவுடன் விளக்குகள் எரியத் தொடங்கும்.

பூவரசு : அப்படியென்றால் இடி மின்னலை நிறுத்துங்கள்.

சுப்பையா : இடி மின்னலை எப்படி நிறுத்த முடியும் ? இடி மின்னல் மழை எல்லாம் இயல்பாய் ஏற்படும்; தாமே நின்றுவிடும்.

பூவரசு : பொல்லாத இடி ;பொல்லாத மின்னல்;பொல்லாத மழை.......

சுப்பையா : பூவரசு , மழையின் சிறப்புப்பற்றி நீ இன்னும் உணராமல் இருக்கிறாய். மழை பெய்யாமல் நின்று போனால் பயிர் பச்சை விளைய முடியாது. பசிக்கு உணவுதரும் தாவரம் எதுவுமே விளையாமல் போகும். அதனால் உயிரினும் மேலான ஒழுக்கமும் கெட்டழியும்.

பூவரசு : மழை பெய்யாவிட்டால் செடி கொடி ஏதும் விளையாமல் போகலாம். ஒழுக்கம் எப்படிக் கெடும்?

சுடர்மதி : பூவரசுக்குத் திருக்குறளில் உள்ள வான் சிறப்புப்பற்றிக் கூறுங்கள்.

சுப்பையா : கூறுவேன். மழைபெய்யாவிட்டால் தானியம் ஏதும் விளைய முடியாது அல்லவா?

பூவரசு : ஆமாம்.

சுப்பையா : உண்பதற்கு உணவு இல்லா விட்டால் என்ன ஆகும் ?

பூவரசு : நம்மைப் பசிவாட்டும்.

சுப்பைய : "பசிவந்தால் பத்தும் பறந்து போம்" என்பார்கள். அவை மானம், குடிப்பெருமை, கல்வியால் பெற்ற அறிவுத்திறன், மற்றவர்க்கு உதவ வேண்டுமென்னும் நல்லெண்ணம் என்பன போன்ற எதுவுமே இல்லாமல் போகும் வயிற்றுக்கு எப்படியாவது உணவு தேடவேண்டுமென்று திருடச் சொல்லும், மானத்தைப்போக்கும் கீழ்த்தரமான செயல்களில் ஈடுபடச் செய்யும் அதனால் ஒழுக்கம் கெட்டுப் போகும்.

சுடர்மதி : ஒரு திருக்குறளை எடுத்துக் காட்டி விளக்குங்களேன்.

சுப்பையா : விளக்குவேன் , பூவரசு, நீ திருக்குறள் படித்திருக்கிறாய் தானே?

பூவரசு : படித்திருக்கிறேன். பள்ளியிலே சொல்லிக் கொடுத்திருக்கிறார்கள்.

சுப்பையா : எங்கே , ஒரு திருக்குறளைக் கூறு.

பூவரசு : "நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு" (20)

சுடர்மதி : அருமையான குறள். பூவரசு குரலில் இந்தக் குறளை கேட்கும் பொழுது காதில் தேன் பாய்கிறது.

சுப்பையா : எனக்கு என்ன வியப்பு என்றால் நான் எந்தக் குறளை எடுத்துக் காட்ட நினைத்தேனோ, அந்தக் குறளையே பூவரசுசொன்னது ஆச்சரியம்தான்.

பூவரசு : எனக்கு இந்தக் குறள் தெரியும் ஆனால் இதன் பொருள் முழுமையாய்த் தெரியாது.

சுப்பையா : திருக்குறள் தெரிகிறதே , அதுபோதும். இரண்டுமூன்று முறை ஆழ்ந்து படித்தாலோ கேட்டாலோ பொருளைப் புரிந்து கொள்ளலாம்.
பூவரசு : இந்தக் குறளின் பொருளை விளக்குங்கள் அப்பா.

சுப்பையா : திருக்குறளின் வான் சிறப்பு என்ற அதிகாரத்தில் உள்ள 10 குறள் பாக்களும் சிறப்பானவையே. மனித வாழ்வுக்கு நீர் எவ்வளவு முக்கியமானது; நீர்தரும் மழை எத்துணை முதன்மையானது என்பதை அழகாக விளக்குகிறார் திருவள்ளுவர்.

பூவரசு : எனக்கு இந்த அதிகாரத்தில் மூன்று குறள்பாக்கள் மட்டுமே தெரியும் ?

சுப்பையா : இன்று நீர் பற்றியும் அதைத்தரும் மழைபற்றியும் சில செய்திகளைச் சொல்வேன்.

சில நேரங்களில் கடுமையாகப் பெய்து நமக்குத் துன்பம் தரும் மழைதான், நம் வாழ்வுக்கே உயிர் நாடியாக விளங்குகிறது.

பூவரசு : “கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற்றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை”
என்பதுதானே இதற்குரிய குறள்?

சுடர்மதி : பூவரசு , நீ சரியாகக் கண்டு பிடித்துச் சொல்லி விட்டாய். பாராட்டுகள்!

சுப்பையா : அருமை ,அருமை, இப்பொழுது குறளின் பொருளைப் பார்ப்போம்.

“நீர்இன்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான்இன்று அமையாது ஒழுக்கு”

என்ற குறளின் பொருளைச் சற்று ஆழமாகப் பார்ப்போம்.
பூவரசு : முதலில் ஒழுக்கு என்பதன் பொருளைக் கூறுங்கள் அப்பா.
சுப்பையா : ஒழுக்கு என்பதற்குச் சொட்டுச் சொட்டாக ஒழுகுதல் என்பது ஒரு பொருள்.
ஒழுங்கு அதாவது நன்னடத்தை என்பது மற்றொரு பொருள். இங்கு நன்னடத்தை என்று பொருள் கொள்ள வேண்டும்.
பூவரசு : அமையும் என்பதன் பொருள் ?

சுப்பையா : அமையாது என்றால் முடியாது என்று பொருள். அமையும் என்றால் உண்டாகும், பொருந்தும் என்று பொருள்.
பூவரசு : வான் என்பதன் பொருளைக் கூறுங்கள் அப்பா.
சுப்பையா : வான் என்பதற்கு விண்ணென்று ஒருபொருள் உள்ளது. இங்கே மழை என்று பொருள். வான்இன்று என்றால் மழை பெய்யாவிட்டால் என்று பொருள் கொள்ள வேண்டும்.
பூவரசு : குறளின் முழுமையான பொருளை எனக்கு விளங்குமாறு கூறுங்கள் அப்பா.
சுப்பையா : தண்ணீர் இல்லாமல் போனால் உலகத்தில் உயிர்கள் வாழ முடியாது. அதுபோல உலக மக்களுக்கு மழைவளம் இல்லாவிட்டால் உயிர்போன்ற ஒழுக்கமும் நிலைபெற முடியாமல் போய்விடும் என்பது இந்தக் குறளின் பொருள்.
சுடர்மதி : எனக்குக்கூட இந்தக் குறளின் முழுப் பொருளும் இன்றுதான் தெளிவாகப் புரிந்தது.
பூவரசு : தண்ணீரின் இன்றியமையாமையை நான் இன்றுதான் உணர்ந்தேன். உலக மக்களின் உயிர்காக்கும் தண்ணீரை இனிமேல் நான் வீணாக்க மாட்டேன்; சிக்கனமாகப் பயன்படுத்துவேன்.
சுடர்மதி : பூவரசுக்கு நீரின் முக்கியம் பற்றிப் பலமுறை கூறியிருக்கிறேன். இன்றாவது நீரின் முதன்மை பற்றி உணர்ந்து கொண்டது எனக்கு மகிழ்சியளிக்கிறது.
(அப்போது மின் விளக்குகள் எரியத் தொடங்குதல்)
பூவரசு : (துள்ளிக் குதித்து) வெளிச்சம் வந்து விட்டது! வெளிச்சம் வந்து விட்டது!
சுடர்மதி : இடியும் மின்னலும் இல்லாமல் போயின. மழையும் நின்று விட்டது.
பூவரசு : வீட்டில் வெளிச்சம் பரவியதுபோல் மழையைப் பற்றி எனக்கு இருந்த அறியாமை இருளும் நீங்கியது.
சுப்பையா : திருக்குறளின் இரண்டாம் அதிகாரமான வான் சிறப்பின் பொருளை நீங்கள் தெளிவாகப் புரிந்து கொள்ளவும் இந்த மழை உதவியது. வாழ்க மழை! (எல்லாரும் கைதட்டி மகிழ்தல்)
**நாடகம் நிறைவு.**

## வாசகர் குரல்

24/9/23 இதழ் பற்றி……

அருமை...மகிழ்ச்சி ஐயா

குழந்தைகளும் பெரியோரும் அறியத்தக்க வகையில் காட்சிப்படுத்திய தரவுகள்.

படிப்பதற்கு ஆர்வமூட்டும் படைப்பு

அன்புடன், வதிலை பிரதாபன்,தலைவர்,மராத்திய மாநிலத் தமிழ் எழுத்தாளர் பேரவை,மும்பை.



# ஒன்றுபட்டால் உயர்வு பெறலாம்

--திருமதி.தாமரை சீனிவாசராவ்

.

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.

சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.

கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

ஓர் அழகான இயற்கைச் சூழல் நிறைந்த கிராமத்தில் மக்கள் வாழ்ந்து வந்தனர்.அதில் பல்வேறு சமுதாய மக்களும் இருந்தனர்.அவர்களுக்குள் சில கருத்து வேற்றுமைகள் இருந்தாலும்,கல்வி உரிமை அனைவருக்கும் சமமாக இருக்க வேண்டுமென்று உறுதியாக இருந்தனர்.அதனால் தான் தங்களின் கிராமம் வளர்ச்சியுறும் என்பதில் தெளிவாக இருந்தனர்.மாணவர்கள் கல்வி பயில்வது,ஒன்றாகப் படிப்பது என அன்பு செலுத்தி ஒருவருக்கொருவர் உதவி புரியுமாறும் மாணவர்களை புரிதலுடன் வைத்திருந்தனர்.அதில் சில மாணவர்களும் தங்களுக்குள்ளேயே வகுப்புகள் எடுத்தும், மிகவும் வறுமையான நிலையில் இருப்பவர்களுக்கு கல்வி பயிற்றுவித்தும்,அடிப்படை தேவைகள் சிலவற்றை செய்தும் ஒற்றுமையாக வாழ்ந்து வந்தனர்.

இப்படியாக ஒற்றுமையாக இருந்த ஊரில் அந்த ஊரின் தலைவராக இருந்தவரின் உறவினர் சிலர் அந்த ஊருக்கு வந்தனர்..அவர்களில் ஒருவர் வழக்கமாக நடைபெறும் முறைமைகளைக் கண்டு சில எதிர்ப்புகளைத் தெரிவிக்க ஆரம்பித்தார்.இப்படியாக மனிதர்கள் சாதி,பேதமின்றி செயல்படுவது கண்டு மனம் கொந்தளித்தார்.இதென்ன இப்படி எல்லோரும் ஒன்றாகப் புழங்குகிறீர்கள்.நமக்கென்று வரைமுறைகள் கிடையாதா?சாதியக் கட்டுப்பாடும்,ஒழுக்கமும் இருக்கிறதே.அதை மீறுகிறீர்களே.!.இது எவ்வளவு பெரிய தவறு தெரியுமா என்று புலம்பித் தீர்த்தார்.காலங்கள் மாறினாலும் சிலர் பழமையை விடுவதாக இல்லை.அவர்களுடைய ஆதிகப் போக்கு சற்றும் குறைந்தபாடில்லை.மனிதருக்குள் வேற்றுமை பாராட்டுவது அவர்களுக்குள்ளேயே

ஊறி விடுகிறது.அப்படிப்பட்ட மனிதர்களை நாம் இன்றும் காண்கிறோம்.அப்படிப்பட்ட மனிதனாக இருந்த அவர் இந்த ஊரை இப்படியே மேலும் வளர விட்டால் சரி வராது என்று எண்ணி சில சிக்கல்களைத் தொடங்க ஆரம்பித்தார்.அவரைப் போன்ற எண்ணம் உள்ளவர்களிடம் சாதி வெறியை ஊக்கப்படுத்தினார்.உயர்வாக பேசுவது போல நஞ்சை ஊட்டினார்.நிலத்தில் பயிரிடும் வேலையில் தனக்கான சூழ்நிலையாக மாற்றி இரு குழுவினரிடம் கலகங்கள் செய்ய ஆரம்பித்தார். இதைப் புரிந்துக் கொள்ளாத சில பேர் அவர் உண்மையாகவே அக்கறையுடன் பேசுவதாகக் கருதிச் சூழ்ச்சி வலையில் மாட்டிக் கொண்டனர். ஒற்றுமையாக இருந்தவர்களிடம் விரிசல் விழ ஆரம்பித்தது.பூசல் முற்றி ஒருவரையொருவர் தாக்கிக் கொள்ளவும் ஆரம்பித்தனர்.



ஒற்றுமையாக இருந்த ஊரார்களுக்குள் சாதி வெறி தலைக்கேறியது.சிறு சிக்கல்களும் பெரும் பூசலானது.இதை இப்படியே வளர விட்டால் பெரும் சேதம் விளையும் என்று எண்ணிய சிலர் அனைவரையும் கூட்டமாக கூட்டிப் பேச்சு வார்த்தை நடத்தினர்.இதற்கு அந்த ஊர்த் தலைவரின் மகனே பெரும் முயற்சியெடுத்து சரி செய்ய முயன்றார். கூட்ட நிறைவில் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட அனைவரும் கலைந்து சென்றனர்.நமக்குள் பேதம் இருக்க கூடாது.நம்மைப் போல பிறரையும் எண்ணுதல் சிறந்தது என்று உணரச் செய்ய வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த வேளையில்,...

ஒரு நாள் அந்த ஊருக்கு ஒரு வழிபோக்கர் வந்தார்.பார்ப்பதற்கு நல்ல நிலைமையில் இருக்கும் அவர் ஒரு ஞானியைப் போல அனைத்தும் கடந்த நிலைமையில் அமைதியாகக் காணப்பட்டார்.அப்போது அந்த ஞானி,புதிதாக தான் இந்த ஊரைக் கடந்து செல்ல நேரிட்டது என்று குறிப்பிட்டு இந்த ஊரில் சில நாட்கள் தங்க முடியுமா என்று கேட்டார்.தான் ஆங்காங்கே தனக்குப் பிடித்த ஊர்களில் தங்கிவிட்டுச் செல்வது வழக்கமென்றும் சில நாட்கள் கழித்து,அடுத்த இடத்திற்குப் போய் விடுவேன் என்று கூறினார்.அவரைப் பார்த்ததும் ஏதும் மறுக்க முடியாத மரியாதையுடன் அவர் காணப்பட,அங்கிருந்த சிலரும் ''இவ்வளவு பெரிய கிராமத்தில் உங்களுக்குத் தங்க இடம் இல்லாமலா போய்விடும்? தங்கிக் கொள்ளுங்கள்'' என்று கூறினர்.

''உங்கள் அனைவருக்கும் பரந்த மனது பாராட்டத்தக்கது. இந்த காலத்தில் யார் புதிதாக வந்தவர்களுக்கு இடம் அளிப்பார்கள்?உங்கள் அனைவரையும் பாராட்டியே ஆக வேண்டும்'' என்று சொன்னார் அந்த ஞானி.

''நல்லது ஐயா,கோயில் திறந்திருக்கும் வேளையில் நீங்கள் அங்கு இருக்கலாம்.இரவில் சமுதாயக் கூடத்தில் படுத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினர் சிலர்.ஊர்த் தலைவர் வந்து,''ஐயா உங்களுக்கு உணவு வேண்டுமானால் தருகிறேன்,தங்கிக் கொள்ளுங்கள்'' என்றார்.'எவ்வளவு பெரிய மனது உங்களுக்கு' என்ற அந்த ஞானியானவர் பாராட்ட, 'இதிலென்ன இருக்கிறது.நம்மைத் தேடி வந்தவர்களுக்கு உதவி செய்வது நமது கடமை தானே' என்றார்.அப்படியே தினமும் அந்த ஞானி ஊர்க்காரர்களிடம் பழக ஆரம்பித்தார்.அப்போது ஓய்வு நேரங்களிலும்,மாலை வேளையிலும் பேசுவதற்கென்று அவருடன் ஊர் மக்கள் கூடத் தொடங்கினர்.அப்போது,வாழ்க்கை தத்துவம்,அறிஞர்கள் வரலாறு மனிதர்களுக்கிடையே, பேதமில்லாமல் எப்படி வாழ்வது, அன்பை மட்டும் பகிர்ந்து வாழ்ந்தால் எவ்வளவு இன்பமாக வாழ முடியும் என்றெல்லாம் கூறிக் கொண்டிருப்பார்.குழந்தைகளுக்குத் திருக்குறள், ஆத்திசூடி,கொன்றைவேந்தன் முதலிய நீதிநூல்கள் கற்றுத் தந்தார்.அந்த ஊரே ஏதோ மாற்றமடைந்தது போல அனைவரும் உணர்ந்தனர்.அவரின் வாழ்க்கை வரலாற்றைத் தெரிந்துக் கொண்டவர்கள்,மிகவும் நெகிழ்ந்து போனார்கள்.தன்னலமில்லாத அவருடைய வாழ்வு,ஈகைக் குணம் கண்டு பெருமிதம் கொண்டார்கள்.பெரிய செல்வந்தராக இருந்தும் அவர் செய்த தான,தருமங்கள் அதைவிடப் பெரியதாக

இருப்பதைக் கண்டு வியந்தனர். பகைமைக் குணம் கொண்டவர்கள் கூட சற்று சிந்திக்க ஆரம்பித்தனர்.சக மனிதர்களுக்குள் என்ன இருக்கிறது.?நாம் விட்டுக் கொடுத்துச் செல்வதாலும்,பரந்த மனப்பான்மையுடன் நடப்பதாலும்,பிறரையும் தன்னைப் போல் எண்ணுவதாலும் எவ்வளவு நன்மைகள் என்று நினைத்தனர்.அந்த ஞானி கூறியது போலவே ஊரை முன்னேற்றிச் செல்ல என்னென்ன கடமைகளை ஆற்றலாம் என்று திட்டங்களை முன்னெடுத்தனர்.உழவுத் தொழில் தவிர்த்து,சிறு குடிசைத் தொழில்கள்,மகளிர் நலம் பேணும் திட்டங்கள்,சுகாதார முன்னெடுப்புகள் என பல செயல்பாடுகளை நடத்திக் காட்டினர்.அவ்வாறே அந்த கிராமம் செயல்பட்டுப் பொருளாதார நிலையிலும்,கல்வியிலும் முன்னேறிய கிராமமாக வளர்ச்சியடைந்து அரசின் பார்வைக்கு வந்தது,ஒரு மாதிரிக் கிராமமாக உருவானது.

மாவட்ட ஆட்சியர் அந்த ஊருக்கு வந்து இவ்வளவு பெரிய முன்னேற்றத்திற்கு வித்திட்ட அந்த ஊர் மக்களையும்,இளைஞர்களையும்,முன்னிறுத்திப் பாராட்டி பேசினார்.அப்போது அந்த ஞானியரும் தங்கள் வாழ்க்கை மாறுவதற்கு எவ்வளவு முக்கியப் பங்காற்றினார் என்று அவருக்கும் மரியாதை செலுத்தினர்.மக்கள் மகிழ்ச்சியுடன் தங்கள் பணிகளைத் தொடர்ந்தனர்.என்றும் பிறர் நலன் பேணி நடத்தல் பெருமை.தன்னுயிர் போல் பிற உயிரையும் பேணுவோம்.



ஆனாலும் இன்றளவும் மனிதர்களுக்குள் மத,இன மோதல்கள் குறையா வண்ணம் தான் இருக்கிறது.விட்டுக் கொடுத்து வாழ வேண்டிய மனித இனமே,ஆறரறிவு கொண்டோர் என பெருமைக் கொண்டாலும்,செய்யும் செயல்களில் எல்லாம் தலை குனியும் செயல்களை மனித இனம் செய்கிறது.

உக்ரைன்-இரசியப் போரிலும்,இசுரேல்- பாலஸ்தீனப் போரிலும் எண்ணற்ற உயிர்கள் மடிவதைக் காண்கிறோம்.சக மனிதர்களாக,உலகம் முழுதும் அத்தகைய நாட்டை வேடிக்கை மட்டுமே பார்த்துக் கொண்டிருக்கிறோம்.மாறாக உலக பொதுநோக்கு நிறுவனங்களாக இருக்கும் ஐக்கிய நாடுகள் அவையும் வேடிக்கை பார்ப்பதைத் தவிர வேறெதுவும் செய்வதில்லை.இவ்வாறான போக்கு மிகவும் வேதனை அளிப்பதாக உள்ளது.வாழும் சில நாட்களில் பிறர் வாழ்த்தும்படி,பிறருக்கு பயன்படும்படி உதவி புரிந்து வாழ்தல் எவ்வளவு இனிமையானது.மனிதருக்குள் பேதம் வேண்டாம்.பிறருக்கு தீங்குச் செய்யவும் எண்ண வேண்டாம்.வள்ளலார் போன்ற உத்தமர் காட்டிய வழியில் பெருநெறி பிடித்தொழுகி, “யாதும் ஊரே யாவரும் கேளிர்” என்று உலகெங்கும் ஓங்கி ஒலிக்கச் செய்வோம்.ஒற்றுமையாக வாழ்வோம்.அனைவருக்கும் நல்லது மட்டுமே செய்வோம்.

ஒருவன் தன்னைத் தானே விரும்புவதாக இருந்தால், மற்றவருக்கும் தீங்கு எண்ணக் கூடாது.அவன் தவறான வழியில் செல்லாமல் இருக்க வேண்டும்.அவ்வாறு இருப்பவர்கள் களங்கமற்றவர்கள் என்று எண்ணப்படுவர்.தன்னுயிர் போலப் பிற உயிர்களையும் விரும்புவதாக இருந்தால்,பிறருக்குக் கேடு செய்ய அஞ்சுவர்.அறத்தின் வழியில் நடப்பவர்கள் எத்தகைய இடர்ப்பாடுகளில் சிக்கினாலும், துன்பத்தை அடைந்தாலும் தம்முடைய வழியில் இடர்ப்பாடு இருந்தாலும் நேர் வழியில் சென்றுக் கொண்டிருப்பார்கள்.

தன்னைத்தான் காதல் னாயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால்.-- குறள் எண் : 209 (தீவினையச்சம்)

மாணவர்கள் படைப்புகள் மகிழ்வுடன் வரவேற்கப்படுகின்றன.
குறள் விளக்க்க் கதைகள்,நாடகங்கள்,கட்டுரைகள்,கவிதைகள் ஆகியவற்றை anjal@kuralvirtual.com எனும் மின்ன்ஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள்

குவலயமெங்கும் குறள்நெறி பரப்பும் நான்கு இணைய இதழ்கள்













ஆண்டுக் கட்டணம் வேண்டாம்!

நன்கொடை வேண்டாம்!

படியுங்கள்!பகிர்ந்திடுங்கள்!

anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சலுக்கு உங்கள் மின்னஞ்சல் முகவரி அல்லது புலன எண் தெரிவித்தால் போதும்!

கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.



# குறள் விருந்து



திபி.2054 கார்த்திகை-8 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.ஆ.2023-நவம்பர்-24

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்









## திருக்குறள்

சாதிமதங்கள் சொல்லா நூல் – எந்த
சாத்திரச் சிக்கலும் இல்லா நூல்!

நாட்டின் பெயரை நவிலா நூல் - அந்த
வீட்டின் மொழியை விளம்பா நூல்!

இனத்தைப் பற்றி எழுதா நூல் - மனித
குணத்தைப் பற்றியே கூறும் நூல்!

காலம் தோறும் நிற்கும் நூல் - என்றும்
ஞாலம் வாழ வாழும் நூல்!

திருக்குறள் என்னும் தீந்தமிழ் நூல்! - இந்தத்
தரையில் சிறந்த தீர்ப்பு நூல்!

--பாவேந்தர் விருதுப் பாவலர் கண்மதியன்


சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

# இன்ப உலகைப் படைப்போம்

இனி வரும் காலத்தில் சண்டை செய்யாத

இன்ப உலகைப் படைப்போம் நாமே.



சண்டைக்குக் காரணம் மதங்கள் என்றார்-அந்த

மதங்கள் அனைத்தையும் மறப்போம் நாம்

மனிதம் ஒன்றே உலகில் இனிமேல்

வாழ்வின் வழிமுறை என்றிடுவோம்-குழப்பம்

அனைத்தையும் வென்றிடுவோம்

கருப்பும் வெளுப்பும் சிவப்பும் மஞ்சளும்

தோலுக்கு வெளியே அமைந்தாலும்

இரத்தம் ஒரே நிறம் உணர்ந்திடுவோம்

யுத்தம் எனும்சொல்லை மறந்திடுவோம்



பாலையைச் சோலையாய் மாற்றிடுவோம்

பட்டினிக் கொடுந்துயர் போக்கிடுவோம்

உணவுக்கும் உடைக்கும் உறையுளுக்கும்

இனி ஒரு மனிதன் ஏங்காமல்

தனியே துயரத்தில் வருந்தாமல்

அனைவர்க்கும் அனைத்தும் வாய்த்திடவே

உழைத்தல் கடமை எனக் கொள்வோம்

ஒன்றுபட்டுழைப்போம் வாருங்கள்

ஓரணியில் ஒன்று சேருங்கள்!



# பொறாமை அகன்றது

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் " மலேசியாவின் அழ.வள்ளியப்பா " "என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் "என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

**காட்சி : 1**

**இடம் : வீட்டை ஒட்டிய சிறு தோட்டம்**
**நேரம் : காலை**
**கதை மாந்தர் : முத்தழகன், அவன் தந்தை அறவாணர்**

**நிலை : அறவாணர் தோட்டத்தில் காய்கறிச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருக்கிறார். முத்தழகன் வெளியூர் செல்லத் தந்தையிடம் விடைபெறல்.**

**முத்தழகன் : அப்பா, நான் புறப்படுகிறேன். காலையிலேயே புரப்பட்டால்தான் மாலைக்குள் போய்ச்சேர முடியும்.**

**அறவாணன் : நேற்றுக்கூட எனக்கு நினைவுபடுத்தினாய். பிறந்த இடத்திற்குச் சொற்பொழி வாற்றச் செல்கிறாய். நீ திருக்குறளில் எது குறித்துப் பேசப் போகிறாய்?**

முத்தழகன் : 17ஆம் அதிகாரமான அழுக்காறாமை பற்றிப் பேசப் போகிறேன் அப்பா.

அறவாணன் : பொருத்தமான தலைப்பு. நம்மேல் பொறாமை கொண்டு நம்மைப் பற்றி இழிவாகப் பேசிக் கொண்டிருக்கும் பொன்னம்பலம் அங்குதான் இருக்கிறார். அவர் மகன் புகழேந்தி என்ன செய்து கொண்டிருக்கிறான் என்று தெரியவில்லை.

முத்தழகன் : அவர்கள் வீட்டிற்கும் சென்று வருவேன் அப்பா. நமக்கு அவர்கள் மேல் அன்புண்டு அல்லவா?

அறவாணன் : நீ இப்படிச் செய்வாய் என்று எனக்குத் தெரியும். அவர்கள் நம்மேல் பொறாமை கொண்டுள்ளார்கள் என்பதையும் மறவாதே.

முத்தழகன் : தெரியும் அப்பா. அவர்களுக்கு ஏற்ற அறவழி கூறவும் தவறமாட்டேன்.

அறவாணன் : எதிலும் கவனமாய்இரு. நல்லது சொல்லப்போய் ஏதாவது ஆகிவிடப் போகிறது.

முத்தழகன் : நாம் திருக்குறள் நெறிப்படி வாழ்பவர்கள். நம்மை உயர்த்திய அந்த நெறிகளைப் பரப்புவது நல்ல அறச்செயல் அல்லவா?

அறவாணன் : உன் சொல்லும் செயலும் எனக்குப் பெருமையளிக்கின்றன. முத்தழகா, உன்னை நினைத்து நான்பெருமைப்படுகிறேன்.

முத்தழகன் : நல்லது அப்பா. நான் சென்று வருகிறேன்.

அறவாணன் : அளவான வேகத்தில் கவனம் சிதையாமல் கார் ஓட்டிச் செல்.

முத்தழகன் : உங்களுக்குத் தான் தெரியுமே. நான் மிக மிகக் கவனமாகக் கார் ஓட்டக் கூடியவன்.

அறவாணன் : நல்லது. புறப்படு. வெற்றியோடு திரும்பிவா.

காட்சி முடிவு:

காட்சி : 2

இடம் : தமிழ் வளர்ச்சி மன்ற இல்லம்
நேரம் : காலை
கதை மாந்தர் : முத்தழகன், அறச்செல்வி

நிலை : முத்தழகன் முதல்நாள், நிகழ்த்திய உரை பற்றிய கலந்துரையாடல்.

அறச்செல்வி : வாருங்கள் முத்தழகன். நேற்று இரவு நன்கு உறங்கினீர்களா? தமிழ் வளர்ச்சி மன்றத் தோழர்கள் உங்களை நன்கு கவனத்துக் கொண்டார்களா?

முத்தழகன் : இரவு நன்கு உறங்கினேன். மன்ற அன்பர்கள் எல்லா வகையிலும் சிறப்பாகக் கவனித்துக் கொண்டார்கள். சற்று முன்புதான் பசியாறினேன். (காலை உணவு) உடலுக்குப் பொருந்தும் நல்ல உணவு தந்தார்கள்.

அறச்செல்வி : இந்த மன்றத்திற்குத் தலைமையேற்ற மூன்று ஆண்டுகளுக்குள் பல மாறுதல்களைச் செய்திருக்கிறேன். அடிக்கடி தங்களைப் போன்றவர்களை அழைத்துப் பேசவைப்பேன்.

முத்தழகன் : நாங்கள் இங்கு வாழ்ந்தபோது இப்படி ஒரு மன்றம் இல்லை. இப்பொழுது இருப்பது போன்ற வளர்ச்சி அப்போது இல்லை. ஒரு சிறிய தமிழ்ப்பள்ளி மட்டும் இங்கு இருந்தது. என் அப்பா அத்

தமிழ்ப்பள்ளியில்தான் தொடக்கத்தில் படித்தாராம். பின்னர் சொந்த முயற்சியால் படித்து முன்னேறினாராம் திருக்குறளில் என் அப்பா வல்லவர்.

அறச்செல்வி : உங்கள் அப்பா உங்களை நன்கு பண்படுத்தியிருக்கிறார். நீங்கள் மன்றத்தில் ஆற்றிய உரை மிகச் சிறந்த உரை 'அழுக்காறாமை' என்ற அதிகாரத்தின் முதல் குறளை நீங்கள் விளக்கியபாங்கு மிகச் சிறப்பாக அமைந்தது. அதிகாரத்தில் சொல்லப் பெற்றுள்ள முழுப் பொருளும் விளங்கிவிட்டது போன்று இருந்தது.

முத்தழகன் : "ஒழுக்குஆறாக் கொள்க ஒருவந்தன் நெஞ்சத்து
அழுக்காறு இலாத இயல்வு" (161) என்ற அந்தக் குறள்,
அந்த அதிகாரத்திற்கே மணிமுடி போன்றது.

அறச்செல்வி : ஆமாம். அழுக்காறு - ஒழுக்காறு. இந்த இரண்டு தொடர்களும் மனத்தில் அப்படியே பதிந்திந்து விடும் ஓசை நயம் கொண்டவை. அழுக்காறு என்பது தீயவழி; ஒழுக்க ஆறு என்பது நல்லவழி.

முத்தழகன் : ஆம்! ஒருவன் தன் உள்ளத்தில் ஒழுக்கம் உடையவனாக வாழும்வழி எது?

அறச்செல்வி : மனத்தில் பொறாமை இல்லாதவனாக வாழ்தல்.

முத்தழகன் : ஒருவன் தன் உள்ளத்தால் பொறாமை படியாவண்ணம் - சேரா வண்ணம் வாழவேண்டும். அதுவே ஒருக்கத்தின் சிறந்த வழியாகும்.

அறச்செல்வி : நீங்கள் இந்த அறவைழியைக் கதை மூலம் நடந்த நிகழ்வுகள் மூலமும் நிகழ்வுகள் மூலமும் தொடர்புபடுத்தி விளக்கியது பெரியவர்களுக்கு மட்டும் அல்லாமல் மாணவர்களுக்கும் நன்கு விளங்கும்படி எளிமையாக அமைந்தது.

முத்தழகன் : நான் எப்போதும் மாணவர்களை மனத்தில்கொண்டு நடைபோடுபவன். அவர்கள் தாமே நம் வருங்காலத் தலைவர்கள்!

அறச்செல்வி : உங்கள் கொள்கை உயர்ந்த கொள்கை. இன்னொரு முறை சின்னஞ் சிறுவர்களுக்கு மட்டும் ஒரு குறள் சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்வோம். அன்பு கூர்ந்து நீங்கள் வந்து பேச வேண்டும்.

முத்தழகன் : கரும்பு தின்னக் கூலியா? சிறுவர்களுக்குப் பேசுவது எனக்கு மிகவும் பிடித்தமான செயல்.

அறச்செல்வி : மிக்க மகிழ்ச்சி. விரைவில் அதற்குரிய ஏற்பாட்டை மன்றம் செய்யும்.

முத்தழகன் : என் தந்தையின் பழைய நண்பர் ஒருவர் இங்கு இருக்கிறார் அவர் இல்லத்திற்குச் செல்ல வேண்டும்.

அறச்செல்வி : யார்? பொன்னம்பலம் வீட்டிற்கா? அவர் மகன் ஒருவன் பெயர் கூட புகழேந்தி தானே?

முத்தழகன் : ஆம். அவர்தான் அம்மா.

அறச்செல்வி : அவர் உங்கள் தந்தைமேல் மிகுந்த பொறாமை கொண்டவர் ஆயிற்றே. நேற்று நடந்த உங்கள் சொற்பொழிவிற்கு வருமாறு அவருக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது. ஆனால் அவர் வரவில்லை. அவர் மகனையும் அனுப்பவில்லை. அவர் வீட்டிற்கா நீங்கள். . . . .

முத்தழகன் : அதனால்தான் அவர் வீட்டிற்கு நான் சென்றே ஆகவேண்டும். இவர் மனத்தில் ஆலமரம்போல் வளர்ந்திருக்கும் பொறாமையை இல்லாமல் ஆக்க வேண்டும்.

அறச்செல்வி : எதிரியைக் களத்திலேயே சந்திக்கப் போகிறீர்களா?

முத்தழகன் : அவர் எதிரி அல்லர். உண்மை விளங்காமல் குழம்பிக் கொண்டிருப்பவர். மனத்தில் தெளிவை ஏறப்டுத்தி விட்டால் எல்லாம் சரியாக் விடும்.

அறச்செல்வி : அதற்குரிய திறவு கோல்?

முத்தழகன் : என்னிடம் இருக்கிறது. அம்மையாரே.

அறச்செல்வி : அவரை நல்வழிப்படுத்த உங்களால் முடியுமென்று நம்புகிறேன். சென்று வாருங்கள். நானும் உங்களுடன் வரட்டுமா?

முத்தழகன் : உங்களுக்குத் தொல்லை வேண்டா. நான் மட்டும் சென்று வெற்றியுடன் திரும்புவேன்.

அறச்செல்வி : நன்று, நன்று. சென்று வாருங்கள்.

காட்சி முடிவு

காட்சி : 3

இடம் : ஓர் எளிமையான சிறிய வீடு
நேரம் : காலை
கதை மாந்தர் : முத்தழகன், பொன்னம்பலம்

நிலை : தன் குடும்பத்தின் மேல் பொறாமை கொண்டுள்ள பொன்னம்பலத்தின் வீடிற்கு முத்தழகன் செல்லல்.

முத்தழகன் : ஐயா! வணக்கம்!

பொன்னம்பலம் : யார்?

முத்தழகன் : நான் முத்தழகன் வந்திருக்கிறேன். உங்கள் நண்பர் அறவாணரின் மகன்.

பொன்னம்பலம் : என் வீடு தேடி .......

முத்தழகன் : ஏன் வரக்கூடாதா மாமா? என் தந்தையின் நண்பர் வீடிற்கு வர எனக்கு உரிமை இல்லையா?

பொன்னம்பலம் : உன் காரை நிறுத்துவதற்குக் கூட இங்கே உரிய இடம் இல்லை.

முத்தழகன் : ஏன் இல்லை? அதோ காரை நிறுத்திவிட்டுத்தான் வீட்டினுள் வருகிறேன்.

பொன்னம்பலம் : இன்கு உட்காரக் கூட நாற்காலி இல்லை.

முத்தழகன் : இந்த நாற்காலி போதுமே! பாய்விரித்துக் கீழேகூட நல்ல உற்கார்ந்துகொள்ளலாம்.

பொன்னம்பலம் : உன்னால் அவ்வளவு தூரம் இறங்கிவர முடியுமா?

முத்தழகன் : ஏன் முஇயாது? நான் என்ன வானத்திலா குடியிருக்கிறேன்?

பொன்னம்பலம் : என் மனைவி வேலைக்குச் சென்றுவிட்டாள். அவள் இருந்தாலாவது தேநீர் கலந்து கொடுப்பாள்.

முத்தழகன் : மாமா, நான் காப்பி, தேநீரெல்லாம் அருந்துவதில்லை. கொதித்து ஆறிய நீரையே பருகுவேன்.

பொன்னம்பலம் : இங்கே அதுகூட இல்லை.....

முத்தழகன் : நான் சற்று முன்புதான் தமிழ் வளர்ச்சி மன்றத்தில் பசியாறினேன். என்னை இங்கு அழைத்திருந்த அறச்செல்வி அம்மையார் எல்லா வசதிகளையும் தக்கபடி செய்திருந்தார்.

பொன்னம்பலம் : இந்த ஏழை வீட்டிற்கு.....

முத்தழகன் : யார் ஏழை? காசுபணம் இல்லாதவர்களெல்லாம் ஏழை ஆவார்களா? அவர்களிடம் நல்ல மனமிருந்தால் அவர்கள் செல்வந்தர்களே. பணம் நிறை இருந்தாலும் நல்ல மனம் இல்லாதவர்தாம் ஏழைகள்.

பொன்னம்பலம் : தம்பி......!

முத்தழகன் : மாமா அமைதியாக உட்காருங்கள். கொஞ்சம் பேசலாம்.

பொன்னம்பலம் : (அருகில் உட்காருதல்) சொல் தம்பி....

முத்தழகன் : நீங்களும் என் தந்தையும் இங்குள்ள தமிழ்ப் பள்ளியில் படித்தவர்களே. என் தந்தை விடா முயற்சியோடு கடுமையாக உழைத்து உயர்நிலை அடைந்தார். நீங்களும் உழைப்பை நம்பி விடா முயற்சி செய்திருந்தால் உயர்ந்திருக்கலாம்.

பொன்னம்பலம் : எனக்குக் கை கொடுக்க ஆள் இருந்திருந்தால்....

முத்தழகன் : என் அப்பாவிற்கு மட்டும் யார் இருந்தார்கள்? அவரே தாமகவே கையை ஊன்றிக் கரணம் பாய்ந்தும் எதிர் வந்த தடைகளை வென்றும் முன்னேறினார். ஒன்று சொல்கிறேன் கேளுங்கள்:

“அறன்ஆக்கம் வேண்டாதான் என்பான் பிறன் ஆக்கம்
பேணாது அழுக்கறுப் பான்” (163)

என்ற குறளைப் படித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

பொன்னம்பலம் : படித்ததாக நினைவு.....

முத்தழகன் : இக்குறளில் திருவள்ளுவர் என்ன சொல்கிறார் என்றால், பிறர் அடைந்துள்ள கல்விச் செல்வத்தையோ பொருள் செல்வத்தையோ கண்டு மகிழாமல் பொறாமைப்படுபவன், தனக்கு நல்லன வந்து சேராமல் தடைபோட்டுத் தடுத்து விடுபவன் ஆவான் என்கிறார்.

பொன்னம்பலம் : அப்படி என்றால் நான் உயர முடியாமல் போனதற்கு.......

முத்தழகன் : பல காரணங்கள் இருக்கலாம் முதன்மையான ஒன்று, நீங்கள் உங்கள் நண்பரைப் பின்பற்றி உயராமல், அவர் மேல் வீணாகப் பொறாமை கொள்வதிலேயே காலத்தை வீணடித்ததால்தான்.

பொன்னம்பலம் : தம்பி.......!

முத்தழகன் : அப்பா உங்களை மறந்துவிடவில்லை. புதிதாகக் குடியேறிய இடத்தின் சூழல், கடுமையான வேலைச் சுமை, அடிக்கடி இங்குவந்து போகமுடியாத தொலைவு போன்றவையே காரணங்கள். இப்பொழுது ஒரு திட்டத்தோடுதான் உங்களைப் பார்க்க வந்திருக்கிறேன்.

பொன்னம்பலம் : ம்.....என்ன திட்டம்?

முத்தழகன் : உங்கள் மூத்தமகன் என்ன செய்து கொண்டிருக்கிறார்.?

பொன்னம்பலம் : ஒரு நிறுவனத்தில் சாதாரண வேலை செய்து கொண்டிருக்கிறான்.

முத்தழகன் : இளைய மகன்?

பொன்னம்பலம் : இளையமகன் புகழேந்தி 4ஆம் படிவம் படிவத்தில் கொண்டிருக்கிறான்.

முத்தழகன் : நீங்களும் அத்தையும் விரும்பினால் புகழேந்தி எங்கள் வீட்டில் தங்கிப் படிக்கலாம். என் அம்மா அவனைச் சொந்தப்பிள்ளைபோல் கவனித்துக் கொள்வார். அவனைப் பல்கலைக் கழகத்தில் சேர்த்துப் பட்டதாரியாக்குவது எங்கள் பொறுப்பு.

பொன்னம்பலம் : தம்பி......! (கட்டிப் பிடித்துக் கொள்ளுதல்)

முத்தழகன் : இது வீண்வார்த்தை இல்லை மமா. அத்தையுடன் கலந்து பேசி முடிவைக் கூறுங்கள். நானே வந்து புகழேந்தியை அழைத்துச் செல்வேண். பெரிய பையனுக்கும் அங்கு ஏதாவது வாய்ப்பை ஏற்படுத்த முயலுவோம்.

பொன்னம்பலம் : என் காதில்படும் சொற்களெல்லாம் உண்மையா? அல்லது நான் கனவு ஏதும் கண்டு கொண்டிருக்கிறேனா?

முத்தழகன் :கனவும் அல்ல; கற்பனையும் அல்ல. உண்மை, உண்மை, உண்மை. நம்புங்கள்.

பொன்னம்பலம் : தம்பி, என்னைப் பின்னுக்குத்தள்ளியது என்னிடம் குடிகொண்டிருக்கும் பொறாமைக் குணம்தான் என்பதை உணர்கிறேன். அது இன்றோடு என்னைவிட்டு ஓடிவிட்டது. உன் அத்தை இதைக் கேட்டால் மகிழ்ச்சியால் துள்ளிக் குதிப்பாள். புகழேந்தியை உங்கள் வீட்டிற்கு அனுப்ப முழு மனதுடன் ஒப்புக் கொள்வாள்.

முத்தழகன் : நல்லது மாமா. நான் எண்ணி வந்த செயல் இனிதே முடிந்தது. நான் புறப்படுகிறேன். விரைவில் வந்து உங்கள் எல்லாரையும் எங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்வேன்.

பொன்னம்பலம் : நல்லது தம்பி, கூடிய விரைவில் நல்ல செய்தி அனுப்புவேன். என்னை வீடுதேடிவந்து சந்தித்து நல்வழிகாட்டிய உனக்கும் உன்னை உயர்ந்த மனிதனாக உருவாக்கிய உன் தந்தைக்கும் நன்றி.

நாடகம் நிறைவுற்றது.

# பொறையுடைமை



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

.

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.

சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.

கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த் தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

***துறந்தாரின் தூய்மை யுடையர் இறந்தார்வாய்***

***இன்னாச்சொல் நோக்கிற் பவர்.---*** குறள் எண்:159)

பொறுமை கடலினும் பெரிது.இதை நெடுங்காலமாக நமது முன்னோர்கள் உரைக்க கேட்டு வருகிறோம்.அப்படி செயல்படுபவர்களையும் நம்முடன் உறவாக,தோழமையாக நம்மில் சிலர் பெற்றிருப்போம்.நாம் செய்யும் வினைகளில்,நமக்கோ,பிறருக்கோ தீங்கு இழைப்பவர்கள்,இதற்கு எதிர்வினை ஆற்றுபவர்கள் என்ற இரு செய்கைகளே உள்ளது.சிலர் ஒரு வினையைச் செய்யும் போது மற்றவருடைய மனம் புண்படும் வகையிலும்,அவர்களை இழிவுப்படுத்தும் வகையில் நடந்துகொள்வர்.ஆனால் அப்படிப்பட்ட நபர்களையும் பொறுத்துக் கொள்ளும் தன்மையுடையவர்,துறந்தாரைப் போல தூய்மையானவர்களாக பார்க்கப்படுவார்கள்.அவர்கள் தங்களை காயப்படுத்தியவர்களை கூட எளிமையாக கடந்துச் சென்று விடுவர்.அப்படிப்பட்ட மேன்மையான குணம் உடையவர்கள் குடும்ப வாழ்க்கையில் இருந்தாலும் அனைத்தையும் துறந்த துறவிக்கு சமமானவர்களே.அப்படிப்பட்டவர்களை இவ்வுலகம் உள்ளவரை அனைவரும் போற்றுவர்.உயர்த்திப் பேசுவார்கள்.அவர்கள் புகழ் உயர்ந்து விளங்கும்.

கௌதம புத்தர் இவ்வுலகிற்கு பல நன்னெறிகளைக் கற்பித்துச் சென்றார்.அப்படிப்பட்டவர் தமது பயணங்களில் தம்மைச் சூழ்ந்திருந்த மக்களால் அவ்வளவு துன்பங்களை அனுபவித்தார்..தான் வெறுமனே அமர்ந்திருப்பதாலும்,மற்ற ஞானியர் போல பல அதிசயங்கள் செய்து காட்டாமலும், போதனைகள் செய்தல் இல்லாமலும் தன்னிலையில் அமர்ந்திருந்ததால் அவரைப் பைத்தியக்காரன் போலவே நினைத்தனர். .பின்னர் அமைதியாக மலர்களைப்

பார்த்துக் கொண்டும்,சிரித்துக் கொண்டும் கிடப்பார்..தாம் வேறுமனே உட்கார்ந்திருப்பதால் ஒன்றுக்கும் உதவாத மனிதன் என்ற நிலைமையிலேயே அவர் கருதப்பட்டார்..பின்னர் தமது சீடர்களிடம் கூடச் சில ஐயங்கள் வரும் அளவிற்கு நடந்து கொண்டார்..ஏளனமாக அவர்கள் பேசிய போதும் பொறுத்துக் கொண்டார்..தாம் எதை தேடிச் செல்கிறோம் என்பதை நன்குணர்ந்து கொண்டு பொறுமை காத்தார்..தம்மை இழிவுப்படுத்தியவரையும், கல் எறிந்தவர்களையும், தம் மீது உமிழ்ந்தவர்களையும் பொறுத்தருளினார்..பின்னர் தனது போதனை மூலம் பலரை அன்பால் அடக்கினார்.தமது பயணங்களில் தமது இறுதி முடிவிற்காக தானே காத்திருந்தார்.தமக்கு நஞ்சு வைத்த உணவு பரிமாறப்படுகிறது என்பதை உணர்ந்து கூட மகிழ்வுடன் அதை உண்டார்.அந்நேரத்தில் நீங்கள் உணவு அளித்ததற்கு நன்றி.ஆனால் இந்த உணவைப் பிறருக்குக் கொடுக்காதீர்கள் என்று முகத்திற்கு நேராகக் கூறி, தவறு செய்தவர் தம் குற்றத்தை உணரச் செய்தார்..பிறகு அப்படியே நோய்வாய்ப்பட்டார். அந்நேரத்திலும் ஊர் ஊராக தனது போதனைகளைக் கொண்டு செல்ல சீடர்களிடம் கூற அவ்வளவு நேரம் போதவில்லையே என்று வருத்தமுற்றார்.எனினும் தன் அடையாளத்தை உலகமெங்கும் பரப்பி விட்டுச் சென்றார்.அவ்வாறு விதைக்கப்பட்ட சிந்தனைகள் உலகெங்கும் பரவி இருப்பதே அவர் பொறுமைக்குக் கிடைத்த வெற்றி.இன்றளவும் அவரது போதனைகள் உலகமெங்கும் பின்பற்றப்படுகிறது.ஆனால் மரத்தடியில் புத்தரைப் போல் சாய்ந்துக் கிடப்பவர் எல்லாம் புத்தராக முடியாது என்பதே நாம் இன்று கண் கூடாக பார்க்கும் உண்மை.ஏனெனில் புத்தரை வழிபடும்,பின் தொடரும் மனித கூட்டம் ஏராளமான மனிதப் படுகொலைகளையும் செய்திருப்பது வினோதமான உண்மை.

நமது நாட்டின் விடுதலைக்காக போராடியதில் அறப்போராட்டமே வென்றது..எங்கும் வன்முறை நிகழ்ந்திருந்தால் நாம் அரிய பல உயிர்களை இழந்திருக்க கூடும்.மாறாக காந்திய வழியில் தனது எதிர்ப்பினை அமைதியான போராட்ட முறைகளாக மாற்றி, அவ்வளவு கொடுமை செய்த ஆங்கில ஏகாதிபத்தியத்தினை எதிர்த்து உண்ணா நோன்பு,நடைப் பயணம்,பட்டினிப் போராட்டம் என கலங்கடிக்கச் செய்தோம்.வன்முறை மூலம் எதையும் சாதிக்க முடியாது என உலகிற்கு எடுத்துக் கூறினோம்.அகிம்சை வழி என்பது உலகிற்கே போராட்ட அடையாளமாக வழிகாட்டியது.தனது நாட்டின் நிறவெறிக்கான எதிர்ப்பு போராட்டத்தில் போராளி நெல்சன் மண்டேலாவும் தனது மக்களுக்கான போராட்டத்தை,அமைதி வழியில் மாற்றி,தனது பொன்னான இருபத்தி ஏழு வருடங்களைச் சிறையில் கழித்தார்.பொறுமை காத்து அவர் செய்த அறப்போராட்டமே இன்றும் உலகளவில் அவர் ஒரு உயரிய தலைவர் எனப் போற்றப்படக் காரணமாக இருக்கிறது.எதிர்ப்பைக் காட்டி வெறுப்பைப் பெறுவதை விட,பொறுமையுடன் அமைதி காத்து நாம்,செய்யும் செயல்களே மேலான செயல்களாகப் பார்க்கப் படுகின்றன.

அல்பேனிய நாட்டை சேர்ந்த அன்னை தெரசாவின் உயரியத் தொண்டைப் பற்றி அனைவரும் அறிவோம்.கொல்கத்தாவில் தனது மதம் பரப்பும் பணிக்காக வந்த அவர் அங்கிருந்த சுகாதார கேடுகள்,நோய்வாய்ப்பட்டவர் நிலைமை,வறுமை,குழந்தைகள் கவனிப்பாரற்றுக் கிடக்கும் தன்மை, பெண்களின் பரிதாபமான நிலைமை ஆகியவற்றைக் கண்டு மனமிரங்கி தான் செய்ய வந்த பணியை மறந்து,மக்களுக்காக உழைக்கத் தயாராக ஆனார்.சுமார் நாற்பத்தைந்து வருடங்களுக்கு மேலாக அன்பின் பணியாளர் என்ற அமைப்பைத் தொடங்கி பெருமளவில் சேவைகளைச் செய்தார்.முதலில் இந்த மனிதாபிமானமற்ற முறையில் மக்கள் தவிப்பதைக் கண்டு, நடத்தப்படுவதைக் கண்டு வேதனைக்குள்ளானார். அதற்காக தன்னால் ஆன முயற்சிகளை மேற்கொண்டார்.தனது அமைப்பின் மூலம் கொடு நோய்களால் தாக்கப்பட்டவர்களைத் தனது கைகளால் அள்ளி அனைத்து,அரவணைப்பின் மூலமே பலரின் துயரை நீக்கினார்.

ஒரு முறை இப்படிப்பட்ட பணிகளைச் செய்வதற்காக பொருளாதார ரீதியாக நிறைய பணம் தேவைப்பட்டது.அதற்காக கொல்கத்தாவின் தெருக்களில் மிகப்பெரிய பணக்காரர்கள் வாழும் தெருக்களுக்குச் செல்கிறார்.சிலர் தங்களால் ஆன உதவிகளையும்,சிலர் ஆபாச வார்த்தைதைக் கூறியும்,சிலர் ஏளனமாக பேசியும் அனுப்பினர்.ஆனால் எதற்கும் கலங்காமல் அவர் சென்று வீடு,வீடாகக் கதவைத் தட்டினார்.அப்போது ஒரு செல்வந்தர் வீட்டின் கதவைத் திறந்து அன்னைத் தெரசாவை மரியாதை இல்லாமல் பேசினார்.அப்போது அவர் நகராமல் நிற்க கோபமடைந்த அந்த செல்வந்தர் அவர் முகத்தின் மீது உமிழ்ந்தார்.அதற்கும் அசையாமல் துடைத்துக் கொண்டு,நன்றி.இதை எனக்கு கொடுத்து விட்டீர்கள்.சர்,இப்போது என் பிள்ளைகளுக்குக் கொஞ்சம் உணவுத் தாருங்கள் என்றார் அமைதியாக.இவ்வினையை எதிர்ப்பார்க்காத அந்த செல்வந்தர் தலைக் குனிந்தார்.பிறகு உதவியும் செய்யத் தொடங்கினார்.அப்படிப்பட்ட பொறுமைசாலியை யாருக்குத்தான் எதிர்க்கத் தோன்றும்!

அதே போல தன்னுடைய அமைப்பு ஓரளவிற்கு உதவி பெற்று வந்த நிலையிலும் பெரும் செல்வந்தர்கள் தன்னை அழைக்கும் பெரு விருந்துகளுக்குச் சென்று தன் கைகளாலேயே மீந்த உணவுகளை எடுக்கும் பழக்கத்தை வைத்திருந்தார்.அவருடைய நல விரும்பிகளே அதைத் தடுத்த போது கூட அவர் புன்னகைத்துவிட்டு,நீங்கள் புதிய உணவுகளைத் தாருங்கள்.ஆனாலும் நீங்கள் வீணாக்கும் இந்த உணவும் இல்லாமல் இங்க ஏராளமானோர் மடிகின்றனர் என்று மீந்த உணவுகளை எடுத்துச் செல்வார்.இப்படிப்பட்ட மனிதர்களின் சேவையை நாம் எவ்வாறு பாராட்டாமல் இருக்க முடியும்!

அவ்வளவு பொறுமை காத்து,தன்னை இழிவு படுத்தியவரையும் அவர் செய்த செயல்களையும் பொறுத்துக் கொண்டு சேவையாற்றிச் சென்றதால் தான்,4000 க்கும் மேற்பட்ட பெண்களைத் தன்னைப் போல சேவை செய்ய விட்டுச் சென்றுள்ளார்.பத்மஸ்ரீ விருது,பாரத

இரத்னா,இரமென் மகசேசே விருது,உயரிய நோபிள் விருது என விருதுகளைக் குவித்து தனது அறப்பணிக்கு அடையாளச் சின்னமாக இன்றளவும் பேசப்படுகிறார்.

.பருந்து எப்போதும் வானளவு உயரே பறக்கும் தன்மை கொண்டது.தன்னைச் சுற்றி இருக்கும் சூழ்நிலைப் பற்றியோ,மற்ற பறவைகளைப் பற்றியோ கவலைக் கொள்ளாது.எப்போதும் தனது இரையை எடுத்துக் கொண்டு உயர்வான இடங்களில் அமர்ந்து தனது உணவை உண்ணும் தன்மை உடையது.அப்படி இருக்க காகத்திற்கு அது கீழே வரும்போதெல்லாம் வம்பு இழுப்பதே வேலை.பருந்து எப்போது இரைக்காக கீழே வரும் போதெல்லாம் அதை கொத்தும்.ஆனால் பருந்தோ எந்தவித எதிர்ப்பும் தெரிவிக்காமல் தன் சிறகை விரித்துப் பறக்க ஆரம்பிக்கும்.அப்போது மீண்டும் காகம் வந்து கொத்தும்.பொறுமை காத்து அமைதியாக தன் உயரத்தை அதிகரிக்கும்.இவ்வாறே தொடர்ந்து நடக்கும்.ஒரு கட்டத்திற்கு மேல் உயரே செல்ல முடியாத காகம் தன் தோல்வியை ஒப்புக் கொண்டு அதன் இடத்திற்கு திரும்பும்.பருந்தோ கீழே போன காகத்தை குறைவானது என்றோ,தனக்கு இணையானது இல்லை என்றெல்லாம் எண்ணாமல் தன் வேலையை பார்க்க சென்றுவிடும்.

வாழ்க்கை அவ்வளவே.நாம் பருந்தாக இருந்து தீயவர்களிடம் இருந்து விலகி இருந்தாலே,நமது வேலையை பார்த்தாலே உயரத்திற்குச் செல்ல முடியும்.அதற்காக நாம் கோழையென்றும்,முடியாதவர்கள் என்றும் அர்த்தம் அல்ல.நல்லோர்க்கு அழகு ஒதுங்கிச் செல்லுதல்.தனக்கு தீங்கிழைத்திருக்கிறார்கள் என்று தெரிந்தும் அவர்களைப் பார்த்து புன்னகைத்து விட்டுக் கடந்துச் செல்லுதலே மேலான செயலாகும்.அப்படிப்பட்டவரே இன்றளவும் உலகில் உயரிய நிலையில் இருக்கிறார்கள்.அதனால் மனிதருக்குள் காழ்ப்புணர்வை நீக்கி விட்டு உயரிய மேலான வாழ்க்கையை வாழப் பழகுவோம்.அறம் காப்போம்.



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து



தி.பி.2053-மார்கழி-8 திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ் பொ.திசம்பர்- 24.2023.

உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்










## சனவரி 2024

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | 31 | | | |

விரைந்து செல்லும் காலச் சுழல்
பறந்து போகும் போக்கை உன்னால்
நிறுத்த முடியுமா?தடுக்க இயலுமா?
இயைந்து சிறந்த செயல்களெல்லாம்
முயன்று முடிக்க உறுதி கொள்வோம்.
செயலே உயிர் இயக்கமே மூச்சு
செய்வோம் முடிப்போம் வெல்வோம் வருக.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.குறள்-334 நிலையாமை


சிறப்பாசிரியர்: மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன்

பொறுப்பாசிரியர்: திருமதி தாமரை சீனிவாசராவ்

ஆசிரியர்:மறைமலை இலக்குவனார்

சிறுவர் இலக்கியம்: குறள் விளக்க நாடகம்



# பிறர் பொருளை விரும்பாதே!

**பாவலர் முரசு நெடுமாறன்**

**(இந்தக் குறள் விளக்க நாடகத்தை இயற்றி வழங்கியவர் " மலேசியாவின் அழ.வள்ளியப்பா " "என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக் குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் "என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.)**

காட்சி : 1

இடம் : வீட்டிலிருந்து பள்ளிக்குச் செல்லும் வழி

நேரம் : பிற்பகல்

கதை மாந்தர் : பூபாலன், பூவரசு

நிலை : பூபாலனும் அவன் நண்பன் பூவரசும் பள்ளி முடிந்து வீடு திரும்புதல்

பூபாலன் : என்ன பூவரசு? இன்று ஆசிரியர் தமிழ்ப் பாடத்தின்போது திருக்குறள் கற்பித்தாரே! என்ன, உனக்கு விளங்கியதா?

பூவரசு : ஓரளவுதான் விளங்கியது.

பூபாலன் : எனக்கு நன்கு விளங்கியது.

பூவரசு : திருக்குறளை உன் அம்மா உனக்குத் தவறாமல் சொல்லி வருகிறார். அதனால் நீ எல்லா வகைகளிலும் கெட்டிக் காரனாக விளங்குகிறாய்.

பூபாலன் : பள்ளியில் திருக்குறளும் சொல்லித் தருகிறார்கள். நீ அதில் நாட்டம் செலுத்துவதில்லை.

பூவரசு : பள்ளியில் பல பாடங்களைப் படிக்கிறோம். தமிழ்ப் பாடத்தின் போது, எப்பொழுதாவது திருக்குறள், ஆத்திசூடி, மூதுரை போன்ற நூல்களிலிருந்து சில செய்யுள்களைக் கற்பிப்பார்கள்.

பூபாலன் : பள்ளியில் வழிகாட்டுவார்கள். நாம்தான் வீட்டில் ஆர்வதோடு பாடங்களை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

பூவரசு : பெற்றோர் என்னை அறிவியல் கணிதம் போன்ற பாடங்களில் மட்டும் அதிகக் கவனம் செலுத்தினால் போதும் என்பார்கள். அப் பாடங்களில் தெளிவு பெறத் தனிப்பாட ஆசிரியர்களையும் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

பூபாலன் : அது நல்ல ஏற்பாடுதான். அவை எதிர்காலத்தில் நல்ல வேலையில் அமர உதவும். கல்வி கற்பது, பொருளைப் பெருக்கிக் கொளள் மட்டும் உதவினால் போதாது. மனிதநேயம் கொண்டு எல்லாரையும் மதிக்கும் மனபான்மைவளரத் திருக்குறள் போன்ற அற நூல்களைக் கற்கவேண்டும். இடையிடையே நூலகங்களுக்கும் சென்று நூல்களைப் பெற்றுப் படிக்க வேண்டும்.

பூவரசு : நீ எப்போது நூலகத்திற்குச் செல்வாய்?

பூபாலன் : நாளை சனிக்கிழமை. பள்ளி விடுமுறை ஆதலால் நான் நூலகம் செல்ல விருக்கிறேன். நீயும் என்னுடன் வரலாம்.

பூவரசு : நன்றி பூபாலன். நூலகத்திற்கு உன்னுடன் நானும் வருவேன்.

காட்சி முடிவு.

காட்சி : 2

இடம் : நூலகத்திற்குச் செல்லும் வழி

நேரம் : காலை

கதை மாந்தர் : பூபாலன், பூவரசு

நிலை : பூபாலனும் பூவரசும் நூலகத்தை நோக்கிச் செல்லல்.

பூபாலன் : வா, பூவரசு! சரியான நேரத்திற்கு வந்து விட்டாயே!

பூவரசு : நீ குறிப்பிட்ட நேரத்தில் எதையும் செய்பவன். நான் காலம் தாழ்த்தி வந்தால் என்னை விட்டுவிட்டுப் போய்விடுவாய். அதனால்தான்.....

பூபாலன் : எதையும் கட்டாயத்திற்காகச் செய்யக் கூடாது. இயல்பாக எதனையும் செய்ய வேண்டும். என்ன ஆனாலும் உன்னை விட்டு விட்டுச் செல்லமாட்டேன்.

பூவரசு : நன்றி, பூபாலன்.

பூபாலன் : அதோபார் நூலகம். இன்னும் ஐந்து மணித்துளிகளில் அங்குச் சென்று விடலாம். வேகமாக நட.

பூவரசு : நீ நல்ல ஓட்டக்காரன். உன்னால் மிக வேகமாக நடக்க இயலும். எனக்கு அந்தப் பயிற்சி இல்லை.

பூபாலன் : நடைப் பயிற்சி நம் உடலுக்கு நல்லது என்று ஆசிரியர் அடிக்கடி கூறுவார். நீ அதையெல்லாம் கருத்தில் கொள்வதில்லை.

பூவரசு : இனிமேல் நான் உன்னுடன் சேர்ந்து நடப்பேன்.

பூபாலன் : நல்லது வா, நூலகத்துக்குச் செல்வோம்.

(நூலகத்திற்குச் செல்லுதல்)

பூவரசு : அடேயப்பா! எத்தணைப் பெரிய நூலகம்!

பூபாலன் : வா, நாம் சிறுவர் இலக்கியப் பகுதிக்குச் செல்வோம்.

பூவரசு : நான் கதை நூல்கள் உள்ள பகுதிக்குச் செல்வேன்.

பூபாலன் : நான் கவிதை நூல்கள் உள்ள பகுதிக்கு செல்வேன். பூவரசு, புத்தகங்கள் பழுதாகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இங்குள்ள பல நூல்களை நான் படித்திருக்கிறேன்.




பூவரசு : நான் இன்றுதானே நூலகத்திற்கு வந்தேன். இனிமேல்தான் இதன் சிறப்பை அறிய வேண்டும். எனக்குக் கதைகள் மிகவும் பிடிக்கும். அதோ கதைகள் உள்ள பகுதி.

பூபாலன் : நான் சொன்னது நினைவிருக்கட்டும்.

(நீண்ட நேரத்தை நூலகத்தில் கழித்து விட்டு இருவரும் வெளியே வருதல்)

பூபாலன் : என்ன பூவரசு, உனக்கு மகிழ்ச்சிதானே?

பூவரசு : அளவற்ற மகிழ்ச்சி பூபாலன். இனி உன்னுடன் அடிக்கடி இங்கு வருவேன்.

பூபாலன் : சரி, வா போகலாம்.

(நூலகத்திலிருந்து வெளியேறுதல்)

காட்சி : 3

இடம் : நூலக வாயில்
நேரம் : நண்பகல்
கதை மாந்தர் : பூபாலன், பூவரசு, பெரியவர்

நிலை : பூவரசு நூலகத்திலிருந்து எடுத்து வந்த புத்தகம் பற்றியது

பூபாலன் : என்ன பூவரசு? உன் சட்டைப்பை உப்பலாக இருக்கிறதே?

பூவரசு : (இயல்பான முறையில்) நூலகத்தில் இந்தப் புத்தகம் என்னை மிகுதியாகக் கவர்ந்தது. இந்த அழகிய திருக்குறளை வீட்டில் படிப்பதற்காக எடுத்து வந்தேன். இன்னொரு முறை நான் இங்கு வரும்போது எடுத்த இடத்திலேயே வைத்து விடுவேன்.

பூபாலன் : இது பெரும் தவறு; குற்றம். நூலகத்திலிருந்து புத்தகம் இரவல் பெற வேண்டுமானால் அதிகாரிகளிடம் அனுமதி பெற வேண்டும். முறையே பதிவு செய்த பின்னரே நூலை எடுத்துச் செல்ல முடியும். அதிலும் இது போன்ற சிறந்தபதிப்பான அரிய நூல்களை இரவல் பெற முடியாது.

பூவரசு : திரும்பி உள்ளே சென்று இதை எடுத்த இடத்திலேயே வைத்துவிடலாமா?

பூபாலன் : முடியாது, படித்த புத்தகங்களை அங்கேயே வைத்து விட வேண்டும். நூலகத்தார் அவற்றை உரிய இடத்தில் வைத்து விடுவர். உனக்கு நூலகநெறி புரியவில்லை. நீ புத்தகத்தை வெளியே எடுத்து வந்தது அதிகாரிகளுக்குத் தெரிந்தால் உன்னைக் குற்றவாளியாக்கி விடுவர்; திருட்டுப் பட்டம் கட்டி விடுவர்.

(அப்பொழுது அங்கே பெரியவர் ஒருவர் வருதல்)

பூபாலன் : ஐயா, வணக்கம்! ஒரு பெரிய தவறு நேர்ந்துவிட்டது. நீங்கள்தாம் அதிலிருந்து எங்களை மீட்க வேண்டும்.

பெரியவர் : (பூபாலனைப் பார்த்து)
உன்னை இங்கே பல முறை பார்த்திருக்கிறேன். உன்னுடன் வந்திருக்கும். . .

பூபாலன் : இவன் என் நண்பன் பூவரசு, நான்தான் இவனை இங்கு அழைத்து வந்தேன்.

பூவரசு : வணக்கம் ஐயா!

பெரியவர் : சரி என்ன நடந்தது? விளக்கமாகச் சொல்லுங்கள்.

பூபாலன் : நூலகத்திற்கு என்னுடன் வந்த இவன் இந்தப் புத்தகத்தைத் தவறுதலாக எடுத்து வந்துவிட்டான்.

பெரியவர் : இது குற்றமாயிற்றே. பூவரசு! ஏன் அப்படிச் செய்தாய்!

பூவரசு : இந்தப் புத்தகம் மிக மிக அழகாக இருந்தது. வீட்டிற்கு எடுத்துப் சென்று படித்துவிட்டு பிறகு கொண்டு வரலாம் என்று நினைத்தேன்.

பெரியவர் : சரி, என்னுடன் வாருங்கள். நான் இந்த நூலகக் காப்பாளர்களில் ஒருவன். என் அறையில் உட்கார்ந்து பேசலாம்.

(உள்ளே செல்லல்)

பூபாலன் : நான் உங்கள் அறைக்கு வரலாமா?

பெரியவர் : வரலாம். வாருங்கள்.

பூவரசு : ஐயா புத்தகம்?

பெரியவர் : என் அறைக்குக் கொண்டுவா.

பூபாலன் : எங்களுக்குத் தண்டனை ஏதும் தருவார்களா ஐயா?

பெரியவர் : உங்களுக்குத் திருக்குறள்பற்றித் தெரியுமா?

பூபாலன்,
பூவரசு : ஓரளவு தெரியும் ஐயா.

பெரியவர் : திருவள்ளுவர் கூறும் அறத்தின்படி நீங்கள் குற்றவாளிகளே!

பூவரசு : (அச்சம் மிகுந்து) ஐயா!

பெரியவர் : திருக்குறளின் 18ஆம் அதிகாரம். ‘வெஃகாமை’ என்பதாகும்.

பூபாலன் : வெஃகாமை என்றால் என்ன ஐயா?

பெரியவர் : வெஃகாமை என்றால் விரும்பாமை அதாவது பிறர் பொருள்மேலே ஆசை படாமை என்று பொருள்.

பூபாலன் : முழுக் குறளையும் சொல்லி விளக்குங்கள் ஐயா!

பெரியவர் : “நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்”

பூவரசு : குறளின் பொருளை விளக்கிக் கூறுங்கள் ஐயா!

பெரியவர் : ஒருவன் நடுநிலையான எண்ணம் இல்லாமல் பிறருக்கு உரிய நல்ல பொருளை கவர்ந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினால் அவன் குடி கெட்டுப் போகும். குற்றமும் உடன் வந்து சேரும்.

பூபாலன் : அப்படியென்றால் பூவரசு?

பெரியவர் : பூவரசு நூலகத்தின் நெறிமுறை தெரியாமல் படிக்க வேண்டுமென்ற ஆவலில் நூலை எடுத்தான்; திருப்பிக் கொடுத்துவிடவும் எண்ணம் கொண்டிருந்தான். அதனால் இது மன்னிக்கத்தக்கதே.

பூவரசு : எனக்குச் சில திருக்குறள்கள்தான் தெரியும்.
‘நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்’
என்ற குறளை இன்றுதான் அறிந்தேன்.

பெரியவர் : இந்தக் குறளின் பொருளை உணர்ந்து நடந்தால் பேராசை வராது. மற்றவர் பொருளை அபகரிக்க வேண்டுமென்ற எண்ணமே வராது.

பூவரசு : குறளின் பொருளை மீண்டும் கூறுங்கள் ஐயா.

பெரியவர் : நடுநிலை தவறி, பிறர் பொருள்மேல் ஆசை கொண்டால், பிறந்த நல்ல குடியின் பெருமையும் கெடும்; பெரும் பழியும் வந்து சேரும் (71)

பூபாலன் : எங்களுக்குத் தண்டனை வாங்கித் தந்து விடுவீர்கள் என்று பயந்தோம்.

பெரியவர் : பூவரசு தீய நோக்கத்தோடு புத்தகத்தை எடுக்க வில்லை. கற்றுப் பயனடையும் நோக்கத்தோடும் நூலைத் திரும்பத்தந்து விடும் நோக்கத்தோடும் எடுத்ததால் பெரிய குற்றம் செய்ததாகக் கருத முடியாது.

பூவரசு : ஐயா, இந்தப் புத்தகம்?

பெரியவர் : இங்கே வைத்துவிடு. நான் உரிய இடத்திற்கு அனுப்பி விடுவேன்.

இருவரும் : நன்றி ஐயா. நாங்கள் புறப்படுகிறோம்.

பெரியவர் : நன்று. சென்று வாருங்கள்.

காட்சி முடிவு



# துன்பத்தில் உதவியவர்களை மறக்கலாமா?



--திருமதி.தாமரை சீனிவாசராவ்

இந்த இதழின் பொறுப்பாசிரியர்.சிறந்த எழுத்தாளர்.பேச்சாளர்.
கம்போடியாவில் செயற்பட்டுவரும் ஆங்கோர்த்
தமிழ்ச் சங்கத்தின் பொருளாளர்.

ஒரு நாள் பாட்டி தன் பெயரன்களுக்குக் கதை சொல்லிக் கொண்டிருந்தார்.எப்போதும் ஆசையாக, நேரம் கிடைக்கும் போதெல்லாம் கதைகள் சொல்வார்.அப்படி ஒரு நாள் பேசிக் கொண்டிருக்கும் போது அன்று அவர்கள் வீட்டிற்கு விருந்தினர்கள் வந்திருந்தார்கள்.அப்போது ஒருவர் மிகப்பெரிய அதிகாரி போலத் தோற்றமளித்தவர் அந்த பாட்டியின் காலில் விழுந்து வணங்கினார்.பாட்டியும் அவரை கட்டிப்பிடித்து கண்ணீர் மல்க வாழ்த்தினார்.இதைப் பார்த்துக் கொண்டிருந்த பெயரன்கள் இருவருக்கும் யார் இவர்.பாட்டி இப்படியாகக் கண் கலங்கி நாம் பார்த்ததில்லையே என்று நினைத்துக் கொண்டிருந்தனர்.பிறகு அவர் சில மணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்.பிறகு விருந்து முடித்துக் கொண்டு விருந்தினர்கள் கிளம்ப இரவு அனைவரும் தூங்கச் சென்றனர்.அப்போது பாட்டியின் செல்ல பெயரன்கள் இருவரும் பாட்டி அவர் ஏன் உங்க காலில் விழுந்தாரு?நீங்க என்ன சொன்னீங்க?ஏன் அழுதீங்க?என்று ஆர்வமுடன் கேட்டனர்.

அப்போது பாட்டி அவரைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.ஆமாப்பா நாம அவங்கக் குடும்பத்திற்கு சில காலம் உதவிகரமாக இருந்தோம்.மிகவும் வறுமையான சூழ்நிலையில் தான் வளர்ந்தாங்க.உங்க அப்பாவப் போலவே நல்லா படிப்பான் அந்த பிள்ளையும். செல்லப் பிள்ளைகளா நான் சொல்லுவதை கவனமாகக் கேளுங்கள்.நம்ம ஊருல தாத்தா கூடத் தான் இவங்க அப்பா வேலை பார்த்தார்அப்போ எல்லாம் மிகவும் குறைந்த வருமானம் தான். ஆனாலும் நாங்க சிக்கனமாக செலவு செய்து,மிகவும் எளிமையாக வாழ்ந்தோம். அதனால உங்க அப்பாவ,அத்தைய,சித்தப்பாவ எல்லோரையும் நல்லா படிக்க வைத்தோம்.அவர்களும் எங்க பேச்சைத் தட்டாத நல்லமுதாக எங்களுக்கு கிடைத்தார்கள்.நல்லா படிச்சாங்க.இன்றைக்கு நல்ல பணியிலும் இருக்கிறார்கள்.இப்போ வந்தாரே அவர் கூட நல்லா படிக்கக் கூடிய தம்பி தான்.ஆனாலும் அவங்க குடும்பம் ரொம்ப ஏழ்மையானது.ஒரு கட்டத்துக்கு மேல அவங்க வீட்டுல படிக்க வேண்டாம்னு நிறுத்திட்டு வேலைக்குப் போக சொல்லிட்டாங்க.ஆனா படிப்புல அதிக ஆர்வம் அவனுக்கு.அதனால நம்ம தாத்தாக்கிட்ட வந்து,அவங்க அப்பாக்கிட்ட படிக்க வைக்க சொல்லச் சொன்னார்.ஆனா அவங்க அப்பா பிடிவாதம் பிடிக்கவே ஒண்ணும் செய்ய முடியல.கொஞ்ச நாளா வேலைக்கும் போக

ஆரம்பிச்சிட்டார்.அப்புறம் நம்ம தாத்தா தான் ஒரு நாள் நல்லா படிக்கிற பையனாச்சே.நாம ஏன் நம்ம பிள்ளைகளோடு அவனயும் சேர்த்துப் படிக்க வைக்க கூடாதுன்னு என் கிட்ட கேட்டார்.நல்லா படிக்கக் கூடியப் பிள்ளைய இப்படி வேலை செய்யறத பார்த்தா மனதுக்கு சங்கடமாக இருக்கு.நீ என்ன நினைக்கிற என்று என்னிடம் தாத்தா கேட்டார்.நானும் நம்ம பிள்ளை கூடவே படிச்சிட்டுப் போகட்டுமே என்று கூறினேன். உங்களுடைய மனதுக்கு நல்லதுன்னு பட்டா செய்யுங்க என்றும் கூறினேன். பிறகு  அவங்க அப்பா கிட்டப் பேசி அவன் படிப்புச் செலவு மொத்தத்தையும் நான் ஏத்துக்கறேன் என்று தாத்தா எற்றுக்கிட்டார்.உனக்கு எந்தத் தாழ்வு மனப்பான்மையும் வேண்டாம்.பின்னாளில் அவன் நல்லா வந்த பிறகு பார்த்துக்கலாம் என்றார். நான் அவனும் படித்து நல்ல வேலைக்குச் சென்றார்.தாத்தா கிட்ட தான் முதல் மாத வருமானத்தையும் கொடுத்தார்.தாத்தா அவ்வளவு பெருமையடைந்தார்.ஆனா தாத்தா என்ன செய்தார் தெரியுமா?அவங்க பெற்றோரிடம் அழைத்துச் சென்று அந்தப் பணத்தைக் கொடுத்து அவர்களை மகிழ்ச்சியடையச் செய்தார்.  இப்போது வெளிநாட்டில் இருந்து திரும்பியதும் நம்மைப் பார்த்துவிட்டுப் போக வந்திருக்கிறார்.உங்க தாத்தா மட்டும் இருந்திருந்தா இப்போ அவ்வளவு ஆனந்தம் அடைந்திருப்பார்.நல்ல பையன் சிறப்பாக இன்னும் நல்ல பெயர் வாங்கணும்.அன்றைக்கு தாத்தா மட்டும் அந்த உதவியை ஒரு நண்பராய்ச் செய்யலனா அந்தக் குடும்பம் இன்று இவ்வளவு நன்மைகளை அடைந்திருக்க முடியாது.அதனால தாத்தா போல நீங்களும் மிக உயர்ந்த குணங்களைப் பெற்று வளரணும் என்று அறிவுரை கூறினார்.

மனதில் மாசில்லாதவர் நட்பை எப்போதும் கைவிடக்கூடாது.துன்பக் காலத்தில் நமக்குத் துணையாக இருந்தவரின் நட்பை எப்போதும் மறத்தலாகாது.நாம் அனைவருமே ஒருவரையொருவர் சார்ந்து வாழும் நிலையையே கொண்டிருக்கிறோம்.
யாருடைய துணையும் இல்லாமல் மனிதரால் வாழவே முடியாது.அதனால் தான் மனிதன் ஒரு சமுதாய விலங்கு என்று அழைக்கப்படுகின்றான்.

வாழ்க்கையில் உயர்வு,தாழ்வுகள்  மாறி மாறி வரும்.அப்படிப்பட்ட சூழ்நிலையில் நமது முன்னேற்றத்திற்கு காரணமாக இருப்பவர்களையோ,அல்லது ஆபத்து நேரங்களில் உதவியவர்களையோ எந்த நிலையிலும் மறக்க கூடாது.

உதவி பெற்றபின் வாழ்க்கை சீரான பிறகு துன்பத்தில் உதவியவர்களை மறக்கக் கூடாது.குறிப்பாக அந்த நட்பை என்றும் போற்றுதலுக்கு உரியதாக நினைக்க வேண்டும் என்று வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள்.

***மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க***

***துன்பத்துள் துப்பாயார் நட்பு.*** **[குறள் எண்:106] செய்ந்நன்றி அறிதல்**

மறைமலை இலக்குவனார் இயற்றிய நூல்கள்- வெளியீடு மணிவாசகர் பதிப்பகம்,சென்னை.




இந்நூலை முற்றும் வாசித்துச் சுவைத்த நான், மறைமலை இலக்குவனாரின் தேமதுர நயம் காட்டும் உரையை அவர் நிகழ்த்திக் கேட்பது போலவே உணர்ந்து மகிழ்ந்தேன். சுருங்கச் சொல்வதென்றால் இந்நூலில் இடம்பெற்றுள்ள உரைகள் ஒவ்வொன்றும், கொற்கை வெண்முத்துக்களைத் தங்கத் தட்டில் கொட்டிவைத்துப் பரிசளித்தது போன்று உணர்ந்தேன்.

முனைவர் மனோன்மணி தேவி முத்து. ஆறு. அண்ணாமலை,
இணைப்பேராசிரியர், சுலுத்தான் இதுரீசு கல்வியியல் பல்கலைக்கழகம்,
மலேசியா.




தமிழ்மண்ணில் நின்று பண்பாட்டுமரபுக் கோணத்தில் தமிழுக்கு உரம் சேர்க்கின்ற பெரும்பணியைக் கடந்த அரைநூற்றாண்டிற்கு மேலாகச் செய்துவருபவர் மறைமலைஇலக்குவனார். இக்காலக்கவிதைகளில் மிகவும் தேர்ச்சியும் பயிற்சியும் கொண்டவர் மறைமலை. தமிழ்த்திறனாய்வாளர்களில் முதன்மை இடத்தைப் பெற்றிருப்பவர். இக்காலப் புலவர்களைப் பாராட்டிப் போற்றுவதில் மறைமலைக்கு நிகர் எவருமிலர்.

ஆசான்மன்னர்மன்னன்மருதை,நல்லுரையாளர்,
மலேசியத்தமிழ்எழுத்தாளர்சங்கம்,கோலாலம்பூர்.




பலரும் அறியாத செய்திகளைத் தொகுத்து வெளியிடப்பட்டிருக்கும் "தடம் பதித்த தமிழ் ஆளுமைகள்" எனும் நூல் தமிழினத்தின் தேவையும் ஒரு வகையில் இது சேவையும் ஆகும். வளர்ந்து வரும் இளைய தலைமுறையினர்தமிழ்நாட்டின் மறுமலர்ச்சி வரலாற்றைப் பின்னோக்கிப் பார்த்து முன்னோக்கிச் செல்ல இந்த நூல் பெரிதும் உதவும். சு. குமணராசன்,மும்பை .




பேராசிரியர் மறைமலை அவர்களின் இந்த நூல் கவிஞர்களுக்குக் கையேடு; ஆய்வாளர்களுக்குப் பார்வை நூல்; வாசகர்களுக்கு வழிகாட்டி; தமிழ்த் திறனாய்வு உலகிற்குப் பொருள் பொதிந்த புதுவரவு.முனைவர் தி.லீலாவதி,மேனாள் தமிழ்த்துறைத்தலைவர்,அரசி மேரி கல்லூரி,சென்னை.